கழக வெளியீடு : ௮௬௦

# இளைஞர்க்கான இன்றமிழ்



பல்லாவரம்
பொதுநிலைக் கழக ஆசிரியர்
**மறைத்திரு சுவாமி வேதாசலம்**
என்னும்
**மறைமலையடிகள்**
இயற்றியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை - 1.

First Edition : June, 1957.

# ILAINGNARKKANA INRAMIZH



*Published by,*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS - I.

*Head Office :*

98, EAST CAR STREET, TIRUNELVELI.

Pages க to க௪௦ printed at T. M. Press Pallavaram & remaining pages printed at Appar Achakam, Madras - 1.

# பதிப்புரை

பள்ளிக்கூடங்களிற் பயிலுஞ் சிறுர்க்கு இனிய எளிய திருத்தமான தனித்தமிழில் எழுதப்பட்ட பாடநூல்கள் இல்லாப பெருங் குறையை நீக்கும்பொருட்டு முதற்கண் 1931-ஆம் ஆண்டில் 'சிறுவர்க்கான செந்தமிழ்' என்னுந் தீந்தமிழக கட்டுரைநூலைப பல்லாவரம் பொதுநிலைக்கழக ஆசிரியர் மறைத்திரு மறைமலையடிகளார் வெளியிட்டார்கள். அடுத்து 'இளைஞர்க்கான இன்றமிழ்' என்னும் இக் கட்டுரைநூலை எழுதத்தொடங்கியதில் 'தென்னை மரம்' என்ற கட்டுரை அரைகுறையாக அச்சிடப் பெற்றதோடு நூல் முற்றுப்பெருமல் நின்று விட்டது.

அடிகளார் தாம இறையடி சேர்வதற்கு முன எழுதிய விருபப ஆவணத்தினமீது சில தடைகள் எழவே அடிகளார் நூல்கள் ஒன்றும ஆறு ஆண்டுகட்கு மேலாக விற்பனைக்குக் கிடைக்கப்பெருமற் போயிற்று. அண்மையில் உயர்நீதி மன்றத்தினர் நல்ல தொரு முடிவு செய்யவே, கழகம அடிகளார் நூல்களை அச்சிட்டு வெளியிட்டு வருகிறது. எனவே, அரைகுறையாக அச்சிடப்பெற்று முடிவு பெருமலிருந்த 'இளைஞர்க்கான இன்றமிழ' என்னும இந்த நூலை அடிகளார் எழுதிவைத்திருந்த 'மக்கள வாழக்கை' என்ற கட்டுரையையுஞ் சேர்த்து வெளியிடுகிறது.

இந்நூற் கட்டுரைகள் பள்ளிமாணவர்கட்கும், மற்றும் தமிழ்ப் பொதுமக்கட்குந் தனித்தமிழ அறிவையும் உலக இயற்கை மக்களியற்கைகளிற் காணப்படும் அருமபொருள உண்மைகள், புதுமைகளைப்பற்றிய மெய்யறிவையுந் தருவன வாகும.

பெற்றோரும பள்ளி ஆசிரியன்மார்களும தம பிள்ளைகள் இதனை வாங்கிக் கற்கும்படி செய்து பயன் அளிப்பாாகளாக !

சென்னை - 1<br>11-6-57 } சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## உள்ளுறை





ஓம்

# இளைஞர்க்கான இன்றமிழ்

## திங்களைத் தொழுதல்

"திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர் தார்ச்சென்னி குளிர்வெண்குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்தலான்."— சிலப்பதிகாரம்

திங்களை வடநூலார் 'சந்திரன்' என்னும் பெயரால் வழங்குவர்; தமிழ்மக்கள் அதனை நிலவு, அம்புலி, பிறை, திங்கள், தண்கதிர், கலையோன், இரவோன், அலவன், அல்லோன், மதி, களங்கன், குரங்கி, முயறகூடு முதலான பலபெயர்களால் வழங்காநிறபர். குளிர்நத ஒளியினை நிலவு எனத் தமிழ்நூலார் கூறக் காண்டலாற், குளிர்நத ஒளியினைத்தருந்திங்களும் நிலவு எனப் பெயர்பெறுவதாயிற்று. அம்புலி என்னுஞ்சொற் சிறுமகாரால் இடப் பட்டதாகும். பிறை எனபது மறைநிலா நாளின்பிற் பிறந்த சிறுதிங்களுக்குப்பெயராக வழங்குகின்றது; புதிது பிறத்தலிற் பிறை யெனப்பட்டது. உயிர்கள் உடம்புகளில் நிலைபெற்றுவளர்தற்குரிய அமிழ்து நிலவொளியிலிருந்து வருதலாலும், அவ்வமிழ்து தமிழிற் 'கள்' எனப் பெயர் பெறுதலாலும், இனிமையெனப் பொருள்தரும் தீம் என் னுஞ் சொற்குறுகித் திம்என நின்று கள் என்னுஞ் சொல் லொடுகூடித் திங்கள் என அதற்குப்பெயராயிறறு. தண் கதிர் என்பது அது குளிர்நதஒளியினைத் தருதலால் வந்த பெயராகும். கலையோன் என்பதிற் கலையென்பது நில வொளியின் ஒருபகுதியைக் குறிக்கும்; நாளுக்கொரு

கலையாக வளர்தலுந் தேய்தலுமாகிய தோற்றந் திங்களிற் காணப்படுதலால் அதற்குக் கலையோன் எனும் பெயர் போந்தது. இராப்பொழுதில் விளங்குதல்பற்றி அஃது இரவோன், அலவன், அல்லோன் எனும் பெயர்களைப் பெற்றன; அலவன், அல்லோன் என்பவற்றின் முதல் நின்ற அல் என்னுஞ்சொல் இராக்காலத்துக்குப் பெயராகும். இனி, அது பதினைந்துநாள் வளர்ந்தும் பதினைந்து நாள் தேய்ந்தும் முப்பதுநாள் கொண்ட ஒருகாலத்தை வரையறுத்தலால் மதியெனப் பெயர்பெறலாயிற்று; மதித்தல் என்பது வரையறுத்தல். இங்ஙனந் திங்களால் வரையறுக்கப்படுதல்பற்றி முப்பதுநாள் கொண்ட ஒருகாலவளவு திங்களெனச்சொல்லப்படும். திங்களை வடநூலார் 'மாசம்' என்பர். இன்னும் அஃது இடையிடையே கறையுடையதுபோற் காணப்படுதலாற் களங்கன் என வழங்கப்படுகின்றது. குரங்கு எனுஞ் சொல் வளைவு எனப் பொருள்படுதலால், வளைந்துதோன்றும் பிறை குரங்கி எனப்பெயர்பெற்றது. இனித் திங்களிற் காணப்படுங் கறை சிறுமகார் கண்களுக்கு முயல்வடிவாகத் தோன்றுதலிலிருந்து அவர் அதனை முயல் உறையுங்கூடாக வழங்க, அதனால் முயற்கூடு என்னும் பெயரும் அதற்கு உளதாயிற்று என்க.

இங்ஙனம் பல்வகைப்பெயர்களானும் வழங்கப்பட்டுத் திகழும் நிலாமண்டிலமானது, வெம்மை மிகுந்த இத் தமிழ்நாட்டிலுள்ளார்க்கு இராக்காலத்தே குளிர்ந்த மெல்லியவொளியினைத் தருதலால், அவர்கள், பகற்காலத்தே விளங்கும் ஞாயிற்றினைக்காட்டிலும், இராக்காலத்தே வெப்பத்தையும் அயர்வையும் நீக்கித் தமக்கு அங்ஙனந் தண்ணொளிதருந் திங்களையே மிகமகிழ்ந்து கொண்டாடா நிற்கின்றனர். மேலும், நிலவொளி இல்லா இராக்காலத்தே

இருள் திணிந்திருக்க, அவ்விருளிற் பாம்பு, தேள், நட்டு வாய்க்காலி, பூரான், செய்யான் முதலான நச்சுயிர்களும்; புலி, கரடி, அரிமா, ஓநாய், நரி முதலான மறவிலங்கு களும்; கள்வர், திருடர், கொலைஞர் முதலான கொடிய மக்களும் இயங்கி, மாந்தருக்கும், மாந்தருக்குப் பல வகையிற்பயன்படும் ஆடு, மாடு, குதிரைமுதலான அற விலங்குகட்கும் பெருந்தீங்கையும் பெருந்துன்பத்தை யும் பொருட்கேடு உயிர்க்கேடுகளையும் விளைவித்தலால், இருள்நிறைந்த இராப்பொழுதைக் காண்டலும் அமை தியான வாழ்க்கைசெலுத்தும் மக்கள் அனைவரும் நெஞ் சந துணுக்குறுகின்றனர். அங்ஙனம் நெஞ்சநதுணுக்குறு மல் துணிவாய் நள்ளிருளில் விளக்குமின்றி வழிநடந்து செல்லும் நாட்டுப்புறத்தாரில் எத்தனைபேர் அரவுதீண்டி யும் புலிகோட்பட்டும் ஐயோ! வீணேசாகின்றனர்! இன்னும் எத்தனைபேர் தேள், நண்டுத்தெறுக்கால் கொட் டியும், பூரான், செய்யான கடித்தும ஆற்றொணுப்பெருந் துன்பம் உழக்கின்றனர்! இவ்வளவுகேட்டுக்குந் துன்பத் திற்கும் ஏதுவான இருள்செறிந்த இராப்பொழுதினைக் கண்டவுடனே மெல்லிய நெஞ்சமுடையார் எல்லாருக் அஞ்சிக்கலங்குதல் ஏற்பதேயாகும். உயிரினருமையும உடம்பினருமையும் இன்பவாழ்க்கையினருமையும் அறி யா விலங்குகளை யொத்த மாக்கள், கரிய இருள் சூழ்ந்த இரவைக்கண்டு கலங்காராயினும், அவ்வருமைகளையும், அவைகளை அருள் கூர்ந்து வழங்கிய ஆண்டவன் நோக் கத்தையுஞ் சிறிதாயினும் உணர்ந்துபார்க்கத்தக்காரெவ ரும் இருளிரவைக்கண்டு மருளாதிரார். சிறிதுணர்வுடை யாரே அவ்வாறுயிர், பெரிதுணர்வுடைய பாவலர், நாவ லர், நல்லிசைப்புலவர், சான்றோர், ஆன்றோர் முதலா யினோரெல்லாரும் பொங்கிருள்செறிந்த கங்குற்காலத்தில்

எங்ஙனம் உளம் அழுங்குவாராதல்வேண்டும்! நுண்ணுணர்வும் மென்மைத்தன்மையும்வாய்ந்த அவரல்லரோ இராப்பொழுதில் எழிலொளிகிளர்ந்து முழுமதிவிளங்குதல்கண்டு வரம்பிலாமகிழ்ச்சி நிரம்பிநிற்றற்குரியார்! நிலவொளியின் அழகை மிகுதியாய் உணர்ந்து இன்புறுத நாட்டாட்களுங் காட்டாட்களுங்கூட, நாட்டிலுங்காட்டிலுந தாம் வழிதெரிந்து செல்லுதற்குந், தீயஉயிர்களால் ஊறுசெய்யப்படாமல் அவைகளை விலகிச்செல்லுதற்கும் நிலாவெளிச்சம் உதவிசெய்தல்பற்றி அதனை மிகவும் விரும்பாநிற்கின்றனர்.

மற்று, அதன் வனப்பையும் பயனையும் அறிந்து இன்புறுகின்ற உணர்வுடையாரோ "நிலவு எப்போது வரும்! நிலவு எப்போதுவரும்!" என்று அதன் வருகையை எதிர்பார்த்தவண்ணமாய் இருக்கின்றார்கள். முழுவிருள் கழிந்த மூன்றாம்நாள் மாலையில் மேல்பாற் செக்கர் வானத்தின்கண்ணே வளைந்த வெள்ளிக்கம்பிபோற் காணப்படும் பிறைக்கொழுந்தினை அவர்கள் எத்துணை ஆவலுடன் உற்றுநோக்கிக் கண்டுதொழுகின்றனர். இருளில் ஏங்கிக்கிடந்த அறிஞரின் கண்களுக்கல்லவோ அச சிறுபிறையின் வெளிசசமும் பெரிதாய்க்காணப்படுகின்றது. புறத்தேயுள்ள இருளைத்துரக்கும் பிறையின்றோற்றம் அகத்தேயுள்ள மலவிருளைத்துரக்கும் இறைவன்றன் அருளொளித்தோற்றத்திற்கு அடையாளமாய் வயங்குகின்றதன்றோ? மாலைப்போதில் மேல்பாற் சிவந்தொளிரும் ஞாயிற்றினை இறைவன் திருமுகமாகவும், அஞ்ஞாயிற்றின் உச்சியிற் கிளர்ந்து வானிற்பரந்து பாய்ந்து விளங்குஞ் செக்கர் ஒளியினை இறைவன் றிருமுடிமேலுள்ள சடைப்பரப்பாகவும், அச்செக்கர்வானிற்றோன்றும் பிறையினை அச்சடைப்பரப்பிற் றங்கும பிறையாகவுங் கருதி

அதனை வழிபட்டுவருந் தமிழ்நாட்டு மேன்மக்களின் உயர்ந்தகருத்துங் கடவுட்கொள்கையும் பெரிதும் வியக்கத்தக்க விழுப்பம்வாய்ந்தனவாய்க் காணப்படுகின்றன வல்லவோ? அழகும் அறிவுங் கெழுமத் தோன்றிய இத் தமிழ்ப் பெருங்கொள்கை வேறெந்தநாட்டவரிலுங் காணப்படுகின்றிலது. தமிழ்நாட்டுமாதர்கள், மணம் ஆகாத தம் பெண்மக்கட்கு விரைவில் மணங்கூடும்பொருட்டு அவர்கள் மூன்றாம்பிறையைத் தொழும்படி செய்யும் வழக்கம் முன்னிருந்தமை, **திருவாதவூரடிகள்** அருளிச்செய்த,

"மைவார் கருங்கண்ணி செங்கரங்கூப்பு மறந்துமற்றப், பொய்வானவரிற் புகாதுதன் பொற்கழற்கே யடியேன், உய்வான் புகவொளிர் தில்லைநின்றோன் சடைமேலதொத்துச, செவ்வானடைந்த பசுங்கதிர் வெள்ளைச சிறுபிறைக்கே" என்னுந **திருச்சிற்றம்பலக் கோவையார்** திருப்பாட்டினால் நன்கு விளங்குகின்றது.

இவ்வாறு இருளிரவுகழிந்த மூன்றாம்நாட் டோன்றுஞ் சிறுபிறையின் வடிவே, பின்வரும் நிலாநாள் இரவுகளை முன்னறிவித்து, இயற்கை யொளித்தோற்றத்தில் இறைவனது விளக்கம் முனைந்துநிற்றலை நினைவில் எழச்செய்து எல்லாரையும் இன்புறுத்துமானால், அடுத்து வரும் நாட்களில் அப்பிறை வரவரவளர்ந்து குளிர்ந்த பேரொளிவீசி இராப்பொழுதை இராப்பொழுதாக்குமகால், அது நம்மனோர்க்கு இன்னும் எத்துணை மிகுந்த மகிழ்ச்சியினைப் பயப்பதாகல்வேண்டும்! மூன்றாம்பிறைக்குப்பின் நாலைந்துநாட் சென்றபின் நீலவானிற் றிகழும் பாதிமதியினைக்கண்டு மகிழ்ந்து, அதன் அழகிய காட்சியினைப் புனைந்துபாடிய நல்லிசைப்புலவரிற் சிலர், அதனை வானக்கடலிற் செல்லும் ஓர் ஓடமாகச் சொல்லியிருக்

கின்றனர்; பின்னுஞ்சிலர் இருள் என்னும் அரக்கனைத் துணித்தற்கு இந்நிலமங்கை உயர ஏந்திய ஒருகொடுவா ளாகவும் அதனைக்கூறினர். பின்னர்ப்போந்த முழுநிலாக் காலத்தே அதன்முழுவட்டப் பேரொளியை நோக்கிக் களிகூர்ந்த பாவாணர்சிலர் அதனை வானெனும் வாவியில் மலர்ந்த ஒரு தூவெண்டாமரை மலரேயெனச் சொற்ற னர்; பாற்கடல் கடைந்தஞான் றெழுந்தவெண்பொற் பாற் குடமே அம்முழுமதி யெனவும், அக்குடத்தினின்று தெறித்துச்சிதறிய பாற்றுளிகளே அதனைசசூழமினிரும் விண்மீன்களெனவும் விளம்பினர்; மற்றுஞ்சிலர் அதனை வான் எனும் நீலப் பட்டாடையின்கீழ் நாலத் தூக்கிய பளிங்கு விளக்கேயெனப் பகர்ந்தனர். இவ்வாறாகப் பாவலரும் நாவலரும் புலவரும் அறிஞரும் நிலவின் அழகிய காட்சியை நோக்கி வியந்து மகிழ்ந்து அதனைப் புனைந்துரைத்த அணிந்துரைகள் அளவிலாதனவாய் விரிந் துகிடக்கின்றன.

இங்ஙனமெல்லாம் பண்டைச் செந்தமிழ்ப்புலவர் திங்களின் அழகிய காட்சியினை வியந்துபாடியதுமன்றி, அதன் தோற்றஒடுக்கங்களால் நிலையில்லா வாழ்க்கை பிணியுடைய மக்கள் அறிந்துகொள்ளவேண்டிய நிலை யான உண்மைகளையும் எடுத்துக்காட்டி அறிவுதெருட்டி யிருக்கின்றனர். திங்களானது கலைநிரம்பிய பதினைந்து நாட்களுக்குப்பிற் சிறிதுசிறிதாகத் தனது விளக்கங் குன் றிக் கடைசியாகத் தானென்றொருமுதல் இல்லாதது போல் மறைந்துபோகின்றது. அதுபோலவே, மக்களில் எத்துணைச்சிறந்த நிலையில் இருந்த அரசருஞ்செல்வரும் பிறருந் தமது செல்வவாழ்க்கையும் உடம்பின் உரமும் வரவரக்குன்றி இறுதியாகத் தாமென்றொருமுதல் இல் லாதவாறாகவே இறந்தொழிந்துபோகின்றனர். இனி,

நள்ளிருள் கழிந்த மூன்றும்நாள் திடுமெனச் சிறுகீற்று வடிவாய்த்தோன்றும் பிறை உருவும் ஒளியும் வரவரப் பெருகிப் பதினைந்தாம்நாட் பெருவிளக்கத்ததாகி அந்நாளில் வானும் நிலனுந் தனது எழிலொளிப்பெருக்கில் முழுகி விளங்கத் தான் நிகரின்றி நிலவுதல்போலத், தமது முன்னைநிலை இன்னதென்றே தாமும் அறியாமற் பிறரும் அறியாமற்சடுதியில் மக்களுக்கு மகவாய்ப்போந்து பிறந்து உடலிலும் உணர்விலுஞ் செல்வத்திலும் வாழ்விலும் மிக மிகச்சிறந்து சிலர் பலர் சிலகாலந் தலைமை செலுத்துகின்றனரல்லரோ? இவ்வாறு திங்களின் தேய்தல் வளர்தல்களிலிருந்து அறியற்பாலனவாகிய மக்கள்வாழ்க்கையின் இயல்புகளை **உறையூர் முதுகண்ணன்சாத்தனார்** என்னும் பழைய நல்லிசைப்புலவர்,

"எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி!
தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்திவந் தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகுமதி, அருள் இலர்
கொடாமை வல்லர் ஆகுக!
கெடாத துப்பின் நின்பகை யெதிர்ந்தோரே" (புறநானூறு, உ௭) என்னுஞ்செய்யுளிற் 'சோழன் நலங்கிள்ளி' என்னும் வேந்தனுக்கு எடுத்தறிவுறுத்தி அதனைப்பாடியிருக்கின்றனர். நிலையாச் செல்வவாழ்க்கையை நிலையெனமருண்டு தம்மைமறந்து இறுமாந்தொழுகுஞ் செல்வரெதிரே உண்மை பேசுதற்கஞ்சி அவரது முகத்தெதிரே இனிக்கப்பேசி, அவர் வீசியெறியுங்காசைப்பெற்று

மகிழும் பிற்றைஞான்றைப்பொய்ப்புலவர்போலாது, முது கண்ணன் சாத்தனார் எத்துணைத் திட்பமான நெஞ்ச முடன், மாவேந்தனான சோழன் நலங்கிள்ளிக்கு, நிலை யில்லா மக்கள்வாழ்க்கையின் தன்மையினையும், அது கொண்டு நிலையுள்ள அறஞ்செய்யும் வண்மையினையுந் திங்களின் இயக்கத்தில் வைத்து நன்கு அறிவுறுத்தி மேலைத் தனிச்செந்தமிழ்ப்பாவினை அருளிச்செய்திருக் கின்றார் பார்மின்!

மேற்காட்டியவாறு திங்கண்மண்டிலமானது இராக் காலத்தே புறத்துப்பரவிய இருளை இரித்துக் கண்ணறி வை விளங்கச்செய்து நமக்கு அழகிய காட்சியையும் அதனாற் பெருகியமகிழ்ச்சியையும் அளித்தல்போலவே, தேய்ந்துவளருந் தனது இயக்கத்தால் அது மக்கள் வாழ்க் கையின் நிலையாமையினையறிவித்து அகத்தே பரவிய ஆணவவிருளைநீக்கி, என்றும் நிலையுதலுடைய இறை வன்றன் பேரின்பப்பெருவாழ்வைப் பெறுதலில் நமக்குக் கருத்து விளங்கி ஈடுபட்டு மேலெழுமாறுஞ்செய்கின்ற தன்றோ? ஆதலால், முழுவெண்டிங்களை இறைவனது அருளொளி முனைத்துவிளங்கும் இடமாகக்கொண்டு, அதனைப் புறத்தே வான்வெளியிலும், நமதகத்தே புருவத் திடைவெளியிலும் புறக்கண் அகக்கண்களால் விளங்கக் கண்டு தொழுதல் இன்றியமையாததொரு கடவுள் வழி பாடாமென்க. இதுபற்றியே நம் பண்டையாசிரியரான **பாரதம்பாடிய பெருந்தேவனார்,**

“பிறைநுதல் வண்ணமாகின்று, அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும்படுமே;
எல்லா உயிர்க்கும் ஏமமாகிய
நீரறவு அறியாக் கரகத்துத்
தாழ்சடைப்பொலிந்த அருந்தவத்தோர்க்கே” என்று

புறநானூற்று முகப்பிற் பிறைமதியை இறைவன் திருமுடிமேல் வைத்துத் தொழுதல்செய்வா ராயினர். அப் பண்டையாசிரியர் வழிவந்தநாமும் அந்நன்னெறிகடைப் பிடித்துத் திங்களைப்போற்றுவாமாக!

## சந்தனமரம்

சந்தனமரமானது பழைய செந்தமிழ் நூல்களிற் சந்து, சாந்தம், ஆரம், மலயம்முதலான பல பெயர்களால் வழங்கப்படுகின்றது. இந்நான்கிலுஞ் சாந்தம் என்னுஞ் சொல்லே ஆண்டு மிகுதியாய் வழங்காநிற்கின்றது. சாந்தம் என்னுஞ்சொல்லே சாந்து, சந்து எனக் கடை குறைந்தும் அதனொடு முதற்குறுகியும் வழங்குகின்றது. சந்து என்பதே பிற்காலத்திற் சிலவெழுத்து மேலுங் கூடிச் சந்தனம் என மிகுதியாய் வழங்குதலைக்காண்கின்றேம். மலயம் என்னுஞ் சொல் தமிழ்நாட்டின் தென்கீழ் உளதாகிய பொதியமலைக்கே சிறப்புப்பெயராக வழங்கி வருதலால், அம்மலைக்கண் நிரம்பிவளருஞ் சந்தனமரமும் 'மலையம்' எனப் பெயர்பெறுவ தாயிற்று. இம்மலயம் என்னும் பண்டைத்தமிழ்ச்சொல்லே சந்தனமரத்திற்குப் பெயராக வடமொழி **அமரநிகண்டு** கூறுதலை உற்றுநோக்குங்காற், சந்தனமரம் தமிழ்நாட்டிற்கே உரித்தாவதென்பதும், அதனாற் சந்தனம் என்னுஞ்சொல்லும் அதற்குப்பெயர்களாக மேலெடுத்துக்காட்டிய வினைப் பழஞ்சொற்கள் நான்குந் தனிச்செந்தமிழ்ச் சொற்களே யாமென்பதும் நன்குபெறப்படாநிற்கும்.

இனிச், சந்தனமரமானது தென்கேயுள்ள பொதிய மலையில் மிகுதியாய் வளர்வதாயிருந்தாலும், மற்றை யிடங்களிலுள்ள மற்றைமலைகளிலும் மலைநாடுகளிலும்

அது சிறுகவாயினும் வளர்கின்றது. இது மிகஉயரமாக வளர்வதன்று. நாரத்தைமரத்தினளவே உயர்வது. இதனுடைய இலைகள் வேற்படையின் முனைத்தகட்டைபோன்ற வடிவமைந்துள்ளன. இதன்மரம் முற்றிக்காழ்ப்புக்கொள்ளுமாஞற், காழ்ப்புக்கொண்டநடுக்கட்டைமிகுந்தமணம் வீசுகின்றது சந்தனப்பூவும் மிகுமணம்வாய்ந்தது. சந்தனமரத்தின் கட்டைகள் மஞ்சள்நிறம் உடையனவும், வெண்மைநிறம் உடையனவும், சிவந்தநிறம் உடையனவும் என மூன்றுதிறமாயிருக்கின்றன.

சந்தனக்கட்டைகளை அரைத்து, அரைத்தெடுத்த தேய்வையைத் தனியாகவும், பனிநீர் இலவங்கம் ஏலம் கருப்பூரம் சாதிக்காய் தக்கோலம் முதலான மணப்பொருள்கள்கூட்டிய கலவையாகவும் எடுத்துக், கட்டியாகவோ கரைத்தகுழம்பாகவோ இறைவன் திருவுருவத்திற்குச்சாத்துகின்றார்கள். சநதனத்தூளையுஞ் சந்தனச்சீவுகளையும், அகில் அகரு பச்சிலை சிச்சிலிக்கிழங்கு கிளியூரற்பட்டைமட்டிப்பால்பாற்சாம்பிராணிமுதலான மணப்பொருள்களுடன் கலந்துஇடித்து, இடித்ததூளைத் திருக்கோயில்களில் இறைவனெதிரே நெருப்பிலிட்டுப் புகைக்கின்றார்கள். இப்புகையானது நறுமணம்பரப்பித் தொழவருவார்க்கு மகிழ்ச்சியளித்து, மனத்தை அமைதிப்படுத்தி, அவரது நினைவையும் ஒருமுகப்படுத்தி அதனை இறைவன் றிருவுருவத்திற்பதித்து, அவரதுநெஞ்சம் அன்பிற்றதும்பி நிற்குமாறுஞ்செய்கின்றது. அதுவேயுமன்றி, மக்கள் நெருக்கடியாலும், அவரதுடம்பினின்று வெளியாகும் வியர்வை நச்சுக்காற்றுகளாலும், நோய்கொண்டாரிடமிருந்து பன்னூறுயிரக்கணக்காய்ப் புறத்தேவரும் நச்சுப்புழுக்களாலுங் கோயில்களின் உள்ளுள்ளகாற்று நஞ்சாகுதலால், அங்கே புகைக்கப்படுஞ் சந்தனம் முத

லான நறுமணப்பண்டங்களின் புகை, அந்நச்சுப்பூச்சி களையும் நச்சுக்காற்றையும் அப்புறப்படுத்திக், கோயிலை யுங் கோயிலினுள் வணங்கவருவாரையுந் தூய்மைசெய்து, அவ்விடத்தை நறுமணங்கமழச்செய்கின்றது.

திருக்கோயில்களின் மட்டுமேயன்றிச், சிறப்புநாட் கொண்டாடுங்கழகங்களிலுந், திருமணம் நடத்தும் இல் லங்களிலும், மக்கள் நறுவியமலர்களும் மலர்மாலைகளும் நிறைத்தலுடன், சந்தனமும் பனிநீருந் தெளித்து அவ் விடங்களை நன்மணங்கமழச்செய்தலால், அங்குக் குழுமு வார்க்கு மனக்களிப்புண்டாதலே யல்லாமல், மனநல் உடல்நலங்களும் உண்டாகாநிற்கின்றன. மன்றலுக்கு (கல்யாணத்திற்கு)த் தமிழில் 'திருமணம்' என்னும் பெயர் அமைந்தது, அஃது அயருங்காலத்து எங்குமுள்ள மணப்பண்டங்கள் எல்லாம் அஃதயருமிடத்து ஒருங்கு வந்து தொகுதல்பற்றியேயாம். இங்ஙனமெல்லாம் உடம் பும் உள்ளமும் ஒருங்கே குளிர்ந்து தூயவாய்த்திகழ்தற் குப் பேருதவிசெய்யும் மணப்பண்டங்களுட் சிறந்ததா கிய சந்தனம் இல்லாத ஒருகொண்டாட்டமுந் திருநா ளுந் தமிழ்நாட்டில் எங்குமே இல்லை. இத்துணை சிறந்த் தாகிய இச்சந்தனம் இயற்கையில் இத்தமிழ்நாட்டுக்குக் கிடைத்தாற்போல வேறுநாடுகளுக்குக் கிடையாமையும் நினைவிற் பதிக்கற்பாற்று.

சந்தனக்கட்டைகளினின்று வடித்தெடுக்கப்படும் நெய் மிகுமணங் கமழ்வது. மகிழ், முல்லை, மருக்கொ ழுந்து, மலைப்பச்சை, வெட்டிவேர் முதலியவைகளி னின்று இறக்கப்படும் மணநெய்யெல்லாஞ் சந்தனநெய் யிற்கலந்தே செய்யப்படுகின்றன: தன்னிற்கலக்கப்படும் இம்மணநெய்களின் மணம் இல்லையாய்ப்போனபின்னுஞ், சந்தனநெய் தன்மணங்குறையாதாய்க் கமழ்வதைப்பார்க்

கலாம். சந்தனநெய் நறுமணங் கமழுந்தன்மை யொன்று மட்டும் உடையதன்று. ஆண் பெண் பாலார்க்குக் குறிகளைப் பற்றிவருங் கொடுநோய்களையுந் தீர்க்குந் திறம் வாய்ந்தது. உப்புப் புளி காரம் நல்லெண்ணெய் கடுகு பாகற்காய் காப்பிவிதை தேயிலை கோக்கோ முதலானவைகளை உணவாகவுங் குடிநீராகவும் அருந்தாமல், இச் சந்தனநெய்யை நாற்பதுநாட் சிறிது சிறிது பருகிச் சிறந்த உணவுப்பண்டங்களையே யருந்திவரிற் குறிவழிவந்த நோய்கொண்டார் அந்நோய் வேரோடு அறப்பெற்றுத், தமதுடம்பு பசும்பொன்னென மிளிரப்பெறுவர். இல்லத்தினுள்ளே முடைநாற்றந் தரும் அழுக்குகளை அகற்றி, இச்சந்தனநெய்யைச் சில துளிகளாக நெருப்பிலிட்டுப் புகைத்தாலும், வெந்நீரிற்கலந்து தெளித்தாலும், அது வீட்டிலுள்ள நச்சுப்பூச்சி நச்சுக்காற்றுகளை அகற்றி உடம்புக்கு நலந்தருவதல்லாமலும், தனது நறுமணத்தால் உள்ளத்திற்கு மகிழ்ச்சி தந்து அதற்குப் பெரியதோர் ஆறுதலையும் பயக்கும்

இத்துணைச்சிறந்த சந்தனமரங்களைப் பண்டைத் தமிழரசர்கள் செல்வர்கள் தம்முடைய மலைகளில் நிரம்ப வைத்துவளர்த்து, அவற்றின் குழம்பைத் தம்முடைய உடம்பில் மிகுதியாய்ப் பூசிவந்தனரென்பதும், அவர் தம் மகளிர்கள் தமது மார்பின்மேற் சந்தனக்குழம்பாற் கோலம் வரைந்துகொள்வரென்பதும், அங்ஙனம் வரையுங்கோலந் 'தொய்யில்' எனப் பெயர் பெறுமென்பதும் பழையசெய்யுட்களால் இனிதுபுலனாகின்றன.

ஈகையிற்சிறந்த **வேள்பாரி** என்னும் மன்னனுக்குரிய 'பறம்பு' என்னும் மலையிடமெங்குஞ் சந்தனக் காடுகளே செறிந்திருந்தனவென்றும், அம்மலைமேல்உறையுங் குறத்திப்பெண்கள் அங்குள்ள சந்தனமரக்கட்டை

களையே விறகாகமாட்டி அடுப்பெரித்தனரென்றும் நல்லி
சைப்புலவரான **கபிலர்** அம்மன்னன்மேற்பாடிய,

“குறத்தி மாட்டிய வறற்கடைக் கொள்ளி
ஆரமாதலின் அம்புகை அயலது
சாரல் வேங்கைப் பூஞ்சினைத்தவழும
பறம்பு பாடினர் அதுவே அறம்பூண்டு
**பாரியும்** பரிசிலர் இரப்பின்
வாரேன் என்னான் அவர்வரை யன்னே” என்னும்
அருந்தமிழ்ச்செய்யுள் (புறநானூறு, க0அ) அறிவித்தல்
காண்க.

பழைய தமிழ்நூல்களில் ‘எருமையூர்’ என்றும்,
இஞ்ஞான்று ‘மைசூர்’ என்றும் வழங்கப்படுவதாகிய நடு
நாட்டின் மலைகளில் ஏராளமாகப் பயிராகுஞ் சந்தனமரங்
களின் கட்டைகள் நனிமணங்கமழ்வனவாயும், அழுத்
தம் வாய்ந்தனவாயும் இருக்கின்றன. இக்கட்டைகளில்
மிக அழகிய தெய்வவுருக்கள் விலங்குகளின் வடிவுகள்.
பூங்கொடிகள் செடிகள் மரங்கள் முதலியவற்றின் காட்சி
கள் பெரிதும் வியக்கத்தக்கவாறாய்க் கம்மர்களாற் செதுக்
கியமைக்கப்படுகின்றன. சந்தனக்கட்டைகளிற் கொத்
திய இவ்வுருக்களில் திறமானவைகளைச் சென்னையி
லுள்ள ‘கண்காட்சி நிலையத்’திற்குச் செல்வாரெல்லாருங்
கண்டு மிகவும் இறும்பூது எய்துகின்றனர்.

இனி, வேனிற்காலத்தில் வெங்கதிர் வெப்பம் முதிர்
ந்து அழற்றும்போது இத்தென்றமிழ்நாட்டவர், சந்தனத்
தை அரைத்து, அவ்வரைப்பைத் தனியாகத் தண்ணீரிற
கலக்கியேனும், மணக்கூட்டுகளுடன்சேர்த்துப் பனிநீரிற்
குழப்பியேனும் உடம்பின்மேற் பூசிக்கொள்ளுகின்றார்
கள். அவ்வாறு செய்யவே, அழற்சியால் உடம்பெங்கும்

நிறைந்த வேர்க்குரு என்னுஞ் சிறுபருக்கள் உதிர்ந்து போகின்றன.

இங்ஙனமெல்லாஞ் சந்தனமரமானது மக்களுக்கு உடல்நல மனநலங்களைத் தருஞ் சிறப்பினதாயிருத்தல் கண்டே, மேல்நாட்டில் உள்ள அரசர்களுஞ் செல்வர்களும் பண்டைக்காலத்திருந்தே இதன்கட்டைகளை இங்கிருந்து தம்முடைய மரக்கலங்களில் வருவித்து, அவற்றைப்பயன்படுத்திவந்தார்கள். இற்றைக்கு மூவாயிர ஆண்டுகளுக்குமுன் மேனாட்டிற் செங்கோல் ஓச்சிய சாலமன் என்னும் வேந்தன், தன்னுடைய கப்பல்களை அடுத்தடுத்து இத்தமிழ்நாட்டிற்குவிடுத்து, இங்கிருந்து ஏற்றுவித்து வருவித்த அருஞ்சரக்குகளிற் சந்தனக்கட்டை அகிற்கட்டைகளுஞ் சொல்லப்பட்டிருத்தலை நினைவுகூர்தல்வேண்டுமென்பது.

## காலதியன் கிரிசெலாள் கதை

மேற்கே, இத்தாலியா தேயத்திற் புகழோங்கிய குறுநிலமன்னர்களில் மிகச்சிறந்தவனாகிய 'காலதியன்' என்பான் ஒருவன் இருந்தனன். அவன் இளைய அகவையினனேனும், மனைவிமக்கள் இல்லாமையினாலும், மணஞ்செய்துகொண்டு மக்களைப்பெற்று இன்புறல்வேண்டும் என்னும் எண்ணம் இல்லாமையினாலுந், தனதுகாலத்தை வேட்டமாடுவதிலும், வல்லூறு என்னும் பறவையைக்கொண்டு பிறபுட்களைப்பிடிப்பதிலுமே கழித்துவந்தான். இவன் மணஞ்செய்துகொள்ளாதிருத்தலை அறிவுடைமையாகச் சிலர் புகழ்ந்துபேசினும், அவனது செங்கோல் நீழற்கீழ் வாழுங் குடிமக்கள் அவன் அவ்வாறிருத்தலை விரும்பாராய், அவன் தனக்குத்தக்காள் ஒருத்தியை

மணங்கூடல் வேண்டுமென்றும், தன்னரசுக்கு உரிமையாக ஒருமகன் இல்லாது அவன் இறத்தல் ஆகாதென்றும், நல்லபெற்றோர்க்கு மகளாய்ப்பிறந்த ஒரு நங்கையைத் தாமேதேடியாராய்ந்து அவற்கு மணம் பொருத்தினால் தமது ஆவல் நிறைவேறுவதுடன் அவற்கும் மிகுந்த மனவமைதி யுண்டாகுமென்றும் வற்புறுத்தித், தமது கருத்துக்கு இணங்குமாறு அவனை வேண்டிக்கேட்டனர்.

அவரது வேண்டுகோளைச் செவிமடுத்த அம்மன்னன்: "அருமைநேயர்காள், யான் தலையிடுதற்கு விரும்பாத ஒருநிகழ்ச்சியில் என்னைத் தலையிடுமாறு நெருக்குகின்றீர்கள். ஆனால், ஓராண்மகனோடு அவனிருக்கும் நிலைமைகட்கெல்லாம் இசைந்து அவனோடு ஒத்துவாழ்க்கைசெலுத்தத்தக்க ஒருபெண்மகள் கிடைத்தல் அரிதரிது. கணவனொடு மாறுகொண்டு நடக்கும் மனைவிமாரையே எங்குந் தொகைதொகையாய்க் காண்கின்றோம்! உலகத்திலுள்ள எல்லாத்துன்பங்களினுங்கொடியது, தனக்கு இசையாத ஒருமனைவியுடன் கூடியிருக்கப்பெறுதலேயாம்.

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்"

"இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை"

தாய்தந்தையரின் நலத்தைக்கண்டு, நல்ல ஒருமாதைத் தேடித்தருவேம் என நீங்கள் பகர்வதும் பொருத்தமாயில்லை; ஏனென்றால், நீங்களாவது யாவது பெற்றோர்களின் மறைந்த மனவியற்கையைக் காண்டல் இயலாது. அல்லதவர்களின் அவ்வியற்கையை நாம் அளந்தறிதல்கூடுமென்றே வைத்துக்கொண்டாலும், புதல்வியர் தம் தாய்தந்தையரின் இயற்கை தங்கட் பதியப்பெறாதிருத்தலையும், அவர் தத்தம் இயற்கைப்படியே யொழுகுதலை

யும், ஆங்காங்கு ஒவ்வொருநாளுங் காணப்பெறுகின்ற னம் அல்லமோ?

"என்றாலும், மணவாழ்க்கை என்னுஞ் சங்கிலியால் யான் பிணிக்கப்பெறுதல்வேண்டுமென நீங்கள் பெரிது விரும்புதலால், யான் நுங்களது வேண்டுகோளுக்கு இணங்குதல்செய்கின்றேன். ஆயினும், இந்நிகழ்ச்சியில் நாம் எதிர்பார்த்தவண்ணம் நேராதாயின், அதுபற்றிக் குறை சொல்லப்படவேண்டியவர் என்னைத்தவிரப் பிறர் உளராகாமைப்பொருட்டு, யான் என்னுடைய கண்களைக்கொண்டே ஒருமணமகளைத் தேடிப் பெறல்வேண்டுமன்றிப், பிறருடைய கண்களைக்கொண்டு அவளைத்தேடியடைதல்கூடாது. ஈதெனதுஉறுதி. நல்லது, யான்தேடிப் பெற்ற மனையாளை நீங்கள் பெருமைப்படுத்தி நன்குமதித்தல்வேண்டும். அங்ஙனஞ்செய்திலீராயின், அது நுங்களுக்கொரு பெருங் குறைபாடாவதுமன்றி, எண்ணம் இல்லாதிருந்தும் நுங்கள்வேண்டுகோட்படி ஒருமங்கையை மணந்துகொண்ட எனக்கும் ஒருபெருவருத்தத்தினை விளைத்தீராவீர்!" என அவர்கட்கு விடைமொழி கூறினன்.

அச்சொற்கேட்ட அக்குடிமக்கள், எங்ஙனமேனுந் தம்மன்னன் மணஞ்செய்துகொண்டால் அதுவே தமக்கு மகிழ்ச்சியளிப்பதாகும் என்றனர்.

பின்னர்ச் சிலநாட்கள்சென்றன. சென்றபின், அம்மன்னனது மாளிகைக்கு நெடுந்தொலைவில்லாததான ஒரு சிற்றூரின்கண் உயிர்வாழ்ந்த ஓர் ஏழைக்குடியானவன்றன் மகள் புறத்தே அழகிலும் அகத்தே மனநலங்களிலும் மிகச்சிறந்தவளாக அம்மன்னனுக்குக் காணப்பட்டாள்; அவளுடன் தான் இனிதுவாழக்கூடுமென்பது அவனுக்குத்தோன்றியது. ஆகவே, அம்மன்னன் மேலும் ஆராய்

தலையொழித்து, அவளை மணஞ்செய்துகொள்ளும் ஒரே தீர்மானத்துடன், அவள் தந்தையுடன் சூழ்ந்து, அவனை அதற்கு உடன்படுத்திக்கொண்டனன். அதன்பின் அவன் தான் அரசுசெலுத்தும் நாட்டின்கண்உள்ள குடிமக்களையுஞ்செல்வர்களையுந் தனது அரண்மனைக்கு ஒருங்குவருவித்து, மணஞ்செய்தற்குத் தக்கதொருநாளையும் அதற்குரிய எல்லாச்சிறப்புகளையுஞ் செய்துவைத்து, மணமகளைக்கொணர்தற்கு வந்தவர்கள் எல்லாருடனுங் குதிரை யூர்ந்து அவளிருக்குஞ் சிற்றூர்க்குச் சென்றான். சென்று அவள் இருக்குங் குடிலில் அவள் தந்தையைக் காண்டற்குத் தான் ஊர்ந்துபோந்த புரவியினின்றும் அவன் இழிந்தபொழுது, அம்மங்கைதான் தண்ணீர் முகக்கச்சென்ற கிணற்றினின்றுந் தண்ணீர்க்குடங்கொண்டு மற்றைப்பெண்களுடன் திரும்பி அக்குடிலுக்கு விரைந்து வருதலைக்கண்டான். கண்டதும் அவன் அவளை நோக்கிக், "கிரிசெலா, நின்தந்தை எங்குளார்?" எனவினவினன். அதற்கு அவள் நாணத்துடனும் பணிவுடனும், "அருள்மிக்க அரசர்பெருமானே, அவர் வீட்டிலேதான் இருக்கின்றார்" எனவிடைபகர்ந்தனள்.

அதுகேட்டு அம்மன்னன் தன்னுடன் போந்தவர்களை அக்குடில்வாயிலில் நிறுத்திக், தான்மட்டும் அகனுட்சென்று, அங்கிருந்த அவடன்றந்தையை நோக்கி, "ஐய, நுங்கள் முன்னிலையிலும் என்னுடன்போந்தார் முன்னிலையிலும் நுங்கள் புதல்வியை யான் சில கேட்டுத் தெளியவேண்டும்" எனப்புகன்று, அவளை அக்குடில்வாயிற்புறத்தே கொணர்ந்து நிறுத்தி, அங்கு நாணமும் அச்சமும்மிக ஒருபக்கத்தொதுங்கிநின்ற அம்மடந்தையைப் பார்த்து, "அழகிய கிரிசெலா, யான் நின்னை என் மனைவியாகச்செய்துகொண்டால், யான் சொல்வனசெய்வன

வாகிய எல்லாவற்றிலும் நீ நின்னாற்கூடியமட்டும் யான் உவக்கும்படி நடந்துகொள்வையா? இன்னும், நீ அமைதியாகவும், பணிவாகவும், பொறுமையாகவும் ஒழுகுவையா?” என்றுகேட்டான். அதற்கவள், “பெருமானே, இறைவனது அருளுதவியால், யான் தங்கள் கருத்தின்படியே நடப்பேன்” என மறுமொழி நுவன்றனள்

அதன்பின் அம்மன்னன் அவளதுகையை மெல்லெனத் தன்கையாற்பற்றி அவளை அக்குடிலினுட்செலுத்தி, அவள் அணிந்திருந்த இழிந்தஆடைகளைக் களைவித்துத், தான் கொணர்ந்த உயர்ந்தபொற்சரிகைமிடைந்த பன்னிறப்பட்டாடைகளையும் மதிப்பரியமணிக்கலன்களையும் அணிவித்து, அவளது கரிய செழுங்கூந்தலைப் பின்னிப் பிடர்ப்புறத்திடுவித்து, அவளது சென்னிமிசைப்பன்மணி குயிற்றிய பொன்முடியொன்றைத் தானே தன்கைகளாற் கவித்தனன். அதன்பின் அவன் அவளை அக்குடில்வாயிற் புறத்தே கொணர்ந்து நிறுத்தித், தன்னுடன் போந்தார் அனைவரும் வியந்து பலேசக, அவளை நோக்கி, “கிரிசெலா, நீ என்னை நின்கணவனாக ஏற்றுக்கொள்வையா?” என வினவினான். அவள் உடனே நாணத்துடன் தலைகவிழ்ந்தவளாய், “ஆம் எம்பெருமானே, மிகவும் ஏழையேனை என்னைத் தாங்கள் தங்கள் மனையாளாக ஏற்றுக்கொள்வீர்களானால்” என்று விடைபகர்ந்தனள். அதுகேட்டு அம்மன்னன், “நல்லது, கிரிசெலா, யான் வைக்கும் இத்தூயமுத்தத்தால் நின்னை என்மனைவியாக உறுதிப்படுத்துகின்றேன்.” என நுவன்றுகொண்டே அவளுடைய சிவந்த கொவ்வை இதழ்களின்மேல் முத்தம் இட்டனன். அதன்பின் அவளை அவன் பால்போலுந் தூவெண்ணிறத்ததாகிய ஒருபட்டக்குதிரைமேல் ஏற்றி,

அங்கிருந்து சிறப்பாகத் தனது அரண்மனைக்குக் கொண்டு வந்தனன்.

பின்னர் அவன் அவளை மணந்துகொண்ட திருமண விழவானது, அவளை அவன் ஓர் அரசன்மகளாக நினைத்துச்செய்த முறைபாகவே மிக்கசிறப்புடன் நிறைவேறியது. அதற்குத்தக்கபடி அப்பெண்மணியும் ஓர் அரிய பிறவியேயாவள்; உடம்பு நலத்தாலுங் குணநலத்தாலும் அவள் ஏதொருகுறைபாடுமின்றித் திகழ்ந்தனள்; அழகிலோ அவள் நிகரற்றவள்; குணத்திலோ மனத்துக்கினியவள், அருளுடையவள், நயம்மிகுந்தவள். இருந்தவாற்றால், அவளை ஒரு நாட்டுப்புறத்து இடையன் மகளாகக் கூறுவதுகூடாதாய்ச், சிறந்த ஒரு செல்வரின் புதல்வியாகக் கூறுவதே பொருத்தமாகத்தோன்றியது. அவளை முன் னறிந்தவர்கள்கூட இப்போதவள் அடைந்த நிலைமையினைக்கண்டு இறும்பூதுற்றனர். இன்னும், அவள் தன் கணவனுக்கு மிகவுங் கீழ்ப்படிந்து ஒழுகுபவளாயுந், தனக்குரிய எல்லாக்கடமைகளையுஞ் செய்வதில் ஆர்வம் மிக்கவளாயும், எவர்க்கும் எவ்வாற்றானுஞ் சினத்தைத யுண்டாக்காமற் பொறுமையுடன் நடப்பவளாயும் இருந்தமையால், அவள் கணவன் மனநிறைவு மிக்கவனாய் இம் மண்ணுலகத்திற் றானொருவனே நல்வினையிற் சிறந்தவனென எண்ணினான்.

அதற்கேற்பவே, கிரிசெலாளுந் தன் கணவனது அரசின்கீழ்வாழுங் குடிமக்களிடத்தில் அளியும் அருளுங் காட்டி நடந்தனள். அவளைப்பார்த்துப் பழகினவர்கள் எல்லாரும், அவண்மேற் பேரன்புபாராட்டி வந்ததுமன்றி, மனமார அவளைப் பெரிது பெருமைப்படுத்தியும், அவளுடைய நலத்தையும் பெருந்தன்மையையும் நீண்ட செல்வவாழ்க்கையையும் வேண்டி இறைவனைத்தொழு

தும் வந்தனர். மேலும், அவடன் கணவனை காலதிய மன்னனைப்பற்றி அக்குடிமக்கள் தாம் முன்னே கொண்டிருந்த எண்ணத்தையும் மாற்றிக்கொள்ள வேண்டியவராயினர். அவன் தனக்கியைந்த மனையாளைத் தேடித் தெரிந்தெடுத்த நுட்பஅறிவின் மாண்பினையும், அவனையன்றி இவ்வுலகத்தில் வேறெவரும் அங்ஙனம் அதுகாறுஞ் செய்யமாட்டாமையினையும், ஓர் ஏழை நாட்டுப்புறக் குடிசை வீட்டினுட்பிறந்து வளர்ந்தமையால் உண்டான பரும்படியான வழக்கவொழுக்கங்களின்கீழ் மறைபட்டிருந்த அவடன் மதிப்பற்ற கற்பொழுக்கமாண்பினையும் பிறநலங்களையும் ஏனையோர் தெரிந்து அளத்தல் இயலாமையினையும் அவர்கள் எடுத்தெடுத்துப்பேசி வியந்து மகிழ்ந்தனர். சிறிதுகாலத்திலெல்லாம் அந்நாட்டவரேயன்றி அக்கம்பக்கத்துள்ள ஊரவர்களும், அம்மாதரசியின் அரியவாழ்க்கை நலத்தையுந் தெய்வநேயத்தையும் அறநெஞ்சத்தையும் மற்றை நற்செய்கைகளையுமேயன்றி வேறெதனையும் பேசாராயினர். இதனால், இந்நங்கையை மணம்புரிதற்குமுன் அம்மன்னன்மேற் கொண்டிருந்த பொருந்தாநடைகளைபற்றியபேச்சும்மறைந்துபோயது

இங்ஙனம் மணவாழ்க்கையிற்புகுந்த அவ்வரசிக்கும் அரசற்கும் முதலில் ஒருபெண்மகவு பிறந்தது அதன்பின் நாலைந்து ஆண்டுகள் கழித்து அவ்வரசி கருக்கொண்டு தன் கொழுநன பெரிது உவக்கும்படி ஓர் ஆண்மகவினையும் ஈன்றனள். அந்நிகழ்ச்சிக்குப்பின் அவ்வரசனுள்ளத்திற் புதுமையான ஓரெண்ணந்தோன்றலாயிற்று அதாவது: தன்னழகிய மனையாளின் மனப்பொறுமையினை, ஒரு நீண்டகாலப்பயிற்சியினாலுந் தாங்கமுடியாச் சிலநடைகளாலும் ஆராய்ந்து கண்டறியவேண்டுமென்பதேயாம். முதன்முதற் கொடுஞ்சொற்களால் அவட்கு

வருத்தத்தை விளைவிக்கமுயன்றும், அதன்பிற் கடும்பார் வையாலுஞ் சுளித்தமுகத்தாலும் அதனை மிகுதிப்படுத்தியும் அவ்வளவில் அமைதிபெறாமல், தான் இழிபிறப்பும் இழிந்தபழக்கமும் உடைய ஒருத்தியைமணந்துகொண்டு அவளால் இரவலரையொத்த மக்களைப் பெறப்போவது பற்றியும் முன்னமே பிறந்துள்ள தன்மகளைப்பற்றியும் தன் குடிமக்கள் முறுமுறுத்துத் தன்மேல் அருவருப்புறுகின்றார்களெனவுங் கூறினான். அச்சொற்கேட்ட கிரிசெலாள், சிறிதுந் தன்முகம் வேறுபடாமலுந் தன் தோற்றத்தில் ஏதுங் குணமாற்றங் காணப்படாமலுந் தன் தலைவனை நோக்கி,

"மாட்சிமை தங்கிய என் அருட்பெருமானே, தங்களுடைய மேன்மைக்கும் மனநலத்திற்குந்தகத், தாங்கள் என்னை எவ்வாறு செய்யவேண்டினாலும் அவ்வாறு செய்யலாம்; ஏனென்றால், யான் தங்கள் குடிமக்களிற் கடைப்பட்டாரினுங் கடைப்பட்டவள் ஆவேன் என்பதுந், தாங்கள் என்னை உயர்த்தவிரும்பிய உயர்நிலைக்கு யான் தகுதியில்லாதவள் என்பதும் யான் நன்கறிவேன்." எனமொழிந்தனள்.

இவ்விடைமொழியானது அம்மன்னன் கொண்ட நோக்கத்திற்கு ஏற்றதாயிருந்தது. ஏனென்றால், அவன் தான் அவளை உயர்த்திவைத்த உயர்நிலையானது, இறுமாப்பினையேனும் பிறரை இழிவாகக் கருதுங்குணத்தையேனும் பெருமையாற் பேசாதிருக்கும் இயல்பையேனும் அவள்பால் வருவிக்கவில்லை யென்பதை அதனால் அவன் நன்குணர்ந்து கொண்டான். அவள் வயிற்றிற் பெண் பிறந்ததுகண்டு தம்குடிமக்கள் மனந்தாங்கவில்லையென்று அவன் அங்ஙனம் அவளுக்குத் தெளிவாகவுந் திறப்பாகவுஞ்சொல்லிய சிறிதுகாலத்திலெல்லாம், அவன் தன்

ஏவலாள் ஒருவனை அவள்பால் விடுத்தனன். அவ்வே வலன் மனக்கலக்கமுந் துன்பமுந் துயரமும் உற்றவனாய் அம்மாதரசிபாற்போந்து, "பெருமாட்டி, யான் என்னுயிரை இழவாதிருக்கவேண்டுமானல், எம்பெருமான் கடுமையாய் இட்டகட்டளைப்படி யான் தங்கள் இளம்புதல்வியை எடுத்துச்சென்று—" எனப்புகன்று, அவ்வளவில் தன் பேச்சை நிறுத்திக்கொண்டான். அப்பெருமாட்டி அச்சொற்களைக்கேட்டதும், அவனது சுளித்தமுகப்பார்வையினையுந், தன் கணவன் தனக்கு முன்னே சொன்னதையும் நோக்கிநினைந்து, அவன் தன் பெண்மகவினை எடுத்துச்சென்று கொலைபுரியும்படி தன் வேலைக்காரனை ஏவினனென்வே எண்ணினுள். எண்ணித், தொட்டிலிற் கிடந்த மகவினை உடனே யெடுத்து முத்தமிட்டு அதற்கு இறைவன் அருள் உண்டாகுக வென்று வாழ்த்தித், தாய்க்கு இயல்பாக உள்ள அன்பினால் அவளது நெஞ்சந் துடித்ததாயினும் தன்முகத்திலே ஏதொரு வேறுபாடுங் காட்டாதவளாய், அதனை அவ்வேவலன் கையில் மெல்லெனவைத்து, "இதோ, நண்பனே, இம்மகவினை எடுத்துச்செல்! நின்மன்னன் நினக்குக் கற்பித்தபடி இதனைச் செய்! ஆனாலும், மன்னன் விரும்பினாலன்றிக் கொடிய விலங்குகளும் பறவைகளும் இதனைத்தின்னும்படி காட்டுப்பாங்கான இடத்தில் இதனைக் கிடத்திவிடாதே!" எனப்புகன்றனள்.

பின்னர், அப்பிள்ளையொடுசென்ற அப்பணியாளன் தன் மன்னன்பாற்சென்று, அரசிமொழிந்ததை விளம்ப, அவன் அவளது ஒப்பற்றமனத்திட்பத்தையறிந்துமிகவும் வியப்படைந்தான். அப்பால் அவ்வரசன் அம்மகவினைப் பொலோனு என்னும் ஊரில் தனக்கு உறவினளாயுள்ள ஒருசிறந்தபெருமாட்டிபால் விடுத்து, அஃது இன்னார்க்கு

உரியபிள்ளையென்பதைத் தெரிவியாமல், அதனை உயர்ந்த முறையிற் கருத்தாய் வளர்த்துக் கல்விபயிற்றிவருமாறு மட்டும் அவளை வேண்டிக்கொண்டான்.

பிறகு சிறிதுகாலஞ்சென்றபின், அவ்வரசி பின்னுங் கருக்கொண்டு ஓர் ஆண்மகவினை ஈன்றாள். அவ்வழகிய மகனைக் கண்டு அரசன் இதற்குமுன் அடையாத ஒரு பெருங்களிப்பினை உள்ளுக்குள் அடைந்தனனாயினும், இதுவரையில் தான் அவளது பொறுமையினை அறியச் செய்ததில் அமைதிபெறானாய், முன்னையினுங் கொடிய சொற்களாலுங் கடியபார்வையாலுங் காரமான தன்கருத்தை அறிவிப்பான் புகுந்து, "கிரிசெலா, இவ்வழகிய ஆண்பிள்ளையை ஈன்றமையால் நீ என்னைச் சாலவும் உவப்பித்தனையாயினும், என் குடிமக்கள் இப்பிள்ளை பிறந்ததையறிந்து மனம் உவவாதவர்களாய், எனது சிறந்த அரசபரம்பரையில்வராமல் ஓர் ஏழைக்குடியானவன் மரபில்வந்த ஒருவன், யான் காலமானபின், தமக்கு அரசனாயுந் தலைவனாயும் வரப்போவதைப்பற்றி மனஎரிவுடன் எங்கும் பழிதூற்றாநிற்கின்றனர். அதனால் அவர்கள் என்னை இவ்வரசியலினின்றுந் துரத்தி விடுவார்களோ வெனநினைந்துப் அச்சமுறுகின்றேன். அங்ஙனம் அவர்கள் செய்யாமைப் பொருட்டு, இந்தப்பிள்ளையையும் நான் ஒழித்துவிடல் வேண்டும்! நின்னையும் இங்கிருந்து அகற்றிவிட்டு, என் குடிமக்களின் உளத்திற்கிசைந்த வேறொருமனையாளையும் யான் மணந்துகொள்ளல் வேண்டும்" என்று நெஞ்சிற் சிறிதும் ஈரமின்றிக்கூறினான்.

இவ் வன்சொற்களைச செவியேற்ற கிரிசெலாள் நைந்துவருந்தும் உள்ளத்தினளாயினும் பொறுமையின் மாறாதவளாய், "மாட்சிமைநிறைந்த அருட்பெருமானே, தங்களது அரசவுள்ளத்திற்கு எஃது உகந்ததோ அதனை

யேசெய்து மனவமைதிபெறுங்கள்! என்னைப்பெருமைப் படுத்தவேண்டுமென்று ஒருகாலும் நினையாதேயுங்கள்! தங்களுள்ளத்திற்கு இசைந்தது தவிர, வேறேதும் யான் விரும்பத்தக்கதும் அன்று உயர்ந்ததும் அன்று!" என விளம்பினள். அதன்பிற் சிலநாட்சென்றபிறகு அம்மன் னர்பிரான் முன்னே தன் பெண்மகவுக்குச் செய்தபடி யே, இப்போது தன் ஆண்மகவுக்கும் அதே ஏவலாளனை விடுத்து, அதனைக் கொலை செய்வித்தற்பொருட்டுப் போக் கினன்போல் வெளிக்குக்காட்டி, அதனைப் பொலோனு நகருக்குவிடுத்து அங்கே அது தன் அழகிய அக்கா ளுடன் வளருமாறு திட்டம்பண்ணினன். அப்பெரு மாட்டியோ முன்னே தன் முதற்பிள்ளையைக் கொடுத்த போது எங்ஙனம் ஏதொருமனக்குறையுங் காட்டாதிருந் தனளோ அங்ஙனமே இப்போதும் இருத்தல் கண்டு, அவள் கணவற்குண்டான வியப்பு இவ்வளவென அள விடற்பாலதன்று; அவன், அவளைப்போன்ற மற்றொருத்தி இவ்வுலகில்எங்குமிருத்தல் இயலாதென்று எண்ணினன். தனது சூதான சூழ்ச்சியைச் செய்யாதிருந்தால், தன மனையாள் தன் பிள்ளைகள்பால் எவ்வளவு அன்புபூண்டு அவைகளைத் தன் இன்னுயிரெனக்கருதி எவ்வளவு கருத் தாயோம்பி வளர்த்திருப்பள் என்பதை அவன் அவளது நெஞ்சத்தியற்கையை உற்றுநோக்கி யாராயும்முகத்தாற் கண்டுகொண்டான். மற்று, அங்ஙனம் ஆராய்ந்து கண் டிலனேல், அவள் உலகியன் முறைக்கு அன்புடையவள் போல் நடப்பவளேயன்றி உள்ளபடியே தன் மக்கள் மாட்டு அன்புடையவள் அல்லளென்றும், எத்தனை பிள் ளைகள் தனக்குப்பிறந்தாலும் அத்தனை பிள்ளைகளேயுந், தான் வேண்டியபடி, அவள் தன்னினின்றும் அங்ஙனம் எளிதாக அகற்றிவிடத்தக்கவளே யென்றும் அவன் அவ

ளைப் பிழையாக எண்ணியிருக்கக்கூடும்; ஆனால், அவளைத் தான் ஆராய்ந்துபார்த்தமட்டில், அவள் அன்பிற் கனிந்த தாயின் இயற்கை யுடையவளே யென்றும், எத்துணைக் கடுமையான இடிப்புகளையும் பொறுக்கவல்லவளேயென்றும் அவன் நன்குணர்ந்துகொண்டான்.

இனி, அம்மன்னன்றன் குடிமக்களோ, அவன் தன் பிள்ளைகளைக் கொன்று விடும்படி செய்தனனெனவே நம்பி, அவனை மிகவுங்கொடியனாக நினைந்து அவன்மேற் பெரும்பழிகூறினர்; ஆனால், அவன்றன் மனையாண்மேலோ பெரிதும் இரங்கினர். தன்பிள்ளைகள் இறந்துபோனதற்காகத் தன்னைக்கண்டு புலம்பவந்த பெண்மணிகட்கெல்லாம், அப்பெருமாட்டி, தன்பிள்ளைகளைப் பெற்ற தந்தைக்குத் தன்மக்கள் உகந்தவர்களாதலைவிடத் தனக்கு மிக உகந்தவர்கள் அல்லரே! எனப் பகர்ந்து அவர்களை ஆறுதல்பெறச்செய்தனள்.

இனி, இப்பிள்ளைகள் பிறந்த சில ஆண்டுகட்குப் பிறகு, அம்மன்னன் தன் மனைவி கிரிசெலாளின் மனப் பொறுமையினைக் கடைசியாக ஆராய்ந்துபார்த்து விடுதற்குத் தன்னுள்ளே தீர்மானஞ்செய்து, தன்பக்கத்தே யிருந்தவர்களைநோக்கி, இனிமேல் தான் கிரிசெலாளைத் தன் மனைவியாக வைத்துக்கொள்ளுதல் இயலாதென்றும், அவளைத் தான் மணந்துகொண்டகாலத்தில் தான் மயங்கிய மூளையுள்ள இளைஞனாயிருந்தபடியால் அங்ஙனந் தான் செய்தது மடமைச்செயலாய் முடிந்ததென்றுந் திறந்து சொன்னான். அதன்பின், தன் குருவுக்குத் தெரிவித்துக், கிரிசெலாளை நீக்கிவிட்டு, வேறொருமனையாளை மணந்துகொள்ள அவரது விடையைப் பெறுதற்குத் தான் முனைவதாகவுங்கூறினான். அதனைக்கேட்ட அவர்கள் அவ்வாறு

செய்தல் அடாதெனத்தடுத்தும், அவன் அங்ஙனஞ் செய்துதான் ஆகவேண்டுமென அழுத்திக்கூறினன்.

அச்செய்தியைக் கேட்டுத், தான் மறுபடியுந் தன் ஏழைத்தந்தையின் குடிலுக்குங் காணியாட்சிக்குந் திரும் பிச்செல்லவேண்டி யிருத்தலேயும், அங்கே தன்னிளமைக் காலத்திற்போலத் தான் மீண்டும் பழைய ஆடுமேய்க்குந் தொழிலை மேற்கொள்ளவேண்டி யிருத்தலையும், அத னொடு தான் காதலித்துப் பேணிய கணவனொடு வே றொருத்தி மணங்கூடி இன்பம்நுகரப் போவதையும் உணர்ந்து, அருமைப் பெண்மணிகாள்! அம்மாதரசி யின் மனப்பொறுமையானது எவ்வளவு கொடுமையான ஆராய்ச்சிக்கு உள்ளாக்கப்பட் டிருக்கவேண்டும் என் பதை நன்கு நினைத்துப்பாருங்கள்! அவ்வாறிருந்தும், அவள் இதற்கு முன்னே தனக்குநேர்ந்த இடுக்கண்களை யெல்லாந், தோலாத மெய்யொழுக்க மனத்திட்பத்தால் மிதித்து மேல்நின்றதுபோலவே, இப்போதும் இதனைக் கலங்காமுகத்துடனும் நடையுடனுந் தாங்கிக்கொள்ளத் தனதுள்ளத்தை அசையாமல் நிலைநிறுத்திக்கொண்டாள்.

இனி, அரசன் தான்கொண்ட கருத்தை நிறை வேற்றிக் கொள்ளுதற்கென்று குறிப்பிட்ட ஒருநாளில், அவன்றன் குருவினிடமிருந்து வந்தாற்போற் போலிக் கடிதங்கள்வந்தன. அவைகளை அவன் தன் குடிமக்க ளின் முன்னிலையிற் படிக்கும்படி செய்வித்துத், தன்குரு கிரிசெலாளைத் தான் நீக்கிவிட்டு வேறொரு நங்கையை மணந்துகொள்ள ஒருப்பட்டு விடைகொடுத்ததனை அவர் களெல்லார்க்கும் அறிவித்தனன். அதன்பின் உடனே அவன் கிரிசெலாளைத் தன் குடிமக்களின் எதிரே வரு வித்துவைத்து அவளைநோக்கிக் கூறுவான்: "பெண்ணே, என் குருவினிடமிருந்து வந்த விடையானது, நின்னை

விலக்கிவிட்டு, யான் வேறொரு பெண்ணை மணந்துகொள் ளும்படி கற்பிக்கின்றது. என் முன்னோர்களெல்லாரும் உயர்குடிப்பிறப்பினராயும் இந்நாட்டுக்குத் தலைவர்களா யும் இருந்தமையாலும், நீ ஓர் ஏழைக்குடிமகளாய் இருப் பதனாலும், யான் நின்னை மணந்துகொண்டதனால் என் முன்னோர் பிறப்பும் என் பிறப்பும் இழிபடைதலாலும், இனி யான் நின்னை என் மனைவியாக வைத்திருக்கவிரும்ப வில்லை; ஆதலால், நீ கொணர்ந்த பரிசத்தொடு நின்னைத் திரும்ப நின் தகப்பன் வீட்டுக்குப் போக்கிவிட்டு, என் உயர்குடிப்பிறப்புக்கு ஏற்றவளாயும், அதனால் என்குடி மக்கள் உள்ளத்திற்கு இசைந்தவளாயுங் காணப்படும் மற்றொருமாதை யான் மனையாளாக மணந்துகொள்ள ஏற்பாடு செய்துகொண்டிருக்கின்றேன்.''

இச்சொற்களைக்கேட்ட கிரிசெலாள், தன் கண் களிற்றதும்பியநீரைப்பெருவருத்தத்தொடுதடைசெய்து கொண்டு, மற்றைப்பெண்மக்களின் இயற்கைக்கு வேறு னவளாய், ''மாட்சிமிக்க அரசே, யான் அத்துணைப்பகுத் தறிவு வாயாதவள் அல்லேன்; எனது தாழ்ந்த இழிந்த குடிப்பிறப்பின்நிலைமையானது, தங்களது உயர்ந்த சிறந்த குடிப்பிறப்பின் நிலைமைக்கு எவ்வாற்றானும் ஒவ்வாத தென்பதை யான் என்றும் ஒப்புக்கொண்டவளே. யான் தங்களொடு கூடியிருக்கும்பேறு இறைவனது பேரருளா லுந் தங்களது தண்ணளியாலும் எனக்குக் கிடைத்ததே யல்லாமல், என்பாலுள்ள எந்த நலத்தினாலாவது கிடைத் தது அன்று என்பதையும் யான் என்றும் ஒப்புக்கொண் டவளே. ஆதலால், தங்களால் வந்த இப்பேற்றைத் தாங் கள் திரும்ப வாங்கிக்கொள்ளுதற்குத் தங்கள் திருவுளம் இப்போது எண்ணுதலால், அதனை யானுந் தங்கட்கு மகிழ்வுடன் திருப்பிவிட வேண்டியவளாகவே இருக்கின்

றேன். என்னை மணந்துகொள்ளுகையில் தாங்கள் என் விரலில் இட்ட இக்கணையாழியை இதோ தாழ்மையாகத் தங்கட்குச் சேர்ப்பிக்கின்றேன். இன்னும், யான் கொணர்ந்த மணப்பரிசத்தை யான் திரும்ப எடுத்துச் செல்லும்படி தாங்கள் எனக்குக் கட்டளையிடுகின்றீர்கள். ஆனல், அவ்வாறு எனக்குத் திருப்பிக்கொடுக்க வேண்டுவ தொன்றுமில்லையே. ஏனென்றால், என்னைத் தாங்கள் கொண்டுவந்தபோது யான் அணிந்திருந்த என்னுடைய எளிய ஆடைகளை முற்றுங் களைவித்தன்றோ என்னைக் கொண்டுவந்தீர்கள்? தங்களுக்கு இரண்டு மகவுகளை ஈன்ற இவ்வுடலம் அவ்வெளிய ஆடைகளையே அணிந்து செல்லல்வேண்டுமெனத் தாங்கள் எண்ணினல், இங்கிருந்து அங்ஙனமே செல்வேன். குற்றமில்லாக் கன்னிமையொடுவந்த எனக்குத் திருமணக்காலத்தில் அணிவித்திருந்த ஆடைகளுள் ஒன்றை எனது மானத்தை மறைக்குமளவுக்குத் தாங்கள் உளம் இரங்கிக் கொடுத்தால் அதனையே எனது திருமணப்பரிசமாகக் கருதிக்கொண்டு இவ்விடத்தைவிட்டுச் செல்வேன்." எனமொழிந்தனள்.

அம்மன்னனே, தன் மனையாள் விளம்பிய இம்மொழிகளைச் செவிமடுத்துத், தன் நெஞ்சம் நீராய் உருகத் தன் கண்களும் அந்நீரை உகுக்கும் நிலையினவாகத் தன்னுளம் நெகிழ்ந்தும், அந்நெகிழ்ச்சியினைக் காட்டானய்ச், சீற்றமுஞ் சினமுங் கொண்டான்போல் எழுந்து நின்று, "இவட்கொரு சிற்றுடைகொடுத்து, இவளைப் போகவிடுமின்கள்!" எனக் கரைந்தான். அப்போதங்கிருந்தவரெல்லாரும்,பதின்மூன்றாண்டுகள் ஓர் அரசற்கு மனையாளாயிருந்த ஓர் அரசி ஓரேழைச் சிற்றுடையணிந்து வெளிச்சென்றாள் என ஒரு சிறுசொற் பூவா

மைப்பொருட்டு நல்லதொரு பேராடை கொடுங்கள் என அவனைமிக இரந்துவேண்டியும், அவன் அதற்கு இசைந்திலன். மற்று, அவ்வரசியோ, அடிக்குத் தொடு தோல் இல்லாமலும், தலைக்கு முடியில்லாமலும், தன் மேமேல ஒரு மாராப்புக்கூட இல்லாமலும், தன் அரையுடம்பு தெரியச் சிற்றுடை யுடுத்தவளாய்த் தன்னைக் கண்டவரெல்லாம் ஆற்றாது புலம்பி அழ, வழிநடந்து சென்று தன் தந்தையின் இல்லிற் சேர்ந்தாள்.

அவடந்தையாகிய அந்நல்ல குடியானவனோ, தன் புதல்வியை அவ்வரசன் நீண்டகாலந் தன் மனையாளாக வைத்திரானென்றும், இப்போது நிகழ்ந்தபடி அவள் தன் பாற் றிரும்பிவந்து சேர்தலே நேருமென்றும், ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்திருந்தவனாதலால், அரசன் அவளை மணந்துகொள்ளுதற்கென்று ஒழுங்குசெய்த அந்நாளில் அவளுடம்பினின்றுங் களைவித்தெறிந்த எளிய ஆடைகளைக் கருத்தாய்ப் பாதுகாத்து வைத்திருந்தான். ஆகவே, அவன் இப்போது அவைகளை யெடுத்துத் தன்மகள் கையிற் கொடுத்தான்; கிரிசெலாளும் அவைகளைவாங்கி யுடுத்துக்கொண்டு, பழமைபோல் தன் தந்தையின் இல்லப்பணிகளைச் செய்தல்மேற்கொண்டு, ஊழ்வினையானது தனக்குவிளைத்த அல்லல்களை யெல்லாம் பெரியதொரு மனத்திட்பத்தொடு பொறுத்துக்கொண்டு தன் வாணாளைக் கழிப்பாளாயினள்.

இங்ஙனஞ் சில வைகல் கழிய, அவ்வரசனோ தனக்கிசைந்ததாகத் தோன்றிய ஒருநாளில், தான் ஓர் அரசன் மகளை மணஞ்செய்துகொள்ளப் போவதாகத் தன் குடிமக்கட்கு அறிவித்து, அத்திருமணவிழவை மிகவுஞ்சிறப்பாக நடைபெறுவித்தற்கு வேண்டுவனவெல்லாஞ் செய்யும்படி கட்டளையிட்டான். அதன்பிற், கிரிசெலாளை

யும் அவடன்தந்தையின் இல்லத்தினின்றும் வருவித்து, அவளைநோக்கி, "மாதே, யான் இப்போது மணந்து கொள்ளுதற்கென்று தெரிந்தெடுத்திருக்கும் நங்கை இன்னுஞ் சிலநாளில் இங்கே வந்துசேர்வள். அவள் முதன் முதல் வரும்போதே அவளைச் சிறப்பாக வரவேற்றுக் கொண்டாட விழைகின்றேன். இவ்வரண்மனைக்கண் உள்ள மாடங்கள் மண்டபங்கள் மாளிகைகள் கூடங்கள் அறைகள் முதலானவைகளை யெல்லாம் ஏற்றபடி ஒப்பனைசெய்து, அத்துணைச்சிறந்த கொண்டாட்டுக்கு ஒத்தவகையாக வேண்டும் பண்டங்களைத் தொகுத்து அவையிற்றை அழகாக அமைத்து வைக்கவல்ல ஒருபெண்பால் இங்கில்லையென்பதை நீ நன்கறிவாய். ஏனையெல்லாரையும்விட நீ இவ்வரண்மனைக்க ணுள்ள எல்லாப்பகுதிகளையும் நுகர்பொருள்களையும் பண்டம் பாடிகளையுஞ் செவ்வையாகத் தெரிவையாதலால் நின்னை யிங்கு அழைப்பித்தேன். நினக்குத் தோன்றுமாறு இங்குள்ளவைகளை யெல்லாம் ஒழுங்குற அமைப்பாயாக! நினக்கு வேண்டிய நங்கைமார்களையுஞ் செல்வப்பெருமாட்டிகளையும் வருவித்து, நீயே இவ்வரண்மனைக்குத் தலைவியாக இருக்கும்முறையி லிருந்து அவர்களை விருந்தோம்புவாயாக! திருமணம் முடிந்தவுடனே நீ நின் தந்தையினிடந் திரும்பி ஏகலாம்." என்றனன்.

இச்சொற்கள், ஏழைமையில் மேதகவுவாய்ந்து பொறுமைமிக்க கிரிசெலாளின் நெஞ்சத்திற் கூரியவேலை நுழைத்தாற்போற் பாய்ந்தனவேனுந், தான் முன்னிருந்த செல்வவாழ்க்கையின் உயர்வு அவடன் நினைவைவிட்டு எளிதாகநழுவிப்போயதேனும், அவள் தான் அவ்வரசன் மேல் வைத்திருந்த இணையற்றகாதலன்பை மறக்கமாட்டாளாய், "என் அருட்பெருமானே, தங்கட்கு வேண்

டியதோர் ஊழியத்தை அடியேன் என் முழுமனத்துடன் விரைந்து செய்யக் காத்திருக்கின்றேன்" எனப் பகர்ந்தனள். அவள் ஒரு சிற்றுடையுடன் அவ்வாரண்மனையிலிருந்து புறம்போக்கப்பட்டா ளாயினும், இப்போது தான் தன் தந்தையின் வீட்டிலிருந்து அணிந்துவந்த எளிய உடையிலிருந்தவாறே, அவ்வரண்மனையின் மண்டபங்கள் கூடங்கள் அறைகள் முதலியவற்றை யெல்லாந் துப்புரவுசெய்யப் புகுந்தாள்; அவ்விடங்களிலுள்ள நாற்காலிகள், பட்டுமெத்தை தைத்த சார்மணைக்கட்டில்கள், சலவைக்கற்பதித்த மேசைகள், பளிங்குவிளக்குகள், அழகிய ஓவியங்கள், பொன் வெள்ளிக் கலன்கள் முதலியவைகளை யெல்லாந் துடைத்துத் தூய்மைசெய்தாள்; எவ்வெவை எவ்வெவ்விடங்களில் இருந்தாற் கண்கவர் வனப்பினவாய்த் தோன்றுமோ அவ்வவற்றை அவ்வவ்விடங்களில் அழகுற அமைத்துவைத்தாள்; அதன்பின் அடுக்களையிற்புகுந்து, அவ்வரண்மனையில் அவளே எல்லா வேலைகளையுஞ் செய்யுந் தொழுத்தைபோற் சிறிதும் ஓய்வின்றிச் சமையற்பண்டங்கள் பாண்டங்கள் முதலானவைகளை யெல்லாம் மிகவும் நேர்த்தியாகத் திருத்திவைத்தாள்.

இவையெல்லாஞ் செய்தானபின், அரசன் அச்சிறந்த திருமணவிழவுக்கு அவ்வூரிலுள்ள நங்கைமார்களை யெல்லாம் வருவித்தான். திருமணம் அயரும் அந்நாளிற், கிரிசெலாள் நிறம் மங்கிய தனது நாட்டுத்துணியை யணிந்தபடியே அந்நங்கைமாரை யெல்லாம் முகமலர்ச்சியுடன் வரவேற்று அவர்க்குச் சிறப்புச்செய்தாள்.

இனி, அம்மன்னன், வேறோர் ஊரில் ஒரு குறுநில மன்னனை மணந்துகொண்ட தன் உறவினளாகிய ஒரு சிற்றரசியிடந் தன் புதல்வியையும் புதல்வனையும் ஒப்ப

டைத்து, அவர்களைச் சிறந்த முறையில் வளர்த்து வருமாறு ஏற்பாடுசெய்து வைத்தமை முன்னமே குறிப்பிக்கப்பட்டதன்றோ? அங்ஙனம் வைக்கப்பட்ட அவன்றன் புதல்வி இப்போது பதின்மூன்றாண்டுக்கு மேற்பட்ட அகவையினளானாள்; அவன் புதல்வனும் ஆறேழு ஆண்டுக்கு மேற்பட்டவனானான். ஆகவே, அரசன் தனக்கு இனிய நண்பரான ஒரு செல்வரை அச்சிற்றரசியின்பால் விடுத்துத், தன் மகளையும் மகனையும் பரிவாரஞ்சூழப் பல்பெருஞ் சிறப்புடன் அவ்வம்மையார் தன்பால் தன் நகருக்கு அழைத்துவரல் வேண்டுமென்றும், அவர்கட்குந் தனக்குமன்றி வேறெவர்க்குந் தெரியாத அக்கன்னிப் பெண்ணை அரசனாகிய தான் மணஞ்செய்துகொள்ளப் போவதாக வழிநெடுக விளம்பரப்படுத்தி வருதல்வேண்டுமென்றும் அறிவித்தான். அவ்வறிவிப்பினைக் கொண்டு சென்ற அச்செல்வருந் தம்மை நம்பி விடுத்த அச்செய்தியினை அச்சிற்றரசிக்குத் தெரிவித்து, அவளுந்தாமுமாக உறவினர் புடைசூழ அரும்பெருஞ்சிறப்புடன் அரசன் மகளையும் மகனையும் அழைத்துக்கொண்டு குறிப்பிட்ட நாளின் நண்பகல் வேளையில் அவ்வரசனது அரண்மனைக்கு வந்து சேர்ந்தனர். அப்போது அக்கம்பக்கத்தூரிலுள்ளார் பலருந், தம்மரசனுக்குப் புது மனைவியாக வந்திருக்கும் அப்பெண்ணைப்பார்ப்பதற்காக அவ்வரண்மனைக்கண் வந்து குழுமினர்.

செல்வர்களுஞ் செல்வப்பெருமாட்டிகளுங் களிப்புமிக்கு அப்பெண்ணை வரவேற்று ஓம்பினர். அத்திருநாட் கொண்டாட்டத்திற்கென்று ஒப்பனைசெய்யப்பட்ட அழகியதொரு பெரு மண்டபத்தின்கண்ணே கிரிசெலாள் தன் எளியஆடையி லிருந்தபடியே அப்பெண்ணை வரவேற்று, "எம் மன்னர்பெருமானுக் கென்று புது

மனைவியாக வந்த நுங்கள் வரவு திருவருளால் நல்வரவா குக!" என்று பணிவொடு மொழிந்தாள்.

அங்கே வந்திருந்த செல்வமகளிரெல்லாரும் அர சனை நோக்கிக், "கிரிசெலாளைத் தனியே ஓர் அறையி னுள்ளாவது வைத்துவிடுங்கள்! அல்லது அந்நங்கையார் முன் அணிந்திருந்த சிறந்த ஆடை யணிகலன்களை அணிந்துகொண்டு வநதாவது இக்கொண்டாட்டத்தை நடத்தும்படி செய்யுங்கள்! ஏனென்றாற் புதிதுவந்தவர் கள் முன்னிலையில் அவ்வம்மையார் அத்துணை ஏழைமை யான தோற்றத்துடன் வந்துநின்று பணிசெய்வது நல்ல தன்று!" என்று எவ்வளவோ வற்புறுத்திச்சொல்லியும், அவன் அவர்களது சொல்லுக்குச் சிறிதும் இணங்கிற் றிலன். எல்லாரும் நாற்காலிகளில் அமர்நது வட்டமே சையைச் சூழ்ந்திருக்கக், கிரிசெலாள் தன் எளிய உடை யொடு நின்றவண்ணமே அவர்கட்கு வேண்டும் பணி யெல்லாஞ் செய்துகொண்டிருந்தாள்.

புதிதுவநத மணப்பெண்ணைப் பார்த்தவர்களெல் லாருந் தம்மரசன்செய்த மணமாற்றத்தை வியந்து பே சினர். மற்று, அவர்களெல்லாரையும் விடக் கிரிசெலாளே அதனை மிகவுங் கொண்டாடிப் பேசினள்! அப்பெண் ணுடன்வந்த அவடன்தம்பி, ஆண்டிற் சிறியனாயினும் அறிவிற்பெரியனாப், அவளைத் தன் தமக்கையென்று அறி யாமலே, அவள் அரசற்கு ஏற்றமனையாளே எனப் புகழ்ந் துரைத்தனன்!

இப்போது அம்மன்னன், தன் மனையாள் கிரிசெ லாளின் பொறுமையைப்பற்றித் தான் தெரியவேண்டு மளவெல்லாம் ஆராய்ந்து தெரிந்துகொண்டமையால், நெஞ்சை இரண்டாய்ப் பிளக்கத்தக்க இத்தனை ஆராய்ச்

டைத்து, அவர்களைச் சிறந்த முறையில் வளர்த்து வரு மாறு ஏற்பாடுசெய்து வைத்தமை முன்னமே குறிப்பிக் கப்பட்டதன்றோ? அங்ஙனம் வைக்கப்பட்ட அவன்றன் புதல்வி இப்போது பதின்மூன்றாண்டுக்கு மேற்பட்ட அகவையினளானாள்; அவன் புதல்வனும் ஆறேழு ஆண் டுக்கு மேற்பட்டவனானான். ஆகவே, அரசன் தனக்கு இனிய நண்பரான ஒரு செல்வரை அச்சிற்றரசியின்பால் விடுத்துத், தன் மகளையும் மகனையும் பரிவாரஞ்சூழப் பல் பெருஞ் சிறப்புடன் அவ்வம்மையார் தன்பால் தன் நக ருக்கு அழைத்துவரல் வேண்டுமென்றும், அவர்கட்குந் தனக்குமன்றி வேறெவர்க்குந் தெரியாத அக்கன்னிப் பெண்ணை அரசனாகிய தான் மணஞ்செய்துகொள்ளப் போவதாக வழிநெடுக விளம்பரப்படுத்தி வருதல்வேண்டு மென்றும் அறிவித்தான். அவ்வறிவிப்பினைக் கொண்டு சென்ற அச்செல்வருந் தம்மை நம்பி விடுத்த அச்செய்தி யினை அச்சிற்றரசிக்குத் தெரிவித்து, அவளுந்தாமுமாக உறவினர் புடைசூழ அரும்பெருஞ்சிறப்புடன் அரசன் மகளையும் மகனையும் அழைத்துக்கொண்டு குறிப்பிட்ட நாளின் நண்பகல் வேளையில் அவ்வரசனது அரண் மனைக்கு வந்து சேர்ந்தனர். அப்போது அக்கம்பக்கத் தூரிலுள்ளார் பலருந், தம்மரசனுக்குப் புது மனைவியாக வந்திருக்கும் அப்பெண்ணைப்பார்ப்பதற்காக அவ்வரண் மனைக்கண் வந்து குழுமினர்.

செல்வர்களுஞ் செல்வப்பெருமாட்டிகளுங் களிப் புமிக்கு அப்பெண்ணை வரவேற்று ஓம்பினர். அத்திரு நாட் கொண்டாட்டத்திற்கென்று ஒப்பனைசெய்யப்பட்ட அழகியதொரு பெரு மண்டபத்தின்கண்ணே கிரிசெ லாள் தன் எளியஆடையி லிருந்தபடியே அப்பெண்ணை வரவேற்று, "எம் மன்னர்பெருமானுக் கென்று புது

மனைவியாக வந்த நுங்கள் வரவு திருவருளால் நல்வரவா குக !'' என்று பணிவொடு மொழிந்தாள்.

அங்கே வந்திருந்த செல்வமகளிரெல்லாரும் அரசனை நோக்கிக், ''கிரிசெலாளைத் தனியே ஓர் அறையி னுள்ளாவது வைத்துவிடுங்கள்! அல்லது அந்நங்கையார் முன் அணிந்திருந்த சிறந்த ஆடை யணிகலன்களை அணிந்துகொண்டு வருதாவது இக்கொண்டாட்டத்தை நடத்தும்படி செய்யுங்கள்! எனென்றூற் புதிதுவந்தவர் கள் முன்னிலையில் அவ்வம்மையார் அத்துணை ஏழைமை யான தோற்றத்துடன் வந்துநின்று பணிசெய்வது நல்ல தன்று !'' என்று எவ்வளவோ வற்புறுத்திச்சொல்லியும், அவன் அவர்களது சொல்லுக்குச் சிறிதும் இணங்கிற் றிலன். எல்லாரும் நாற்காலிகளில் அமர்ந்து வட்டமே சையைச் சூழ்ந்திருக்கக், கிரிசெலாள் தன் எளிய உடை யொடு நின்றவண்ணமே அவர்கட்கு வேண்டும் பணி யெல்லாஞ் செய்துகொண்டிருந்தாள்.

புதிதுவநத மணப்பெண்ணைப் பார்த்தவர்களெல் லாருந் தம்மரசன்செய்த மனைவிமாற்றத்தை வியந்து பே சினர். மற்று, அவர்களெல்லாரையும் விடக் கிரிசெலாளே அதனை மிகவுங் கொண்டாடிப் பேசினள்! அப்பெண் ணுடன்வந்த அவடன்தம்பி, ஆண்டிற் சிறியனாயினும் அறிவிற்பெரியனாய், அவளைத் தன் தமக்கையென்று அறி யாமலே, அவள் அரசறகு ஏற்றமனையாளே எனப் புகழ்ந் துரைத்தனன் !

இப்போது அம்மன்னன், தன் மனையாள் கிரிசெ லாளின் பொறுமையைப்பற்றித் தான் தெரியவேண்டு மளவெல்லாம் ஆராய்ந்து தெரிந்துகொண்டமையால், நெஞ்சை இரண்டாய்ப் பிளக்கத்தக்க இத்தனை ஆராய்ச்

சிகட்கு உள்ளாகியும் முகஞ் சிறிதுஞ்சுளியாத அவள், அறிவில் மிகச்சிறந்தவளாதலால் தன் அறிவில்லா மட்டித்தனத்தால் இங்ஙன மெல்லாம் இத்துன்பங்களைப் பொருள்செயாது நடந்தாள் என்று கருதுதற்கும் மாட்டானுப், இனி இவளை இப்பல்பெருந் துன்பங்களினின்றும் விடுவித்து, இவள் தன்பாற் பெறுதற்குரிய உறுதிமொழியினைத் தான் புலப்படுத்துதலே செயற்பாலதெனத் தீர்மானித்தான். தீர்மானித்து, அங்குள்ளார் எல்லார் எதிரிலும் அவன் அவளைத் தன் முன்னே வந்து நிற்குமாறு கற்பித்து, அவளை நோக்கிப் புன்னகைபுரிந்து, "கிரிசெலா, இப்போது யாம் புதிது தெரிந்தெடுத்திருக்கும் இம் மணப்பெண்ணைப்பற்றி நீ யாது நினைக்கின்றாய்?" என வினவினன். அதற்கவள், "எம்பெருமானே, இப்பெண் மணியை யான் பெரிதும் விரும்புகின்றேன்; இந்நங்கை அழகின் மிக்கவராய் இருத்தல்போலவே அறிவிலும் மிக்கவராய் இருப்பாரென்று நம்புகின்றேன். இம்மங்கையொடு தாங்கள் ஒருங்குகூடி, இந்நிலவுலகில் நீங்கள் ஒருவரே பெறற்கரும்பேறு பெற்றுவராக வாழ்வீர்களென்பதில் யான் சிறிதும் ஐயுறுகின்றிலேன். என்றாலும், யான் தங்களை ஒன்றுவேண்டிக்கொள்கின்றேன். என் சொல்லைத் தங்களுள்ளத்தில் ஏற்பிக்கும் வலிவு எனக்கிருந்தால், தாங்கள் தங்கள் முதல் மனைவியைச் சுடுசொற்களால் வெட்டிப்பேசியதுபோ லில்லாமல் தாங்கள் இவ்விளமாதை மிக்க அன்பொடு நடத்துதல்வேண்டும். ஏனென்றால், அச்சுடுசொற்களைப் பொறுத்திருக்குந்தன்மையை இவ்விளமங்கைபால் யான் எங்ஙனம் எதிர்பார்க்கக்கூடும்? இப்பெண்மணி ஆண்டில் மிக இளையராயிருப்பதுடன், கல்விப்பயிற்சியில் மிக மென்மையாக வளர்க்கப்பட்டவ ராகவுமிருக்கின்றார். மற்றுந், தங்

கள் முதன் மனைவியோ உழைப்பிலுங் கடுமுயற்சியிலுந் தொடர்பாக வளர்க்கப்பட்டவள்.

இங்ஙனங் கிரிசெலாள், தன் மகளை மகளென்றறியாமல் தன் கணவற்கு இரண்டாம் மனைவியெனவே நம்பி, அரசன் வினயதற்குக் கள்ளமின்றி உண்மையாக அடக்கத்துடன் விடை பகர்ந்ததைக்கண்டு காலதியன் என்னும் அம்மன்னன் அவளை அழைத்துத் தன்னருகே யிருக்கும்படி கற்பித்துக், "கிரிசெலா, நீடுவியக்கத்தக்க நினது பொறுமையிற் பழுத்த கனியை நீ நுகர்தற்கு ஏற்றகாலம் இப்போது தான் அண்மியது; என்னை இரக்கமில்லா வன்னெஞ்சமுரடனெனக் கருதியவர்களெல்லாரும், யான் இழிந்ததேதும் மதிகெட்டுச் செய்திலேனென்பதை இப்போது கடைசியாக அறிந்துகொள்வர் இங்ஙனம் ஏதுக்காகச் செய்தேனென்றால், மணந்துகொண்ட ஒரு மனையாளின் நிலை எவ்வாறிருக்கவேண்டுமென்பதை நினக்கு அறிவுறுத்தவும், ஒருவன் ஒரு மனையாளை எங்ஙனந்தெரிந்தெடுத்து எங்ஙனம் வைத்திருக்கவேண்டுமென்பதை எவர் எத்தகையராயினும் அவரெல்லார்க்கும் நன்கு உளத்திற் பதியவைக்கவுமே அங்ஙனம் முன்னமே கருதிச்செய்தேன். இங்ஙனம் ஆராய்ந்து தெளிந்தமையால் இனி நின்னோடு யான் ஒருநாள் ஒருங்கு வாழப்பெறினும் அஃது எனக்கு என்றும் அழியாக் களிப்பினையும் இன்பத்தினையும் பயப்பதே யாகும். இத்தகைய இன்பத்தினை எய்தும் பேறு எனக்கு வாயாது போய்விடுமோ எனவும், அத்தகைய மணவாழ்க்கை எனக்கு நேராது நழுவிவிடுமோ எனவும் யான் முன்னே மிகவும் அஞ்சியதுண்டு.

"முதன்முறை ஆராய்ச்சியாக, யான் நின்னைப் பல வகையாலும் வைதுரைத்த கொடிய இன்னுமொழிகளை

நீ அறியாதாய் அல்லை. என்றாலும், அம்மொழிகள் நின் பார்வையிலாதல், சொற்களிலாதல், நடக்கையிலாதல் ஏதொரு மனக்குறையினையுங் காட்டாமைகண்டு, யான் விரும்பியபடி எனதுள்ளம் அடைந்த ஆறுதலுக்கோர் அளவில்லை. அங்ஙனமே, அதனையடுத்து நிகழ்ந்த ஆராய்ச்சிகளிலும் மனவமைதியுற்றேன். எனது சூறைக்காற்றை யொத்த நடக்கையினால் யான் நின்னைவிட்டு அகலுமாறு செய்த அவ்வாறதலை, நீ முன்னை பட்ட கொடுந்துன்பங்களுக்கெல்லாம் ஈடாக இப்போது ஒரு நொடியில் நினக்கு இனிதாக வருவிப்பேன். என் அழகிய காதற் கிரிசெலா, எனக்குப் புதுமணப்பெண்ணாகை நீ கருதிய நங்கையை உளங்களித்து உவகைபொங்க நின்புதல்வியாகத் தழுவிக்கொள்! இச்சிறுவனையும் அவள் தம்பியாகத் தழுவிக்கொள்! இவ்விருவரும் நினக்கும் எனக்கும் பிறந்த மக்களாவர்! இவ்விருவரையும் யான் கொலைசெய்வித்துவிட்டதாகக் கீழ்மக்க ளெல்லாரும் பிழையாக நினைந்தனர்! யான் நினக்குரிய காதற்கணவனே! நின்னை உலகத்திலுள்ள ஏனைமாதரார் எல்லாரிலும் மேலாகப்பாராட்டி, வேறு எந்த ஆடவனுக்குங் கிடைத்தற்கரிய மனையாளாக எனக்கு வாய்த்த நினக்குஉரிய பெரும்புகழினை நினக்கே தக்கதாக உரிமையாக்கும் நின் காதற்றலைவனும் யானே!" என்று தன்னுள்ளம் பலவாற்றாற் கரைந்துருக உரைத்தனன்.

என்றிவ்வாறுரைத்து, அவன் அவளைத் தன் கைகளாற் றழீஇ அணைத்து முத்தமிட்டு, இதற்கு முன் எத்தகைய இடையூற்றானும் வருவிக்கப்படாத கண்ணீர் இப்போது புதிதுமடைதிறந்த யாறுபோற் றன் னழகிய முகத்தின்கீழ்ப் பெருகியோடப்பெற்ற கிரிசெலாளை அழைத்துக்கொணர்ந்து தன் புதல்வியின் பக்கத்தே அமரவைத்

தான். அப்புதல்வியும் அரியதான இத் திரிபுநிகழ்ச்சி யைக்கண்டு அடைந்த இறும்பூதுஞ் சிறியதன்று. கிரிசெலாளுந் தன் மக்களிருவரையும் நிரம்பித்துளும்பிய அன் பினுற் றழுவி முத்தமிட்டாள். அங்கே குழுமியிருந்த செல்வருஞ் செல்வமகளிரும் பிறருமெல்லாந் தாம் முன் னே கொண்டிருந்த ஐயமெல்லாம் ஒருங்கே தீரப்பெற் றுப், பேருவகை கிளரக், கிரிசெலாளுக்கு விலையுயர்ந்த பொற்பட்டாடைகளும் மணிக்கலன்களும் அணிவித்து, வைத்துப் பார்த்து மகிழ்ந்தனரென்பது.

## மக்கள் வாழ்க்கையின் நிலையாமை

மக்கள் வாழ்க்கையின் நிலையாமையினை ஆசிரியர் திரு வள்ளுவ நாயனுர்,

"நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு" என்னுந் திருக்குற ளால் நம்முள்ளத்தே நன்ருய் உறைக்குமாறு எடுத்தரு ளிச் செய்திருக்கின்றார். "ஐயோ! நேற்றிருந்தான், இன் றைக்கு இல்லையே!" என்று கற்ருர்முதற் கல்லாதார் ஈருன எத்திறத்தாரும் பேசிக்கொள்ளுதலையும் நாம் உலக வழக்கில் இடையிடையே கேட்கின்ருேம். இங்ஙனம் உலகவழக்கிற் காணப்படும் ஒருபெரிய உண்மையினை யே திருவள்ளுவர் தாமும் எடுத்துரைத்தது நமக்கு அதனை நினைவிற் பதியவைக்கும் பொருட்டே யாம். எல் லா உண்மைகளும் உலகவழக்கிற் காணப்படுமாயினும், நந்நெஞ்சம் உடனுக்குடன் இன்பந்தரும் பொருள் களின் வயப்பட்டு அவை தம்மையே பெரும்பாலும் நினைந்துகொண்டிருத்தலால், நிலையான நீண்ட இன்பத் தைப்பயக்கும் பொருள்களைப் பற்றியநினைவு அங்கே

புகுந்திருத்தற்கு இடமில்லாமற்போகின்றது. ஆதலால், அந்நெஞ்சத்தில் நான்முகமாய் வந்து குவியுங் குப்பை கூளங்களை அகற்றிப், பேரின்பப்பொருளைப் பற்றிய நினைவு அதன்கட்டோன்றிச் சுடர்ந்தொளிருமாறு செய் வதே நல்லிசைப்புலமைமலிந்த பேராசிரியர்க்குரிய கடமையாகும். ஆகவே, திருவள்ளுவர் அறிவுறுத்திய இவ் வுண்மை, உலகில் இறந்துபடுவாரைக் காண்புழியெல் லாம் மக்கள் தமக்குள்ளே நெஞ்சம் நெக்குடைந்து பேசிக்கொள்ளுதலிலிருந்து புலப்படுகின்றதேனும், மற்றை நேரங்களில் அஃது அவருள்ளத்திற் றோன்றாமல் மறைந் துபோதலின், அஃது அப்பேராசிரியர் அருளிய வாய் மொழியிலிருந்து நமக்கு எஞ்ஞான்றும் மறவாமல் நினை வூட்டப்படாநிற்கின்றது என்க.

நன்று, மக்கள் வாழ்க்கையானது ஒரோவொருவர் பால் என்றோ ஒரோவொருகாற் சடுதியில் மடிந்து மறைந் துபோகக் காண்கின்றனமேயன்றி, எல்லாமக்களிடத்தும் அஃது ஒரேகாலத்தில் இல்லையாய்ப்போகக் காண்கின் றோம் இல்லையே; அங்ஙனமிருக்கச், சிறுபான்மையாய் நிகழுஞ் சில நிகழ்ச்சிகளைக்கொண்டு, மக்கள் வாழ்க்கை யானது சடுதியில் மாய்வதென்று பெரும்பான்மைப்படக் கூறுவது பொருந்துமோவெனிற்; பொருந்தும்; நில அதிர்ச்சியினுற் பெரிய பெரிய நகரங்கள் அழிந்துபடுங் கால் அவற்றின்கணிருந்த உயர்ந்த மாடமாளிகைகள் இடிந்தழிய, அவற்றின்கண் உயிர்வாழ்ந்த நூறாயிரக் கணக்கான மக்களும் ஒருநொடியில் மாண்டுபோனமை கேட்டதில்லையா? 1908-ஆம் ஆண்டு நேர்ந்த நில அதிர்ச் சியினுல் நீரும் நெருப்பும் பொங்கி மெசீனுப் பட்டினத் தை அழிக்க, அதிலிருந்த எழுபத்தேழாயிரமக்கள் ஒரு சிறு பொழுதில் மாண்டுபோனுர்கள்! அமெரிக்கா தேயத்

திலுள்ள **சான்பிரான்சிஸ்கோ** என்னும் பெருநகரா னது பதினெட்டடுக்குகள் வாய்ந்த பெரும்பெரு மாடங்கள் உள்ள பெருஞ் செல்வநகராகும்; அஃது 1906-ஆம் ஆண்டு, ஏப்பிரல், 22-ஆம்நாட் சடுதியிற் றோன்றிய நில அதிர்ச்சியினால் அதன்கணிருந்த அக் கட்டடங்கள் பலமுகமாய்ப்பிளந்துவிழ, அவற்றின்கணி ருந்த மக்களுங் கோடிக்கணக்கான பொருள்களும் அழிந்தன! சின்னாட்களுக்கு முன் நம் இந்திய நாட்டின் வடபகுதிக்கண் நில அசைவினால் உண்டான உயிரழிவு பொருளழிவுகளின் மிகுதியை அறிந்து வருந்தாதார் யார்? இங்ஙனம் அடுத்தடுத்து இந்நிலவுலகின் கண் ஆங் காங்குநேரும் நில அசைவினாலும், நீர்ப்பெருக்கினாலும், எரிமலை நெருப்பினாலுந் திடுமெனச் சிறிதுநேரத்தில் இதுகாறும் அழிந்துபட்ட உயிர்களையும் பொருள்களை யுங் கணக்கெடுத்தல் எவராலேனும் ஏலுமா? அதுகிடக்க.

நமது இந்தியநாட்டிலும் பிறநாடுகளிலுங் கொள்ளை நோய் (plague), கொள்ளைக்கழிச்சல் (cholera), அம் மை, நச்சுக்காய்ச்சல் முதலான நோய்களால் ஒவ்வொரு நாளும், ஒவ்வொருதிங்களும், ஒவ்வோராண்டும் மடிந தார் மடிவார் தொகையை நினைத்துப்பார்க்குங்கால் நெஞ் சந் திகிலென்கின்றது! இவ்விந்தியநாட்டில் 1896-ஆம் ஆண்டிலிருந்து 1903-ஆம் ஆண்டுவரையிற் கொள்ளை நோயால் மடிந்தார் தொகை இருபத்தொரு லட்சத்து ஐயாயிரத்து ஐந்நூற்று நாற்பத்தெட்டு என்றும், 1891-இலிருந்து 1900 வரையிற் கொள்ளைக்கழிச்சலில் மாண் டார் தொகை நாலுலட்சத்து ஐம்பதினாயிரத்து ஐந்நூற் றிரண்டு என்றும், அம்மையிற் செத்தார் தொகை எண் பத்தீராயிரத்து ஐந்நூற்றெண்பத்தெட்டு என்றும், நச்சுக் காய்ச்சலில் இறந்தார் தொகை நாற்பத்துமூன்று லட்

சத்து அறுபத்து மூவாயிரத்து ஐம்பத்தைந்து என்றுங் கணக்கெடுத்திருக்கின்றார்கள். இன்னும் பலகாரணங் களால் அழிந்தொழிவார் தொகையுஞ் சாலப்பெரிது. ஆதலால், மக்கள் ஒருங்கே ஒருகாலத்தோரிடத்துமாயக் கண்டிலமென்றுரைப்பது உண்மை நிகழ்ச்சிக்கு மாறு மென்றுணர்ந்து கொள்ளல்வேண்டும் எனவே, மக்கள் வாழ்க்கையானது பொதுவாகவே நிலையில்லாததென்பது தெளியப்படும்.

அஃது உண்மையேயானாலும், மக்கள் ஒவ்வொரு வருந் திடீரென இறந்துபடுவரென்பது ஏற்றுக்கொள்ளற் பாலதோவெனின்; எவ்வளவு கருத்தாய்த் தமதுயிரைப் பாதுகாத்தவரும், அவரும் எவரும் எதிர்பாராமலே சடு தியிற் சாதலைப் பார்த்ததில்லையா? பார்வைக்குக் கருங்கல் வடிவம்போல் அழுத்தந்திருத்தம் வாய்ந்த உடம்புடைய வர்களாயிருந்தவரும் நெஞ்சடைப்பினால் ஒரு நொடியில் உயிர்துறந்ததைப் பார்த்துங் கேட்டும் இருக்கின்றேம். பெருஞ்சினங்கொண்டு அதனால் ஓரிமைப்பொழுதில் மாண்டவர் எத்தனையோ பேர்! தமக்குயிர்போல் அன் பராயிருந்தார் சாவக்கேட்டு, ஆற்றுமையால் உடனே உயிர் நீங்கினார் எத்தனையோ பேர்! கல்தடுக்கி வீழ்ந்து, வீழ்ந்த அந்நொடியே உயிர்மாய்ந்தார் எத்தனையோ பேர்! உறக்கத்திற் பாம்பு தீண்டப்பட்டுக் கண்விழியாம லே இறந்துகிடந்தார் எத்தனையோ பேர்! இஞ்ஞான்று நம் கண்ணெதிரே இங்ஙனம் எதிர்பாராமலே சடுதியில் இறப் பார்போலப், பழையநாளிலும் எதிர்பாராப் புல்லிய கார ணங்களால் இறந்தார் பலரை ஆங்கில ஆசிரியரொருவர் எடுத்துக்காட்டி இருக்கின்றார்:—

'இசிக்கிலர்' என்னுங் கிரேக்க நாடகாசிரியர் வழி நடந்துசெல்கையில், வானத்தின்கண்ணே பறந்துசென்ற

ஒருகழுகின் நகங்களிலே இடுக்கப்பட்டிருந்த ஓர் ஆமை யானது அங்கிருந்து நழுவி அவர் தலையில் விழ, அவர் உடனே கீழ்விழுந்து உயிர்துறந்தார்.

சிசிலிதேயத்திற் கொடுங்கோன் மன்னனாயிருந்த 'அதோகிலஸ்' என்பான் தனது கூ௩-ஆம் ஆண்டில் ஒரு பல்லுக்குத்தியினாற் றனது பல்லைக் குத்திக்கொண்டிருக்கையில், அதன் முனையிற் பூசப்பட்டிருந்த நஞ்சினாற் சிறிதுநேரத்திற் கொல்லப்பட்டான்.

'அனக்கிரியன்,' என்னும் கிரேக்க நல்லிசைப் புலவர் ஒருநாட் கொடிமுந்திரிப்பழங்கள் தின்றுகொண்டிருக்கையில், ஒரு பழத்தின் ஒரு சிறுவிதை நெஞ்சில் அடைக்க உடனே இறந்துபட்டார்.

'பாசர்' என்பார் தமது இடதுகைப் பெருவிரலில் ஒருகூரிய ஊசியின் முனை தைக்க, அதனால் உடனே மாண்டுபோனார்.

'சாலகன்' என்னுங் குறிகாரன், தான் இறந்துபடு நாள் இன்னதென்று முன்னே குறிப்பிக்கப்பட்டபடி அந்நாளிற் சாவாமற் பின்னுந் தான் பிழைத்திருந்ததனை நினைந்து, ஒருநாள் அளவுக்குமிஞ்சிச் சிரிக்க, அதனால் உடனே உயிர்நீங்கப்பெற்றான்.

'எட்டாஞ் சார்லசு' என்னும் அரசன் தன் மனை யாளைப் பந்து விளையாடும் இடத்திற்கு அழைத்துக் கொண்டு செல்கையில், தன் அரண்மனைவாயிலின் மேற் படி தலையில் இடிக்க, அதனால் அங்கொடியே இறந்து வீழ்ந்தான்.

'பேபியர்' என்னும் உரோமநடுவர் ஒருநாள் தாம் பால் பருகிக்கொண்டிருக்கையில் அதிற்கிடந்த வெள் ளாட்டுமயிர் ஒன்று தமது மிடற்றிற் சிக்கிக்கொள்ள அத னால மாய்ந்துபோனார்.

'பிரடரிக்குஊயிசு' என்னும் உவேல்சு இளவரசர் தாம் பந்தாடிக்கொண் டிருந்கையிற், பந்து மேலேபட்டு இறந்துபோனார்.

'இதடாக்கு' என்பவர் வயலில் அறுப்பு அறுக்கை யில் மிகவும் நாவறட்சிகொண்டுந், தன்குரு இட்ட கட் டளைப்படி ஒருதுளி தண்ணீரும் பருகாதிருந்தமையால் அங்கேயே உயிர் நீங்கப்பெற்றார்.

'ஆறப்லூயிசு' என்னும் மன்னன் தன் குதிரை மேல் ஏறிச்செல்லுங்காற் குறுக்கே ஒருபன்றி அக்குதி ரையின் கீழ் ஓட, அதனால் அக்குதிரை தடுக்கிவிழ, அம் மன்னனும் கீழ்விழுந் துடனே மாண்டுபோனான்.

'ஆதவர்' என்னும் புலவர் வறுமையால் உணவின் றிப் பட்டினியாயிருத்தல் கண்டு ஒருவர் அவர்க்கு ஒரு பொற்காசுகொடுத்தனர். அவர் அக்காசைமாற்றி ஓர் அப்பம்வாங்கி, அதனைப்பிட்டுப், பிட்டதுண்டை வாயி லிட்டுமென்று விழுங்குகையில் உயிர் நீங்கினார்.

'பிலேமினர்' என்பார் தாம் உண்ணுதற்கென்று வைத்த அத்திப்பழங்களை ஒரு கழுதை வந்து தின்ன, அதுகண்டு அவர் மிகுதியாய்ச் சிரித்தமையால் உயிர் பிரியப்பெற்றார்.

'குயினிலாடன்' என்னும் ஒருமருத்துவன் பிறன் ஒருவன் கையிற் றைத்த ஒரு சிராயைப் பிடுங்கி எடுக்கை யிற தன்கையிற் சிறிதுகாயம்பட்டு இறந்துபோனான்.

'சியூகர்' என்னும் ஓவியர் தாம்வரைந்த ஒரு குறி காரக்கிழவியின் உருவைக் கண்டு தாமே மிகுதியாய்ச் சிரிக்க, அதனால் உயிர்துறக்கலானார்.

இவ்வாறு முன்னாளிலும் பின்னாளிலும் மிகச்சிறிய காரணங்களாற் சடுதியில் மாண்டுபோயினார் தொகை யைக் கணக்கெடுக்கப்புகுந்தால், அது கணக்கிலடங்

காது. ஆகையால், மக்கள் தனித்தனியே திடீரென மாளுதல் நாடோறும் ஆங்காங்கு நிகழும் உண்மை நிகழ்ச்சியேயல்லாமற் பொய்யாகாது. ஆகவே, பெருந்தொகையினரான மக்கள் ஒருநொடிப்பொழுதில் மாய்தலும், அவருள் ஒவ்வொருவர் ஒவ்வொருகாற் றிடுமெனமாய்தலும் ஆங்காங்கு அடுத்தடுத்து நிகழ்தல் விரிந்த ஆராய்ச்சியுடையார்க்கெல்லாம் இனிது விளங்கிக்கிடத்தலின், மக்கள் வாழ்க்கையானது எந்தவகையிற் பார்த்தாலும் நிலையில்லாததேயாமென்பது நன்கு பெறப்படுமென்க.

நன்று, அங்ஙனம் மக்கள் வாழ்க்கையானது நிலையில்லாததாய் ஒழிதல் உண்மையேயாயினும், அதைப்பற்றி நாம் அடுத்தடுத்து நினைதலாற் பயன் என்னை? நாம் நிலையில்லாமல் எந்தநேரத்தில் மாய்வமோ என ஒருவர் அடிக்கடி எண்ணிப்பார்ப்பராயின், அவர் அதனால் எதொரு முயற்சியுஞ்செய்வதில் மனவெழுச்சி பெறாது, அறிவு குன்றிச் செயலற்றுத் துயரங்குடிகொள்ளப்பெற்ற நெஞ்சினராய்ச், சாநாள் வருமுன்னரே அதனை எதிர்பார்த்திருந்து, தமக்கும் பிறர்க்கும் பயன்படுதலின்றிக் கழிவரல்லரோ? மேலும், மக்களெல்லாரும் "நாம் நிலையாயிருப்போம்; நிலையாயிருந்து பலவேறு இன்பங்களை நுகர்வோம்; அங்ஙனம் நிலையாயிருந்து இன்பம் நுகருதற்குரிய நாம் இன்பந்தரும் பொருள்களையும் மக்களையுந் தேடித் தெரிந்து நம்முடனே வைத்துக் கொள்ளக் கடவோம்" என எண்ணுதலாலன்றோ, அவர் தமது வாழ்க்கையைச் செவ்வனே நடைபெறுவித்தற்காம் அறிவும், அதனொடு பெருமுயற்சியும் உடையாராய் ஒழுகுகின்றனர்? இத்தகைய ஒழுகலாற்றால் அவர் தமக்குந் தம்மைச் சார்ந்தார்க்கும் பயன்படுதலொடு தம்மவரல்லாத ஏனைப் பொதுமக்கட்கும் பயன்பட்டுவருகின்றனர். இவ்

வாறு தம்மைநிலையாமலெண்ணி வாழ்தலாலன்றோ மக்கள் வாழ்க்கையானது பல்லாயிர ஆண்டுகளாகத் தொடர்ந்து நிகழாநிற்கின்றது? இனி. இவ்வாறன்றி, மக்கள் ஒவ்வொருவருந் தமது வாழ்க்கை நிலையின்றி மாயுமியல்பினையே எண்ணியெண்ணி நெஞ்சம் நோவராயின். ஒரு சில ஆண்டுகளில் மக்கள் வாழ்க்கையே இம்மாநிலத்தின்கண் இல்லையாய் ஒழியுமன்றோ? ஆகையால், நிலையாமையை எண்ணிப்பார்ப்பதும் அதனை எண்ணிப் பார்க்கும்படி கற்பிப்பதும் நலந் தருமோவெனிற் கூறுதும்.

நிலையாமையை எப்போது நாம் எண்ணிப்பார்த்தல் வேண்டும், எப்போது நாம் அதனை எண்ணிப்பார்த்தலாகாது என்று ஒவ்வொருவரும் பகுத்துணர்ந்து ஒழுகல்வேண்டும். நிலையாமையை எப்போதுமே எண்ணிப் பாராதவர்கள், செங்குத்தான உயர்ந்ததொரு மலையுச்சியின் ஓரத்தில் நிற்குங் கண்ணில்லாக் குருடனொருவனையே ஒப்பராதலால். அவர் தமது வாழ்க்கையின் இடையிடையேவரும் அல்லல்களுக்கு ஈடுகட்டமாட்டாதவர்களாய் அறிவும் அன்பும் அறமும் இன்பமும் இன்றிப், புகழும் புண்ணியமுங் கடவுள் நேயமும் இன்றிச் சடுதியில் மாண்டுபோவர்; அங்ஙனஞ் சடுதியின் மாளாமல் நீண்டநாளிருப்பினும் அவரது இருப்புப் பயனற்ற முண்மரத்தின் இருப்புக்கே ஒப்பாகும். ஆசிரியர் திருவள்ளுவநாயனார்,

> "அன்பகத்தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
> வற்றன் மரந்தளிர்த் தற்று"

என்றருளிச் செய்தது உண்மையன்றோ? இனி, நிலையாமையினையே எந்நேரமும் எண்ணிப் பார்ப்பவர்கள், செங்குத்தான அவ்வுயர்ந்த மலைமுகட்டின்மேலிருந்து

கீழுள்ள பெரும்பள்ளத்தாக்கை நோக்கி உள்ளந் திகில் கொண்டு அதனைவிட்டு அப்புறம் அகலாமல் அதன் கீழ்த் தனவயமின்றியே விழுந்தொழியப் போகுங் கண்ணுடையா னொருவனையே ஒப்பாதலால் அவரும் அறிவும் அன்பும் இல்லாமல், அறமும் புண்ணியமுஞ் செய்யாமற், புகழுங் கடவுள் நேயமும் வாயாமற் சடுதியிலே மாய்ந்துபோவர்; அன்றி அங்ஙனம் மாயாது நெடுநாள் இருப்பினும், அவரது இருப்பு,

"ஏவவுஞ் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒமளவும் ஓர் நோய்"

என்று தெய்வத் திருக்குறள் கூறுமாறு இம்மா நிலத்துள தாம் ஒரு நோயினிருப்புக்கே ஒப்பாகும்.

ஆகவே, நிலையாமையை எண்ணிப் பாராதிருத்தலும் ஆகாது, எந்நேரமும் எண்ணிப் பார்த்திருத்தலும் ஆகாது அற்றேல், அதனை எண்ணிப் பார்க்க வேண்டுவதெப்போதெனின்; அறிவுங் கல்வியுஞ் செல்வமும் வாய்த்தவர்கள் தாம் பெற்ற அவ்வரிய பேறுகளைப் பயன்படுத்துதலிற் சிறிதுங் காலந்தாழாமைப் பொருட்டு, வாழ்க்கை நிலையாமையினை இடையிடையே தமது நினைவுக்குக் கொணர்தல் வேண்டும்.

ஒருவன் மிகச்சிறந்த அறிவுங் கல்வியுஞ் செல்வமும் பெற்றது எதற்காக? தன்னிலும் அறிவிற் குறைந்தார்க்குங், கல்லார்க்கும், பொருளின்றி வறுமைப்பட்டார்க்கும் அவற்றைக்கொண்டு உதவிசெய்தற்காகவன்றோ? ஒருவன் தான்பெற்ற அறிவைப் பிறர்க்குப் பயன்படுத்தாக்கால் அது அவன்றனக்கும் பயன்படாமலே போகின்றது. பிறர்க்குப் பயன்படுத்துகின்ற காலங்களில் மேன்மேல் விளக்கமுடையதாகிப் பல நுண்ணிய அரும்பொருள்களை அறிந்து பெருகும் அறிவு, அங்ஙு

னம் பயன்படுத்தப்படாத காலங்களில் தன்னுடைய
விளக்கமும் வலிவும் இழந்து போகின்றது. அங்ஙனமே
ஒருவன் தான்கற்ற கல்வியும் பிறர்க்குப் பயன்படுத்துந்
தோறும் ஆழ்ந்துவிரிந்த பெருப்பம் புடையதாகும்.
இனிச், செல்வமுந் தீயவல்லாவழிகளில் அளவறிந்து
செலவு செய்யப்படுமாயின். அது முதலிற் குறைவது
போற் றோன்றினும், பின்னர் ஒன்று. பத்து. நூறு ஆயிர
மாய்ப் பெருகாநிற்கும்; எங்ஙனமென்றால், பலர்க்கும்
பயன்படும் நல்வழிகளில் அளவறிந்து அறிவாய்ப்
பொருட்செலவு செய்கின்றவனையும், பிறர்துயர் பொறா
மல் உளம் இரங்கி அற்றார்க்கும் அலந்தார்க்கும் அறஞ்
செய்கின்றவனையுங் கல்விக்குங் கற்றார்க்கும் ஏராளமா
கப் பொருளுதவிபுரிந்து கலையொளி எங்கும் பரவுமாறு
செய்கின்றவனையும் நச்சி வந்து எல்லாரும் அவன்
வேண்டுமா றெல்லாம் இசைந்து நடப்பராதலால்,
அவன் முதலிற் செய்யுஞ் செலவு பின்னர் அவற்குப்
பெரும்பொருட்டிரளை நல்குவது திண்ணமேயாம் ஆக
வே, அறிவுங் கல்வியுஞ் செல்வமும் பிறர்க்குப் பயன்
படுதலால் மட்டுமே தம்மையுடையானுக்கும் பெரிது
பயன்பட்டு என்றும் அழியாது நிலையாய் விளங்கும்;
அவை பிறர்க்குப் பயன்படுதல் இல்லாக்கால் தம்மை
யுடையானுக்கும் பயன்படுதல் இலவாய் நிலையின்றி அழி
யும். எத்தனையோ பெரிய அறிவாளிகளுங் கல்வியில்
மிக்காருஞ் செல்வத்திற் சிறந்தாரும் பண்டைக் காலந்
துவங்கி இன்றுகாறுங் கணக்கின்றி வந்தபடியாய்த்தான்
இருக்கின்றனர். ஆனால். அவருள் தம் அறிவையுங்
கல்வியையுஞ் செல்வத்தையும் பிறர்க்குப் பயன்படுமாறு
செய்து வாழ்ந்தவர்களின் பெயரும் புகழுமே ஆங்காங்
குக் குன்றின்மேலிட்ட விளக்குப்போல் எங்கும் மங்

காமற் றுலங்குகின்றன. மற்றுப் பயன்படாமல் அவற்றைத் தம்மொடு தாம் வைத்து மாய்ந்த எண்ணிறந்தாரைப்போ வெறும் பெயரளவாய்க்கூட எவருமேயறியார். ஆகவே, பிறர்க்குப் பயன்படாத அறிவு கல்வி செல்வங்கள் நிலையில்லனவாய் மாய்ந்துபோதலையும், அவற்றையுடையவரும் அவைதம்மாற் றாமும் நலம்பெறாமல் நீர்மேற் குமிழிபோல் நிலையின்றி மறைந்துபோதலையும் இடையிடையே நினைந்துபார்த்துப் பயன்பட ஒழுகுதற்கும் அறஞ்செய்தற்கும் முன்நிற்றல் வேண்டும். இவ்வாறு நிலையாமையினை எண்ணிப்பார்ப்பது அறஞ்செய்தற்பொருட்டாகவே யல்லாமல் வேறு எதற்கும் அன்றென்பது நன்கு தெளியப்படும். இது குறித்தன்றோ நாலடியாரிற்,

"புன்னுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்னினியே செய்க அறவினை—இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றான் எனப்படுத லான்" என்னும் அறவுரையும்

எழுந்தது!

இனி, அறிவுங் கல்வியுஞ் செல்வமும் பெறுதலினும், பெற்ற அவைதம்மைப் பிறர்க்குப் பயன்படுத்துதலினும் முனைந்து நிற்பவர்கள், நிலையாமையினைச் சிறிதுமே எண்ணிப்பார்த்த லாகாது. "நாளைக்கு நாம் இறந்தொழிந்தால் நாம் பெறுதற்கு முயலும் அறிவுகல்விசெல்வங்கள் என்னும்! நமது முயற்சிதான் என்னும்! நம்மாற் பயன் பெறுவார்தாம் நிலையாக இருப்பவரோ! அவர்பெறும் பயனும் நிலைப்பதோ! எல்லாம் நிலை இல! எல்லாம் பயனில! எல்லாம் மின்னலொளி! எல்லாங்கடலலை! எல்லாம் வெளிமினுக்கு! எல்லாம் வீண்முயற்சி! எல்லாம் வெறும் புரட்டு!" என்று அடுத்தடுத்து நினைப்பார்க்கு

உள்ளக்கிளர்ச்சி குன்றிவிடும்; தாளாண்மை மாய்ந்து விடும்; உலகமும் உயிரும் பிறவுமெல்லாம் வெறும் பாழாய்த்தோன்றும்; அவர் அறிவுங் கல்வியுஞ் செல்வமும்பெறார்; பிறர்துயர் கண்டும் அவர் மனமிரங்கார்; பிறர்க்கோருதவியும் புரியார் அவர். ஆகலால், அறிவுங் கல்வியுஞ் செல்வமும் பெற்றுப் பிறர்க்குப் பயன்பட்டு, அதனாற் றாமும் மேன்மேலுயர்ந்து பேரின்பப்பெறுகிற் படிதற்கான நோக்கத்துடன் மக்களெல்லாரும் இறைவனால் இப்பிறவியில் வருவிக்கப்பட்டிருப்பதனை நன்காழ்ந்துபார்த்து, அவ்வருட்பெரு நோக்கத்திற்கிசைந்து நடத்தலில் அனைவருங் கருத்தூன்றற்பாலரே யன்றி, எந்நேரமும் நிலையாமையினை நினைந்து மடிந்து வறிதே மண்ணாகற்பாலரல்லரென்க இவ்வ நம்பெருண்மை,

"பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி" என்னுந் திருக்குறளானும்,
"நல்லகுலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை — தொல்சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றோ தவங் கல்வி ஆள்வினை
என்றிவற்றான் ஆகுங் குலம்" என்னும் நாலடியாரானும் நன்கெடுத்துக் காட்டப்பட்டமை காண்க

---

## திருவள்ளுவர்

செந்தமிழ் மொழிக்கொரு நந்தாமணிவிளக்காய்த் தோன்றித், தன்கட் சுடர்ந்தொளிரும் அறிவுப்பேரொளியைத், தான்பிறந்த தமிழ்நாட்டவர்க்கு மட்டுமேயன்றி, இந்நிலவுலகின் பிறபகுதிகளிலுள்ள பிறநாட்டு மாந்தர்க்கும் வேற்றுமையின்றி வீசி, எல்லாரையும் ஒரேமுழுமுதற் கடவுளாம் ஒப்பற்றதந்தைக்கு உரிமை மகாராய்

வைத்து, அவரறியவேண்டும் அரும்பொருள் முற்றும் ஒருங்கே அறிவுறுத்துந் தெய்வத் **திருக்குறள்** என்னும் நூலை அருளிச்செய்த பெரியாரையும் அவரது வரலாற்றையும் அறிய விரும்பாதார் யார்? எவரும் இரார்அன்றோ? ஆதலால், அவரைப் பற்றிய குறிப்புகள் சிலவற்றை இங்கு வரைவாம்.

திருவள்ளுவ நாயனார், கிறித்துசமய முதல்வரான ஏசுமுனிவர் பிறப்பதற்கு முப்பதாண்டுகள் முன்னமே பிறந்தருளினாரென்பதை **மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும்** என்னும் எமது பெருநூலிலே பலசான்றுகள் கொண்டு விளக்கிக்காட்டி யிருக்கின்றாம். அதன் விரிவை அங்கே கண்டுகொள்க.

இவர்தந் தந்தையார் பெயர் '**பகவன்**' எனப்படுமென்றும், இப்பகவன் தமிழ்நாட்டுத் தாபத வொழுக்கத்தினரான ஓர் அந்தணராவரென்றும், இவர்தம் அன்னையார் கருவூரிற் புலையர் குலத்திற் பிறந்து '**ஆதி**' எனப் பெயர் பெற்றவரென்றுங் **கபிலரகவல்** கூறுகின்றது. இனி, **ஞானமிர்தம்** என்னும் வீட்டுநூல் திருவள்ளுவரின் தந்தையார் பெயர் 'யாளிதத்த முனிவர்' எனக் கூறுமேனும், இவர்தம் அன்னையார் ஒரு புலைச்சி யென்றே மேலைவரலாற்றோடு ஒருப்பட்டுரைக்கின்றது. யாளிதத்தமுனிவரென்பது இயற்பெயராகவும், பகவன் என்பது சிறப்புப்பெயராகவுந் திருவள்ளுவரின் தந்தையார் ஒருவர்க்கே வழங்கிவந்தமை இவ்விருநூல்களாலும் அறியப்படும். தமிழ்நாட்டிலுள்ளவர்கள் தம்மின் மூத்தாரையுங் கல்வியறிவின் மிக்காரையும் பிறசிறப்புகள் உடையாரையும் அவர்க்குரிய இயற்பெயரான் வழங்குவது குற்றமாமெனக்கருதி, அவர்பிறந்த ஊர்ப்பெயரானுதல் அன்றி வேறு சிறப்புப்பெயர்களானுதல் அவரைச்

குறித்து உரையாடுதல் தொன்றுதொட்ட வழக்கமாய்ப் போதருகின்றது. ஆதலால், திருவள்ளுவரின் தந்தை யார்க்கு இரண்டு நூல்களில் இருவேறு பெயர்கள் ஓதப் பட்டதில் ஏதும் மாறுபாடில்லையென்க. திருவள்ளுவர் தந்தையாரின் பெயரளவிற் சிறிதுமாறுபாடு காணப்படி னும், அவர் தவவொழுக்கத்திற் சிறந்த முனிவரொருவ ரென்பதும், அவர்தம் அன்னையார் ஒருபுலைச்சியே யென்பதுங் கபிலரகவற்கும் ஞானமிர்தத்திற்கும் ஒத்தமுடிபாயிருத் தலே கருத்திற் பதிக்கற்பாலதாகும். அம்முனிவர்பிரான் விழுமிய அந்தணர்மணியா யிருந்தும், பிறப்பளவில் இழிந்தாளாகக் கருதப்படும் ஒரு புலைச்சியை விழைந்து அவளை அவர் மணந்துகொண்ட பான்மையினை நினைத் துப் பார்க்குங்கால், அத்துணைச்சிறந்த பெரியாருள்ளத் தைக் கவரத்தக்க மனநலமுங் கற்பொழுக்கமும் வனப் பும் அவ்வம்மையார் உடையராயிருந்தா ராதல்வேண்டு மென்பது இனிது விளங்காநிற்கும். தாம்ஈன்ற குழவி களை ஈன்றஇடங்களில் உள்ளார்க்கே தந்து பற்றின்றிச் சென்ற பகவனாரின் கருத்துக்கு, மாறின்றி யொழுகி, அவருடன் நிழல்போற்சென்ற ஆதியம்மையாரின் பற் றற்ற உள்ளமுங் காதற்கற்பொழுக்கமும் மிகவும் பாராட் டற் பாலனவாகும்.

இனித், தம் தந்தையார் பெயர் 'பகவன்' என்றிருத் தலையுந், தம் தாயார் பெயர் 'ஆதி' என்றிருத்தலையுங் கருதித், தம்மைப்பெற்ற அவ்விருவர்செய்த நன்றியை யும் அன்பினால் அகங்குழைந்துருகி நினைந்தமையாற் றான், ஆசிரியர் திருவள்ளுவர் தாம் இயற்றியருளிய திருக்குறள் என்னும் ஒப்புயர்வில்லாத் தனிச்செந்தமிழ் நூலின் முகத்தே கடவுள் வழிபாடு செய்கின்றுழி அம் முழுமுதற்கடவுள் பெயராக ஆதிபகவன் என்னும்

அவ்விரு வடசொற்றொடர்ந்த தொடரை முதற்செய்யுளி லேயே அமைத்தருளினார். திருக்குறள் நூன்முழுதுந் தனிச்செந்தமிழ்ச் சொற்களாலேயே யாத்திட்ட அப் பேராசிரியர், அந்நூன்முகத்திற் கடவுளைக் குறித்தற்கு எத்தனையோ பல தனித்தமிழ்ச்சொற்க ளிருப்பவும் அவற்றையெல்லாம் விடுத்து, 'ஆதிபகவன்' என்னும் வடசொற்றொடரைத் தெரிந்தமைத்தற்குக் கழிபெருங் காரணம் ஒன்றிருத்தல் வேண்டுமன்றோ? அக்காரணந் தான் யாதோவெனிற், றம் தாய்தந்தையர் தமக்குச் செய்த நன்றியை அதனால் நினைவுகூர்தற்கு அவர் விழைந்தமையே உறுபெருங் காரணமாமெனக. இங் ஙனமே, நூலியற்றும் பேராசிரியர், தம் தாய் தந்தை யர் உடன்பிறந்தார் சுற்றத்தாரைப் பற்றிய குறிப்புகளை யுந், தமது வாழ்க்கைக் குறிப்புகளையுந் தாமியற்றும் நூல்களிலே ஆங்காங்குக் குறிப்பாலும் வெளிப்படை யாலும் நுவன்றுசெல்லுதல் இயல்பு. சைவசமயாசிரி யர்களான திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நால்வருந் தாம் அருளிச் செய்த தேவார திருவாசகங்களில் தமது வரலாற்றுக் குறிப்புகளைப் பெரும்பாலும் வெளிப்படையாகவுஞ்சிறு பான்மை உய்த்துணரவைப்பாகவும் அமைத்துரைத்தல் காண்க. ஏனை நூலாசிரியர் அவர்போற் றம்முடைய குற்றங் குறைகளை இறைவனிடத்தே முறையிட்டுச் சொல்லிப் பாடுதலிலராய், அறம் பொருள் இன்பங்களை யும், ஒரு கதை தழுவிவருந் தொடர்நிலைச் செய்யுட் களையும் இயற்றினார்களாகலின் அவைதம்மிற் றம் முடைய வாழ்க்கைக் குறிப்புகளை வெளிப்படையாய்ச் சொல்ல இடம்பெறாது, அவைதம்மிற் சிலவற்றை ஆங் காங்குக் குறிப்பாகவே நுவலலாயினர். நூலாசிரியர்க்

குரிய இவ்வழக்காறு, தமிழ்நூலாசிரியர் பாலேயன்றி, ஆங்கிலம் ஆரியம் முதலான எனை மொழிநூலாசிரியர் பாலுங் காணப்படுதலும், அவருடைய நூல்களை ஆராய்ந்து நுட்பங்கள் வரையும் உரைவல்லார்கள் அதனைத் தொகுத்தெடுத் தெழுதலும் அவ்வந் நூல்வல்லார்வாய்க் கேட்டுணரப்படும். ஆகவே, இங்குத் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார், தமது தெய்வச் செந்தமிழ் மொழிமேல் வைத்தபற்றினையுஞ், செந்தமிழாசங் கண்ணுங் கருத்துமாய்ப் பேணுந் தமது காலத்து நல்லிசைப் புலவர் மேற்கொண்ட தனிச் செந்தமிழ்வழக்கினையும் பற்றி, "ஆதிபகவன்" என்னும் வடசொற்றொடரால் முழுமுதற்கடவுளுக்குத் தமது நூலின்முதலிலேயே பெயர் கூறுவாரானது, அத்தொடரின் முன்னின்ற 'ஆதி' என்பது தம் அன்னையார்க்கும், பின்னின்ற 'பகவன்' என்பது தந்தையார்க்கும் பெயராயமைந்து, அவ்விருவரையுந் தமது நினைவிற் கொணர்தல் பற்றியேயாமென்பது திண்ணம். திருவள்ளுவனாரோடு உடன் பிறந்தவரான **ஔவையாரும்,**

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"

என்று கூறியிருத்தலை உய்த்துணருங்கால் அவருந் தவ நலத்திற் சிறந்த தம்தாய்தந்தையரை நினைந்தே அங்ஙனங் கூறினார் என்பது புலனும்.

இனித், திருவள்ளுவனாரோடு ஒருவயிற்றிற் பிறந்த **கபிலர்** என்னும் அந்தணர் பெருமான் தமது வரலாற்றினைத் தங்குடியினரான பார்ப்பனர்க்குத் தெரிப்பான் வேண்டி இயற்றிய **அகவலில்,**

"அருந்தவ மாமுனியாம் **பகவற்குக்**
கருவூர்ப் பெரும்பதிக்கட் பெரும்புலைச்சி
**ஆதி** வயிற்றினில் அன்றவதரித்த

காண்முளை யாகிய கபிலனும் யானே,
என்னுடன் பிறந்தவர் எத்தனை பேரெனில்?
ஆண்பால் மூவர் பெண்பால் நால்வர்,
யாம் வளர்திறஞ் சிறிது இயம்புவல் கேண்மின்!
ஊற்றுக் காடெனும் ஊர்தனிற் றங்கியே
வண்ணார் அகத்தினில் **உப்பை** வளர்ந்தனள்,
காவிரிப்பூம் பட்டினத்திற் கள்விலைஞர் சேரியில்
சான்றார் அகந்தனில் **உறுவை** வளர்ந்தனள்,
நரப்புக் கருவியோர் நண்ணிடுசேரியிற்
பாணர் அகத்தினில் **ஔவை** வளர்ந்தனள்;
குறவர் கோமான் கொடிச்சினைப் புனஞ் சூழ்
வண்மலைச் சாரலில் **வள்ளி** வளர்ந்தனள்,
தொண்டை மண்டிலத்தில் வண்டமிழ் மயிலையில்
நீளாண்மை கொளும் வேளாண்மரபியர்
துள்ளுவரிடத்தில் **வள்ளுவர்** வளர்ந்தனர்,
அரும்பார் சோலைச் சுரும்பார் வஞ்சி
அதியன் இல்லிடை **அதியமான்** வளர்ந்தனன்,
பாரூர் நீர்நாட் டாரூர் தன்னில்
அந்தணர் வளர்க்க யானும் வளர்ந்தேன்."

என்று தம் தாய்தந்தையர் ஆதியும் பகவனும் ஆவரென வுந், தம்முடன் பிறந்தவர் உப்பை உறுவை ஔவை வள்ளி எனப் பெண்பால்நால்வரும். வள்ளுவர் அதிய மான் கபிலர்எனத் தம்மைச்சேர்த்து ஆண்பால் மூவரும் ஆவரெனவுங் கூறும் இதனினும் மிக்கதொரு சான்று பிறிதின்மையிற் றிருவள்ளுவரின் பெற்றோர் ஆதியும் பகவனுமே யென்றலிற் சிறிதும் மாறுபாடில்லையென்க.

இனி, **இக்கபிலரகவல்** எளிய தமிழ்நடையில் இயற்றப்பட்டிருத்தல் காண்டிங். கபிலர்க்குப் பூணூல் இட ஒருப்படாத பார்ப்பனக் குழுவினர்க்கு அறிவு

தொட்டல்வேண்டிச் சிறுபிள்ளையாயிருந்த கபிலர் இத
னைச் செய்தாரென வழங்குங்கதை நம்பத்தகாததாயிருத்
தல் கொண்டும் இது கபிலராற் செய்யப்பட்டதன்றென்
றும், இஃதொரு "கட்டுநூல்" என்றுங் கூறினாருமுளர்.
இக்கபிலரகவல் இயற்றப்பட்டதற்குக் காரணங் கூறுங்
கதை நம்பத்தகாததுபற்றி இந்நூலையே கட்டுநூலென்றல்
ஆராய்ச்சியுணர்வில்லாதார் கூற்றாகும். கல்விநலம் மன
நலம் ஒழுக்கநலம் முதலியவைகளை நோக்காது, இந்நலங்
கள் இல்லாரையும் பிறப்பளவில் உயர்த்துதலும், இந்நலங்
கள் உடையாரையும் பிறப்பளவில் இழிவுபடுத்துதலுஞ்
செய்து போந்த அஞ்ஞான்றைப் பார்ப்பனமாந்தர்க்கு
அறிவுகொளுத்தும் பொருட்டாகவே இவ்வரியநூல்
கபிலரால் இயற்றப்பட்டதென்பது மட்டும் மறுக்கப்படா
ததாகும்; இதற்கு அகச்சான்றாகப் போந்த,

"பார்ப்பன மாந்தர்காள் பகர்வது கேண்மின்!
இறந்தவராய் உமை இல்லிடை யிருத்திப்
பாவனைமந்திரம் பலபட உரைத்தே
உமக்கவர் புத்திரர் ஊட்டின போது
அடுபசியாற் குலைந்தாங்கவர் மீண்டு
கையேந்தி நிற்பது கண்டதார் புகலீர்!
அருந்திய உண்டியால் யார் பசி கழிந்தது?
ஒட்டியர் மிலேச்சர் ஊணர் சிங்களர்
இட்டிடைச் சோனகர் யவனர் சீனர்
பற்பல நாட்டினும் பார்ப்பார் இலையால்;
முற்படைப்பதனில் வேறாகிய முறைமைபோல்
நால்வகைச் சாதி இந்நாட்டில் நீர் நாட்டினீர்!
மேல்வகை கீழ்வகை விளங்குவது ஒழுக்கால்;
பெற்றமும் எருமையும் பிறப்பினில் வேறே,
அவ்விருசாதியில் ஆண் பெண் மாறிக்

கலந்து கருப்பெறல் கண்டதும் இலையோ?
இருவகைச் சாதியார் மக்கட் பிறப்பினில்
இருவகையாக நீர் இயம்பிய குலத்துள்
ஆண் பெண் மாறி யணைதலும் அணைந்தபின்
கருப்பொறை யுயிர்ப்பதுங் காண்கின்றிலிரோ?
எந்நிலத் தெந்தவித் திடப்படுகின்றதோ
அந்நிலத் தந்தவித் தங்குதித்திடுமால்,
மாறி வேறாகும் வழக்கம் ஒன்றிலையே;
பூசுரர்ப் புணர்ந்து புலைச்சியர் ஈன்ற
புத்திர ராயினோர் பூசுரர் அல்லரோ?
பெற்றமும் எருமையும் பேதமாய்த் தோன்றல்போல்
மாந்தரிற் பேதமாம் வடிவு எவர் கண்டுளார்?
வாழ்நாள் உறுப்பு மெய் வண்ணமோடு அறிவினில்
வேற்றுமை யாவதும் வெளிப்பட வின்றே;
தென்றிசைப் புலையன் வடதிசைக் கேகிற்
பழுதற ஓதிப் பார்ப்பான் ஆவன்;
வடதிசைப் பார்ப்பான் தென்றிசைக் கேகின்
நடையது கோணிப் புலையன் ஆவன்; அதா அன்று
சேற்றிற் பிறந்த செங்கழுநீர் போலப்
பிரமற்குக் கூத்திவயிற்றிற் பிறந்த வசிட்டரும்,
வசிட்டர்க்குச் சண்டாளிவயிற்றிற்பிறந்த சத்திய
சத்தியர்க்குப் புலைச்சிதோள் சேர்ந்துபிறந்த [ரும்,
பராசரும்,
பராசர்க்கு மீன்வாணிச்சி வயிற்றிற்பிறந்த
வியாசரும்
வேதங்கள் ஓதி மேன்மைப்பட்டு
மாதவர் ஆகி வயங்கினரன்றோ?"

'என்னும் அக்கபிலரகவலின் அடிகளே அவ்வுண்மையைப் புலப்படுத்துவனவாம். சாதிவேற்றுமையென்பது

இறைவனது அமைப்பிலேயே வடிவ வேறுபாடுடைய விலங்கினங்களுக்கேயல்லாமல், வடிவ வேறுபாடு சிறிதும் இல்லா மக்களுக்கு இசையாதென்பதை, மேற்போந்த அடிகளில் ஆசிரியர் கபிலர் எத்துணை நுட்பமாக எடுத்துக்காட்டியிருக்கின்றார்! ஆவும் எருமையும் இயற்கையமைப்பிலேயே எவ்வளவு வேறுபட்ட வடிவம் வாய்ந்தனவாயிருக்கின்றன! ஆவும் எருமையுந் தத்தஞ்சாதியிலுள்ள ஆணையே கூடிக் கருவுறுகின்றன அல்லாமல் மாறிக் கூடிக் கருப்பெறல் இல்லையன்றே! மற்று, மக்களெல்லாரும் ஒரே யியற்கை யமைப்பினை யுடையராயுஞ், செயற்கையாக வகுக்கப்பட்ட சாதி முறையில் அடங்காது ஆண் பெண் மாறிக் கலந்து கருவுற்று அதனை உயிர்ப்பவராயும் இருத்தலை யறியாதார் யார்? இறைவன் இயற்கையமைப்பிலேயே பார்ப்பனரை வகுத்தனனென்று அவர் கட்டிவிட்ட புராணகதை கூறுவது உண்மையாயின், இந்நிலவுலகத்தின் ஒருசிறு பகுதியாகிய இவ்விந்தியநாட்டின் மட்டுமேயன்றி, மற்றை நாடுகள் எல்லாவற்றின்கண்ணுமுள்ள மற்றை எல்லாமக்கட் குழுவுகளிலும் பார்ப்பனசசாதியானது காணப்படுதல்வேண்டும்; மற்று, ஒட்டியர், மிலேச்சர், ஊணர், சிங்களர், சோனகர், யவனர், சீனர்முதலான மக்கட்கூட்டத்தாரிற் பார்ப்பனச்சாதி காணப்படாமையின் அவரது புராணக்கூற்று வெறும்பொய்யேயல்லால் உண்மையன்று என ஆசிரியர் அதனை எடுத்துக் காட்டி விளக்கிய திறம் பெரிது! பெரிது! மேலோர் கீழோர் என வழங்கும் வழக்கெல்லாம் அவரவர்தம் ஒழுக்கத்தின் உயர்வானும் இழிபானும் உண்டாயின பான்மையை "மேல்வகை கீழ்வகை விளங்குவது ஒழுக்கால்" என்றுஞ், "சிறப்புஞ் சீலமும் அல்லது, பிறப்பு நலங்

தருமோ பேதையீரே" என்றுங் கபிலர் அறிவுறுத்திறை போலவே, இவர்தந் தமையனார் திருவள்ளுவரும்,

"ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்" என்றும்,

"மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்" என்றும்,

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமையால்" என்றும்,

"மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல்லவர்" என்றும் அருளிச் செய்திருத்தல் நினைவிற் பதிக்கற் பாற்று.

மேற்காட்டியவாற்றால் இக்கபிலரகவல் என்னுஞ் சிறந்த தமிழ்நூல், சாதியிறுமாப்புக் கொண்டு, தம்மவரல்லாத பிறரிற்றோன்றிய சான்றோரை யெல்லாம் இழித்துக்கூறி, அவரது அறிவின் பயனை மக்கள் பெறவொட்டாது தடைசெய்யும் பார்ப்பனவகுப்பினர்க்கு அறிவு தெருட்டும்பொருட்டு ஆக்கப்பட்டதொன்றுதல் தெற்றென விளங்குதலின், இதனைக் கட்டுநூலென்றார் உரை மெய்ம்மை யுணராக் கட்டுரையேயாமென்க.

மேலும், ஊற்றுக்காட்டில் உப்பை என்னுந் தம் தமக்கையார் பிறந்து ஒரு வண்ணாரகத்தில் வளர்ந்தமையுங், காவிரிப்பூம்பட்டினத்திற் கள்விற்பார் சேரியில் தம் மற்றொருதமக்கையாரான உறுவை பிறந்து ஒரு சான்றார் வீட்டில் வளர்ந்தமையும், அப்பட்டினத்திலேயே யாழ் பயிலும் பாணச்சேரியில் ஓர் யாழ்ப்பாணரில்லில் தம் மற்றொருதமக்கையாரான ஒளவையார் வளர்ந்தமையும், வள்ளிமலையில் தினைப்புனஞ்சூழ்ந்த மலைச்சாரலில் தம் மற்றொரு தமக்கையாரான வள்ளி பிறந்து ஒரு குறவர் தலைவன் வீட்டில் வளர்ந்தமையுந், தொண்டைமண்டி-

லத்தின் கண்ணதான திருமயிலாப்பூரில் தந் தமையனு ரான திருவள்ளுவர் பிறந்து ஒரு துளுவவேளாளரிடத் தில் வளர்ந்தமையும், வஞ்சிமாநகரிற் றம்மற்றொரு தமை யனுரான அதியமான் பிறந்து அதியமான் இல்லில் வளர்ந் தமையுங், கடைமுறையாக எல்லார்க்கும் இளவலாகிய தாந் திருவாரூரிற்பிறந்து ஓர் அந்தணர் இல்லில் வளர்ந்த மையும் நிகழ்ந்தன நிகழ்ந்தாங்கு எடுத்துக்கூறும் இவ் வுண்மைநூலைக் கட்டுநூலென்றூர் உரையே பெருங்கட் டாயிருக்கின்றது !

மேலுந், தம்மை யுயர்த்தி மற்றை யெல்லாவகுப் பினரையும், வேசிமக்கள் அல்லது அடிமைகள் எனப் பொருள்படுஞ் "சூத்திரச்" சொல்லால் வழங்கும் பார்ப் பனரின் நூல்களாகிய "மிருதி"களையும் "புராணங்களை" யும் "வேதங்களை"யும் பார்ப்பனர்கள் தாமே எழுதி வைத்துக்கொண்டு, அவைகளைத் தாமெழுதிய நூல்கள் என்றூல் அவற்றுள் நடுவிகந்து சொல்லியவைகளைப் பிறர் நம்பாரெனக்கருதி, அவைகளெல்லாம் இறைவன் அரு ளிச்செய்தவைகள் என்று அவர்கள் கட்டிவிட்டாற் போல, இக்கபிலரகவல்நூலில் உலகவியற்கை மக்களியற் கைக்கு வேருய் நடுவிகந்து கட்டிச்சொல்லப்பட்டது ஏதேனும் ஒரெட்டுணையாயினும் உண்டா? ஒருசிறிது மில்லையே. இக்கபிலரகவலிற் சொல்லப்பட்ட அறங்கள் அத்தனையும் எல்லா மதத்தவராலும் எல்லா மக்கட் பிரி வினராலும் உவந்தேற்றுக் கொள்ளப்படும் விழுப்பம் வாய்ந்தனவாயிருத்தல், அதன் மேற்காட்டிய பகுதிக ளால் விளங்குவதொடு பிற்காட்டப்படும் பகுதியானும் நன்குவிளங்குதல் காண்க.

"மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ?
காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ?

மாநிலஞ் சுமக்க மாட்டேனென்னுமோ?
கதிரோன் சிலரைக் காயேனென்னுமோ?
வாழ்நான்கு சாதிக் குணவு நாட்டிலுங்
கீழ்நான்கு சாதிக் குணவு காட்டிலுமோ?
திருவும் வறுமையுஞ் செய்தவப் பேறுஞ்
சாவதும் வேறிலை தரணி யோர்க்கே.
குலமும் ஒன்றே, குடியும் ஒன்றே,
இறப்பும் ஒன்றே, பிறப்பும் ஒன்றே,
வழிபடு தெய்வமும் ஒன்றே, யாதலால்,
முன்னோர் உரைத்த மொழிதவறாமல்
எந்நாளாயினும் இரப்பவர்க் கிட்டுப்,
புலையுங் கொலையுங் களவுந் தவிர்ந்து,
நிலைபெற அறத்தின் நிற்பதை அறிந்து,
ஆணும் பெண்ணும் அல்லதை உணர்ந்து,
பேணி யுரைப்பது பிழையெனப் படாது.''

என்னும் இப்பகுதி எத்துணை மேதக்க அறவுரை பொதிந்ததாய் எந்நாட்டவரானும் எக்கொள்கையினரானும் பொன்னேபோற் போற்றற்பாலதாயிருக்கின்றது! கந-அ-அடிகளேயுடைய இக்கபிலரகவலிற் பொதிந்துள்ள அறவுரைகளத்தனையுந், திருக்குறளிற்போந்த அறவுரைகளோடு ஒத்து, அவற்றினுஞ் சுருக்கமுடையனவாய்ப், பயில்வோருள்ளத்திற் பசுமரத்தாணியெனப் பதியுங் கூர்மைவாய்ந்து திகழ்கின்றன. இத்துணைச்சிறந்த அறவுரை பகரும் ஒரு விழுமியநூலை ஒருவர் பொய்யாகக்கட்டி, அதனைக் கபிலர் பெயராற் புனைந்து விட்டாரென்னும் பொய்யுரையினும் மிக்கதொருபுளுகுரையினை யாண்டுங் கண்டிலேம்.

மேலும், ஒருவர் தம்மை யுயர்த்துதற்பொருட்டுப், பொய்யான பலகதைகளைக்கட்டி ஆக்கியதொரு நூலா

யின் அதனைக் கட்டுநூலென்றல் வாய்வதேயாம். மற்று, இக்கபிலரகவலின் ஆசிரியராகிய கபிலரோ தம் அன்னை புலைச்சி யென்றும், அவள் ஒரு முனிவரைக் கூடித் தம் மையுள்ளிட்ட எழுவர் மக்களைப் பயந்தனளென்றும்; அவருள் ஒருவர் வண்ணாரகத்திலும், மற்றொருவர் கள்விற் பார்சேரியிற் சான்றார் வீட்டிலும், மற்றொருவர் பாணரில்லிலும், பின்னுமொருவர் குறவர் குடிசையிலும், ஏனையொருவர் துளுவவேளாளரகந்தனிலும், வேறொருவர் அதியமான் இல்லிலுந், தாம் அந்தணரகத்திலும் வளர்ந்தனரென்றுந் தமது பிறப்பினிழிவையுந், தம்முடன் பிறந்தாரிற் பலர் இழிந்த குலத்தாரிடம் வளர்ந்த இழிவையுந் தினைத்தனையும் ஒளியாமல் நிகழ்ந்தவற்றை நிகழ்ந்தவாறே எடுத்துரைக்கும் பொய்யாநாவிற் சான்றோராகிய கபிலர் பெருமான் ஆக்கிய இவ்வுறுதிநூலைக் கட்டுநூலென்றார் உரையே பெரியதொரு பொய்க் கட்டாம். பொய்கூறா அறம்புரிநெஞ்சம் உடையராயிருந்தமைபற்றியே இவரை இவரதுகாலத்து நல்லிசைப்புலவர்களான மாறோக்கத்து நப்பசலையார் "பொய்யாநாவிற் கபிலன்" என்றும், பொருந்திலிளங்கீரனார் "புலனழுக்கற்ற அந்தணாளன்" என்றும், பெருங்குன்றூர்கிழார் "வெறுத்தகேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" என்றும் புகழ்ந்தேத்தினர். இது கட்டுநூலாயின், எழுவரின் இழிந்த பிறப்பும், அவர் பெயரும், அவர் பிறந்த ஊரும், அவர் வளர்ந்த இடமும், அவரிற் பெரும்பாலார் வளர்ந்த இழிந்த குடியும், எல்லாமக்களுயிர்க்கும் உறதிபயக்கும் விழுமிய அறவுரைகளும் இதன்கட் சொல்லப்படுமோ வென்று நடுநின்று ஆராய்ந்து காணவல்லார்க்கு, இதனைக் கட்டுநூலென்று கரைந்தார் பார்ப்பனரும் அவர் வழிப்பட்டார் சிலருமேயல்லால், ஏனைப் பொய்யாநாவினர், அங்

யனஞ் செய்யாரென்பது தெற்றென விளங்கா நிற்கும். இக்கபிலரது காலத்துக்கு நானூறாண்டு பிற்பட்டிருந்த கபிலதேவநாயனாரே திருவாதவூரிற்பிறந்தவர்; அவரியற்றிய நூல்கள் பதினோராந்திருமுறையிற் போந்த "மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை" முதலியனவாகும். இவ்விருகபிலரும் வேறுவேறுதல் காணமாட்டாதார் இருவரையும் ஒருவரெனமயங்கிப் பெரியதொரு குழப்பஞ்செய்வர். மூத்தநாயனாரென்னும் விநாயகரது வணக்கம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற் றோன்றியதாகும்.

இனி, இக்கபிலரகவற் செய்யுள் நடைக்கும், புறநானூற்றின்கட் காணப்படுங் கபிலரது செய்யுள் நடைக்கும் வேறுபாடு உளதன்றோ? இக் கபிலரகவற்செய்யுள் நடை எளியதாயிருக்கப், புறநானூற்றின்கட் காணப்படுங் கபிலர்செய்யுட்களின் நடை அரிய தொன்றாயிருக்கின்றதன்றோ? ஆதலால், இருவேறு வகைப்பட்ட அவ்விரண்டையுங் கபிலரே ஆக்கினாரென்றல் யாங்ஙனம்பொருந்துமெனிற்; சாதியிறுமாப்புக்கொண்டு தம்மை இழிபுபடுத்திய பார்ப்பனரை நேர்முகப்படுத்தி அவர்க்கு அறிவு தெருட்டுமா றியற்றிய இவ்வகவலில், அவர்க்கு விளங்காத திரிசொற்களைப் புணர்த்தி இதனை ஆக்கினராயின், இவரது அறிவுரை அவர்க்குப் பயன் படாதுபோம். ஆதலால், அவரெல்லார்க்கும் எளிதிற் பொருள் விளங்கத்தக்க தமிழியற்சொற்களினாலேயே ஆசிரியர் தமதறிவுரையினை இதன்கண் அமைத்துரைக்கலாயினர். ஆயினும், இதன் தமிழ்நடையும் இதன்கட் சொல்லப்பட்ட பொருளும் மேதக்க சிறப்பு வாய்ந்து, புறநானூற்றிற்போந்த இவருடைய செய்யுட்டிறனை ஒத்திருத்தல் தமிழ் வல்லார்க்கெல்லாம் இனிது விளங்கிக் கிடத்தலின், எளியநடையொன்றேபற்றி இஃதவர் இயற்

றிய தன்றெனக் கிளத்தல், தமிழ்நடைச்சுவையும் அறப் பொருள்வளமும் அறியாதார் செயலேயாமென்க. ஓராசிரியரே ஒருகால் எளிய நடையிலும், பிறிதொருகால் அரிய நடையிலும் நூலியற்றுதல்கூடும். அங்ஙனம் இரு வகை நடையில் ஓராசிரியரே காலமும் இடனும் நோக்கி நூல்கள் இயற்று மாற்றினைத் தமிழ்மொழியின் மட்டுமே யன்றி ஆங்கிலம் ஆரியம் முதலிய மொழிகளிலுங் கண்டு கொள்க. என்றிதுகாறுங் கூறியவாற்றால், திருவள்ளுவர்தந் தம்பியாராகிய கபிலர் இயற்றிய 'கபிலரகவல்' என்னும் மெய்ந்நூலால் தேற்றமாகவும், 'ஞானமிர்தம்' என்னும் வீட்டுநூலாற் சுருக்கமாகவும் நுவலப்பட்ட படி திருவள்ளுவர்தந் தாய்தந்தையர் ஆதியும் பகவனு மேயாவரென்பதூஉம், ஆதியென்னும் அவர்தம் அன்னையார் புலையர் குடியிற்றோன்றி மேதகு பெண்மைக்குணங்கள் நிரம்பப்பெற்றவராய்த் திகழ்ந்தன ரென்பதூஉம், அவர்தந் தந்தையார் தமிழ்நாட்டுத் தாபதவொழுக்கத் திற் றலைநின்ற ஒரு முனிவரே யாவரென்பதூஉம், இவ் விருவருங் கூடிப்பெற்ற அருமை மகார் எழுவரில் முதலிற்பிறந்த நால்வரும் பெண்மக்களாவரென்பதூஉந், தமிழ்நாடுசெய்த தன்னிகரில்லாப் பெருந்தவத்தால் அப் பெண்மக்கள் நால்வர்க்குப் பின் ஐந்தாம் பிள்ளையாகத் தோன்றியவரே திருவள்ளுவராவரென்பதூஉம், இவர் திருமைலாப்பூரிற் பிறந்தருளித் துளுவவேளாளரொருவராற் சிறிதுகாலம் வளர்க்கப்பட்டன ரென்பதூஉம் நன்கு புலனாகாநிற்கும்.

அற்றேல், நல்கூர் வேள்வியார் என்னும் பழைய புலவரொருவர் பாடிய,

"உப்பக்கம் நோக்கி உபகேசி தோண் மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப—இப்பக்கம்

மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு”

என்னுஞ் செய்யுளில் வடதிருமதுரைக்குச் சிவபிரான் களைகண் ஆயினாற்போலத் தென்றிருமதுரைக்குத் திருவள்ளுவர் களைகணாயினா ரென்பது சொல்லப்பட்டதே கொண்டு, திருவள்ளுவர் பிறந்த இடம் திருவாலவாயே யாகுமென்றாரும் உளர். ஆனால், திருவள்ளுவர் தாமியற்றிய ஒப்புயர் வில்லாத் திருக்குறள் நூலைத் திருவாலவாய்ச் செந்தமிழ்க் கழகத்தில் அரங்கேற்றிய காலந் தொட்டு அப்பாண்டிமாநகருக் குண்டான தனிப்பெருஞ் சிறப்பை அச்செய்யுள் தெரிக்க வந்ததன்றி, அவர் அங்குப் பிறந்தருளினாரென்று அது கூற வந்திலாமையின், அதற்கவ்வாறு பொருள்கொண்டாருரை சிறிதும் பொருந்தாது; மேலுந், திருவள்ளுவமாலைக்கு உரையெழுதிய ஆசிரியரும் அச்செய்யுளுக் கெழுதிய உரைக் கீழ்க்குறிப்பில் “நாயனாராலே திங்கட் குடையுடைச் சீர்சால் வழுதியுஞ் சங்கப்புலவருந் தலைத்தனிமேதாங்கிய மதுரைக் குண்டான சிறப்புச் சொல்லியபடி” என்றெழுதினாரல்லது, அவர் ஆண்டுப் பிறந்தருளின சிறப்புச் சொல்லியபடி என்றெழுதாமையும், அச் செய்யுளிற் றிருவள்ளுவரது பிறப்பைப் பற்றிய குறிப்பு ஏதுங் காணப்படாமையுங் கருத்திற் பதிக்கற் பாலனவாகும்.

இனி, மேலைச் செய்யுளிற் போந்த ‘உபகேசி’ என்பதற்கு “நப்பின்னைப் பிராட்டி” என்று கேமிநாத உரைகாரர் கூறியதே கொண்டு ‘உபகேசி தோண் மணந்தான்’ என்றது கண்ணபிரானை யென்று உரை கூறினாருமுளர்.* இருக்குவேத காலந்தொட்டு “நீண்ட சடையினையுடையான்” எனப் பொருள்படுங் ‘கேசி’

எனுஞ் சொல் சிவபெருமானுக்கே உரித்தாக வழங்கப் பட்டுவருதலானுஞ், சிவபிரான் ஓர் உருத்திரனை ஏவி வருவித்த நஞ்சினை அருந்தினனென அவ்விருக்கு வேதப் பத்தாம் மண்டிலங் "கேசி விஷஸ்ய பாத்ரேண யத் ருத் ரேணாபி பத் ஸக"† என நன்கெடுத்துக் கூறுதலானுங், "கேசிநீ" எனுஞ்சொல் உமைப்பிராட்டியார்க்கே பெயராக வடசொல் விளக்க நூல்கள் நவலுதலானுங்‡, 'கேசி' என்னுஞ்சொல் திருமாலுக்குப் பெயராகவாதல் 'உபகேசி' என்பது கண்ணன் மனைவியருள் ஒருவரான நப்பின்னைக்குப் பெயராகவாதல் பழைய வடநூலேதும் உரைப்பக் காணாமையானும், 'உபகேசி' என்பது சிவபிரானொடுகூட இருப்பவள் எனப் பொருள்பட்டு உமைப் பிராட்டியார் மேற்றாகவே வருதல் தெற்றென விளங்கா நிற்றலின், 'உபகேசி தோண்மணந்தான்' எனுஞ் சொற்றொடர் சிவபிரானையே குறிக்குமென்க. சிவபிரான் உமைப் பிராட்டியாரை மணந்து தான் அருளிச்செய்த "முத்தமிழ் வேதத்தால்" உலகியலொழுக்கத்தை நிறுத்தி வடதிருவாலவாயில் எழுந்தருளினாற் போலத், திருவள்ளுவனாரும் பாப்பம்மையாரை மணந்து தாம் அருளிச்செய்த முப்பாற் செந்தமிழ் மறையாகிய 'திருக்குறளால்' உலகியலொழுக்கத்தை நிலைபெறுத்தித் தென்றிருவாலவாயில் எழுந்தருளினாரென அவரையும் அவரருளிச்செய்த நூலையும் இறைவனோடும் இறைவனருளிச்செய்த நூலோடும் ஒப்பித்தாராயிற்று. "சதாசிவந்தத்துவம் முத்தமிழ் வேதம்"|| என்று திருமூலர் அருளிச் செய்தமையால் இறைவன்

* செந்தமிழ், க, உ. † இருக்குவேதம், கO, கஙக, க.

‡ See The Sanscrit English Dictionary of Apte.

|| திருமந்திரம், அக.

முத்தமிழ் வேதம் பகர்ந்தமை அறியப்படுமென்க. எனவே, திருவள்ளுவர் பிறந்தருளிய ஊர் திருமைலாப்பூரேயாகுமல்லது மதுரைமாநகராகாமை தெற்றெனவிளங்கா நிற்கும்.

மேலுந், திருவள்ளுவர் திருமைலேயில் ஓர் இருப்பை மரத்தின் கீழ்க் கண்ணதான குடிலொன்றிற் றோன்றினரென வழங்குந் தொன்றுதொட்ட வழக்கிற் கேற்பவே, இன்றும் அவ்விருப்பைமரமும், அவர் தோன்றிய குடிலின் அடையாளமாக அம்மரத்தின் அருகே அவரது திருவுருவம் நிறுத்திய திருக்கோயிலொன்றுந் திருமைலேயிலிருக்கின்றன; அது போலத், திருவாலவாயிலாதல் வேறெந்த ஊரிலாதல் அவை யிரண்டும் இருத்தல் அறியப்படாமையிற் றிருமைலேயே அவர் பிறந்தருளிய இடமாகுமெனக் கபிலரகவல் நவலும் வரலாறே உண்மை வரலாறாகுமென்று கடைப் பிடிக்க.

இனித், திருமைலேயில் ஒரு துளுவவேளாளர்பால் விடப்பட்டு அவரால் வளர்க்கப்பட்டு வந்த மகவைக் கண்டு, அவ்வேளாண் டலேவரின் உறவினர் "யாரோ இழிகுலத்தார் காமத்தாற்பெற்றுப் போகட்ட அகதிப் பிள்ளேயை இவர் வளர்க்கின்றார்! ஈதென்னே!" என்று பழிகூறா நிற்ப,அதற்கு மிகவருந்திய அச்செல்வர் அம்மகவைப் பிரிதற்காற்றாராய்த், தம் விளேபுலத்தில் உழுதொழில் செய்யும் பறைக்குடிகளுக்குக் குருவாய் உள்ள ஒரு வள்ளுவனே அழைத்து, அவன்கையில் அதனே ஈந்து "இதனேப் போற்றி வளர்ப்பாயாக!" எனக்கூறி, அவற்கு அதன்பொருட்டு ஆம் செலவுகட்கும் வேண்டும் பொருள் நல்கினார். அதுமுதல் அக்குழவி அவ்வள்ளுவன்பால் வளர்வதாயிற்று. அங்ஙனம் வள்ளுவனாற் போற்றி வளர்க்கப்பட்டமைபற்றியே நம் ஆசிரியர்க்குத் திரு

வள்ளுவரென்னும் பெயர் வழங்குவதாயிற்று. ஆகவே, ஆசிரியர்க்கு அது சாதிபற்றிவந்த பெயரேயாதல் திண்ணம். இஃது ஆசிரியரோடு ஒரு காலத்தினரான மாமூலனார்,

> "அறம்பொரு ளின்பம் வீடென்னும் அந் நான்கின்
> திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
> வள்ளுவன்என்பாஞேர்பேதை அவன்வாய்ச்சொற்
> கொள்ளார் அறிவுடையார்"

என்று தாமருளிய செய்யுளால், ஆன்றபுலமையிற் சிறந்து தெய்வத்தன்மை யுடையராய் விளங்கும் பெருமானைச சாதிபற்றி 'வள்ளுவன்' என இழித்துக் கூறுவோன் எவனேனும் உளனயின் அவன் அறிவில்லா மடவோனே யாவனென வலியுறுத்திச் சொல்லிய வாற்றால் நன்கு விளங்கும்.

வள்ளுவர் என்பார் பறையர்க்குக் குருமாராய்க் குறி சொல்லிப் பிழைக்கும் ஒரு வகுப்பினர் ஆவர். இச்சொல் **வள்** என்னும் முதனிலையிற் பிறந்து 'தோல் வினைஞர்' எனப் பொருள் படுவதாகும். 'வள்பு' என்பது தோலிற் செய்த வாரை யுணர்த்துதல், "மாசற விசித்த வாருறு வள்பின்" என்னும் **புறநானூற்று** னும் (௫0), "வள்புதெரிந் தூர்மதி வலவ" என்னும் **ஐங்குறுநூற்று**னும் (சஅரு) அறியப்படும். வாரைக் கொண்டு இறுக்கிக் கட்டப்படும் பறையினை அறைந்து ஊரார்க்குச்செய்தி யறிவிக்குந் தொழிலினையுடையார் வள்ளுவரெனப் பட்டமை,

> "திருநாள் படைநாள் கடிநாள் என்றிப்
> பெருநாட் கல்லது பிறநாட்கு அறையாச்
> செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்"

எனப் பெருங்கதையுட் போந்த பகுதியானும் (௨, ௩௨—௩௪) நன்குவிளங்கா நிற்கும். இங்ஙனம் பறை ப்பறையுந் தொழிலினையுடையார் பண்டைக் காலத்திற் 'பறையர்' ஆயினதுபற்றி, அவரிற் சிறிது ஏற்றமுடை யார்க்கு 'வள்ளுவர்' எனும் பெயர் வழங்கலாயிற்று; யாங்ஙனமெனிற், பிறர் தமக்கு நேரும் ஊழ்வினைப் பயன்களை நன்களந்துரைக்குந் தொழில், பின் நேர் வதனைப் பறைசாற்றி யறிவிக்குந் தொழிலோடு ஒப்பு மை யுடையதாகலின் என்பது. கல்வியறிவு சிறிது மில்லாப் பறையர்க்குட் கோணூற் புலமை நிரம்பிப், பிறர்தம் வினைப்பயன்களை அளந்துரைக்கும் வள்ளுவர், அவரின்வேறாய், அவர்க்குக் குருமாராய் அமைந்து பாராட்டப்படுதல் இயற்கையேயாம்.

இனி, நம்பேராசிரியர் இங்ஙனம் வள்ளுவரெனப் பெயர் பெற்றதன் காரணம் உணராமையினாலோ, அல் லது அவரது சாதியிழிபினை மறைத்து அவர்க்கோர் ஏற றங்கற்பிக்க விழைந்த கருத்தினாலோ, உலகத்தின்கண் ணுள்ள எல்லாச்சாதியினராலும் எல்லாமதத்தினராலும் ஒருங்கு தழுவப்படுஞ் செந்தமிழ்மாமறையை உலகத் தினர்க்கு வழங்கிய நல்லிசைப்புலவர் மாமணியை உயர் குலத்தவராகக் கூறவேண்டுமென்னுஞ் சாதிப்பற்றினா லோ, ஒருசாரார், ஆசிரியர் அரியபெரிய பொருள்கள் அகத்தடங்கிய 'திருக்குறளை' உலகிற்கு வழங்கியருளின வள்ளன்மைதோன்ற அவர்க்கு வள்ளுவர் எனும்பெயர் வழங்கலாயிற்றென் றுரைகூறினர். அச்சொல் அவர் கூறுமாறு வள்ளன்மைப்பொருள் பயப்பதாயின், அது 'வள்ளல்' என நிற்கவேண்டுமல்லால் 'வள்ளுவர்' என நில்லாது. தொல்லாசிரியர் நூலுரைவழக்கில் யாண்டும் வள்ளுவர் என்னுஞ்சொல் வள்ளன்மைப்பொருள் தரக்

காணமையின், அச்சொல்லுக்கு யாங்கூறியதே உண்மைப்பொருளாதல் திண்ணமென்க.

இனி, மற்றுமொருசாரார் "வள்ளுவன் என்னுஞ் சொல்லிற்குக் கற்றுணர்ந்தவன் என்பது தாதுப்பொருள்" என்று பொருளுரைத்தார். 'வள்' என்னும் முதனிலையால்உணர்த்தப்படும் பலபொருள்களுட் 'கற்றுணர்தல்' என்னும் பொருளும் ஒன்றென்பது பழையதமிழ் நூல் எதனுலும் பெறப்படவில்லை. அற்றன்று, 'வள்' என்பது செழுமை என்னும் பொருளில் வருமாகலின், இவ்விடத்திற்கு ஏற்பக் 'கல்விச்செழுமை' என்று பொருளுரைத்தலே எமது கருத்தாகுமெனின்; அது பொருந்தாது; 'வள்' என்னும் முதனிலையே கல்விச்செழுமையினை உணர்த்துவதன்று; அஃது ஈறு இடைநிலைமுதலான உறுப்புகளொடுகூடி ஒரு சொற்றொடரில் நின்றவழி, அச்சொற்றொடர்ப் பொருளுக்கு இணங்க ஒரோவொருகால் அப்பொருள் உணர்த்தாநிற்கும். இன்னும், அஃது அங்ஙனம் பொருளுணர்த்துவதும், 'பம்,' 'அம்' முதலான ஈறுகளொடு புணர்ந்து 'வளப்பம்' 'வளம்' என்றாகிச், 'சொல்வளப்பம்,' 'கல்விவளம்' என வேறு சொற்களோடு இயைந்து நின்றவழியேயாம். மற்று, வள்ளுவர் என்னுஞ் சொல்லின் முதனிலையாகிய 'வள்' என்பதற்கோ வேறுபொருளுளதாதலை முன்னரே காட்டினமாகலானும், அதன் ஈறு சாரியைமுதலியன வேறுபட நிற்றலானும் அதற்கு அப்பொருளுரைத்தல் சாலாதென்க.

இனித், தமக்கு வளர்ப்புத்தந்தையாய் அமைந்த வள்ளுவத்திருமகன் கல்வியிற்சிறந்தவனுகலின், அவனுலும், அஞ்ஞான்றிருந்த ஏனைத்தமிழாசிரியராலுந் தமிழ் இலக்கண இலக்கியங்களும் பலகலைநூல்களுங் கற்பிக்கப்பட்டு, இயற்கையிலே நுண்மாண் நுழைபுலமுடையரா

யிருந்த நம் ஆசிரியர் கலைநிரம்பிய முழுமதியெனக் கல்வி யறிவும் இயற்கையறிவும் ஒருங்கு நிரம்பித் திகழ்ந்தனர். இவ்வாறு நம் ஆசிரியர் செந்தமிழ்ப்புலமைக்கு ஒருவரம் பாய்ப் பொலிவுறுகின்றகாலத்து இவர்க்குக் கட்டிளமைப்பருவம் நிரம்பிற்று.

அப்போது, காவிரிப்பாக்கம் என்னும் ஊர்க்குத் தலைவராய் ஆயிரம் ஏர்வைத்து உழவுதொழில் நடாத்து வாரான **வழித்துணைவர்** (மார்க்க சகாயர்) எனப் பெயரிய ஒரு வேளாண்செல்வர் தம்முடைய விளைபுலம்கள் வித்திடப்பட்டுப் பயிர்கிளைக்குங்காலத்து யாரும் அறியாமலே கருகியழிந்து முழுவதூஉம் பாழாய் விடுவது கண்டு மிகவருந்திப், "பல்லாயிர ஏழைமக்கள் பசிப்பிணியால் வருந்த இவையிங்ஙனம் அழிகின்றனவே! என்செய்வேம்! இக்குறையினை நீக்கும் பெரியார் எவரேனும் உளராயின், அவர்க்கு என் அருமைமகளை வாழ்க்கைப்படுத்துவேன்" என்றெண்ணி, "இதுநீக்க வல்லார் யார்?" என்று பலரையும் வினவிவாலானார். பின்னர் நம் ஆசிரியரது பெரும்புகழ் எங்கும் பரவவே, வழித்துணைவர் அவரை யணுகிப் பணிந்து, "அருட் பெருந்தகையே, ஏழைமக்கள் பலர் பிழைத்தற்கு உதவியாயுள்ள அடியேனது விளைபுலம் பயிர் இலை விரியுங் காலத்திற் கருகிப் பாழாய்விடுகின்றன! பலர் அதனால் மிகவறியராகிப் பசிப்பிணியாற் சொல்லுதற்கரிய துயர் உழக்கின்றனர்! அடிகளது அருட்கடைக்கண்நோக்கம் அதன்மேற் படுமாயின், அக்குறைதீர்ந்து அது பலர்க்கும் பயன்படும்" என்று தமது பெருங்குறையினைத் தெரிவித்துக் கொண்டனர். அதனைச்செவியேற்ற ஆசிரியர் அச்செல்வரின் கசிந்த வேளாண்மை யுள்ளப்பெற்றி யுணர்ந்து, தாமே அவ்வூர்சென்று, அவ்விளைபுலங்களை

நோக்கி, அவை தம்மை இறைவன் திருவருள் நிலைய மாக நினைந்து,

"வித்தும் இடல்வேண்டுங்கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்" என்னுந்திருக்குறட்

பாவினை மொழிந்தருளினூர். ஆசிரியரது கடைக்கண் நோக்கம் பட்ட அப்பொழுதே அவ்விளைபுலங் கொழுமையுற்று இடையூறுதீர்ந்து பெருவிளைச்சல் விளைந்தன. அதனுற் பல்லுயிர்களும் பசிப்பிணி நீங்கி மகிழ்ந்தன.

ஆசிரியரது அருட்பெருந்தகைமையினையும் அவர் தம்பேராற்றலினையும்நேரேகண்டவழித்துணைவர்பெரிய தொருவியப்பும் உவகையும் நிரம்பிய உள்ளத்தினராய் அவரைப்பணிந்து, "பெருமானே, அடியேற்கு நேர்ந்த இப்பெருங்குறையினை நீக்குவார்க்கு என்மகளை வாழ்க்கைப் படுத்துவேன் என்றோர் உறுதி செய்துளேன்" எனத்தாங்கொண்டகுறிக்கோளைத்தெரிவித்தார். அஃது உணர்ந்த ஆசிரியர் "நம்மகள் யாம் தரும் இவ் இருப்புக் கடலையினைச் செவ்வையாக அவைத்துத் தருகுவளா யின், யாம் அவளை மணஞ்செய்துகொள்ள ஒருப்படுவேம்" என மொழிந்தனர். இருப்புக் கடலை என்பன இரும்பினுற் செய்தவைகள் அல்ல; கடலையிலேயே எளி தில் வேகாத ஒருவகையே இருப்புக்கடலையென வழங்கப்பட்டுவருகின்றது. வழித்துணைவருர் அக்கடலையினைப் பெற்றுக்கொண்டு போய்ப் **பாப்பம்மையார்** (வாசுகி) என்னுந் தம் அருமைப்புதல்விபார் கையிற் கொடுத்து, நாயனுரது உள்ளக்கிடக்கையினை அறிவிப்ப, அந்நங்கை யார் "அத்துணைப் பெரிய அறிவாளரே இவ் அவைத் தற்கு இசையும் எனக் கருதி விடுத்தனராகலின், இஃது அவர் குறித்தவாறே வெந்து பதமாகும்" என நினைந்து, பிறிதுரையாது, அவைதம்மை வாங்கி மணமுஞ் சுவை

யும் பெருகச் சமைத்து, ஆசிரியர்க்குப் படைத்திட்டார். அது கண்ட நம் நாயனார் அவ்வருமை நங்கையாரை மணம்புரிந்தருளி, அவருடன் பூவும் மணமும்போற், பாலுந்தேனும்போற், பழமுஞ் சாறும்போல் ஒருங்கிருந்து இல்லறம் நடாத்திவரலானார். இவர் நடாத்திய இல்லறவாழ்க்கையின் மாட்சியினைப் பின்னே எடுத்துக் காட்டுவாம்.

## பழம் பிறவி நினைவு

கடார (பர்மா) தேயத்துப் பௌத்தமத மக்களுடன் நெருங்கிப்பழகி, அவர்தங் கோட்பாடுகளையும் பழக்க வழக்கங்களையும் நன்காராய்ந்து அறிந்து ஒரு சிறந்தநூல் வரைந்த ஓர் ஆங்கில ஆசிரியர்,* ஒரு பௌத்த முனிவர் தமது முற்பிறவியினை நினைவுகூர்ந்து நடந்த உண்மை நிகழ்ச்சியினையும், அதுபோன்ற வேறு சில உண்மை நிகழ்ச்சிகளையுந் தாம் எழுதிய அந்நூலின்கண் எடுத்துக் காட்டியிருக்கின்றார். அந்நிகழ்ச்சிகளை அவர் கூறுமாறே இங்கு மொழிபெயர்த்துரைக்கின்றாம்:-

"என் நண்பர் ஒருவர், ஒருசிறிய பட்டிக்காட்டுக்கு நெடுந்தொலைவில் ஒரு கானகத்தின்கண் உளதான ஒரு பௌத்தமடத்தில் ஓர் இராப்பொழுதிற்குத் தங்கவேண்டியவரானார். அவர், தமக்குக் காவலாகக் குதிரைமேல் வந்த பாடிகாவலருடன் தங்கவேண்டியிருந்தமையால், அம்மடத்தைத் தவிரத் துயில்கொள்வதற்கு வேறிடங் கிடைக்கவில்லை. அம்மடத்திற் குரியவரான பௌத்த முனிவர், அவர்களை நல்விருந்தாக ஏற்றுத், தம்மிடம்

* H. Fielding Hall; see his book "The Soul of a People," pp. 291-307.

இருந்த உணப்பொருள்களை அவர்களெதிரே வைத்து, வெறிதாயிருந்த ஓர் அறையினையும் அவர்கட்கென்று ஒழித்துக்கொடுத்தார். அதனால் அவருடன் வந்தவர்களும் அன்றிரவு அங்கே தங்கியிருக்கலாயினர்.

இராச்சாப்பாடு முடிந்ததும், குளிர்காய்வதற்கு ஒரு கணப்புச்சட்டி கொணர்ந்து நிலத்தே வைத்துத் தீ மூட்டப்பட்டது. உடனே அந்நண்பர் அதனருகே சென்று அமர்ந்து, அவ்வூர்த் தலைமைக்காரனிடத்தும் அம்முனிவரிடத்தும் உரையாடத்துவங்கினர். முதலில் அவர்கள், கருத்தைக் கவருஞ்செய்திகளான கொள்ளைக்காரர் செயல்களையும் பயிர் விளைச்சல்களையும் பற்றிப் பேசினர். அதன்பிற் படிப்படியே ஒன்பின்னொன்றாய் வேறு பலவற்றைப் பேசிக்கொண்டே சென்றனர். முடிவில் அவ்வாங்கிலமகன், அம்மடத்தின் அமைப்பைக் குறிப்பாய்ப்பார்த்து, அஃது, அத்தனிமையான சிற்றூரைநோக்க, மிகப்பெரிய தொன்றாயும் அழகியதாயும் அமைக்கப்பட்டிருத்தலை வியந்துபேசினர். அம்மடமானது, மிகச்சிறந்த, வளைவில்லாமல் நிமிர்ந்த தேக்கமரங்களாற் கட்டப்பட்டிருத்தலால், அதனைக் கட்டி முடிப்பதற்கு நீண்டகாலமும் மிகுந்த உழைப்பும் பிடித்திருக்குமென்றும் அவர் எண்ணினர். ஏனென்றால், அத்தகைய தேக்கமரங்கள் அவ்விடத்திற்கு அருகே எங்குமில்லை. அதனால், அவை மிக எட்டியுள்ள இடங்களிலிருந்து கொணர்ந்து சேர்ப்பிக்கப்பட்டனவா யிருக்கவேண்டுமென அவர் புகன்றனர். அதுகேட்ட அவ்விருவரில் தலைமைக்காரன் அம்மடத்தின் வரலாற்றை எடுத்துரைக்கலானான்.

பழைய நாட்களிற் காடுசூழ்ந்த குறிச்சிகளில் அமைக்கப்பட்ட மடங்கள் மூங்கில்களாற் கட்டப்பட்டு

மேலே விழல்வேய்ந்து செய்யப்பட்டனவாகும். முன்னொருகால் அத்தன்மையதாகவே இவ்விடத்தில் இயற்றப்பட்டிருந்த மடம் மிகச்சிறிய தொன்றாயுந், தாம் வைத்துநடத்தும் பள்ளிக்கூடத்திற்கு ஏற்ற வசதி வாயாததாயும் இருந்தமைகண்டு, அந்நாளில் அதன்கண் இருந்த ஒருதுறவி மனம்புழுங்கி, வலியதாக ஒருபெரிய மடங்கட்டி முடித்தலைக்கருதி, அதற்காக ஒரு மழைகாலத்தில் தேக்கநாற்றுகளை வருவித்து அவற்றை அம்மடத்தைச்சூழ நடுவித்தார். பிறகு அவைதமக்குத் தண்ணீர் பாய்ச்சி, அவைகளைக் கருத்தாய் வளர்த்து வந்தனர். அங்ஙனம் அவைகளை வளர்த்துவரும் நாட்களில், ''இவை பெரியனவாய் வளர்ந்தபிறகு, தகுதியான ஒரு புதிய கட்டிடம் வகுப்பதற்கு இவை பெரிய தேக்கமரங்களாய்ப் பயன்படும். யானே மறுப்பிறப்பிற் பிறந்து வந்து, அம்மரங்களைக்கொண்டு இதனைவிடத் தகுதி வாய்ந்ததொரு திருமடத்தினை இங்கு அமைப்பிப்பேன்'' என்று அவர் அடிக்கடி சொல்லிக்கொண் டிருப்பது வழக்கம். தேக்கமரங்கள் பேரளவினவாய் வளர்ந்து முற்றுதற்கு நூறாண்டுகள் செல்கின்றன. மற்று, அத்துறவியோ, தாம் நடுவித்த தேக்கநாற்றுகள் இளங்கன்றுகளாயிருக்கும்போதே, இறந்துபோயினர். மற்றொரு பௌத்ததுறவி அம்மடத்திற்குத் தலைவராய் வந்தமர்ந்து, அதன்கண் நடைபெற்ற கலைபயில் கழகத்தை நடத்திவரலானார். இவ்வாறாகக் காலம் போய்க்கொண்டிருந்தது; ஆண்டுகள் செல்லச்செல்லப் புதிய புதிய மடங்கள் மூங்கில்களினாலேயே திரும்பத்திரும்ப அமைக்கப்பட்டு வந்தன; அங்கே நடப்பட்ட தேக்கமரங்களும் வரவரப் பெருத்துவளர்ந்தன. ஆனால், அச்சிற்றூரோ பின்னும் பின்னுஞ் சிறிதாய்க் குறுகியது; ஏனென்றாற், காலஞ்

செல்லச் செல்லத் தொல்லையும் மிகுதிப்பட்டது; அவ் வூருங் காட்டினுள்ளே எட்டியிருந்தது கடைப்படியாக அவ்வூருக்கே ஒருதுறவி இல்லாமற்போயினர். இறுதி யாக இருந்த துறவியும் இறந்தபிறகு, வேறொருவரும் அவ்விடத்திற்கு வந்துசேரவில்லை.

ஓர் ஊருக்கு ஒருதுறவிகூட இல்லாதொழிவது பெரியதொரு குறைபாடாகும். அங்குள்ள இளஞ்சிறார் எழுதப் படிக்கக் கணக்குச்செய்யக் கற்பிப்பார் எவரும் இல்லை. ஐயம் இட்டு அதனாற் பெறும்பேற்றை எய்துதற் கும் அங்கு ஐயம் ஏற்பார் எவரும்இல்லை உயிர்க்குறுதி யான புனிதஉரைகளை எடுத்து அறிவுறுத்துதற்கும் பெரி யாரெவரும் அங்கில்லையாயினர்! ஆகவே, அவ்வூரின் நிலைமை பழுதான தொன்றாய்த் திரிபுற்றது.

பிறகு சிறிதுகாலங் கழித்து ஒருநாட் சாயங்காலத் தில், அவ்வூர்ச சிறுமிகள் அங்குள்ளதொரு கிணற்றில் நீர் முகந்துகொண்டிருக்கையில், அவ்வடவியினுள் ளிருந்து ஒருதுறவி நெடுவழிவந்தமையால் அடிகள் புண் பட்டுக் களைத்துப் பசியுடன் அங்கு வந்துசேர்ந்தனர். உடனே அவ்வூரவர் அவரை மிகுகளிப்புடன் வரவேற் றனராயினும், அவர் அவ்வழியே வேறோர் ஊர்க்குச் செல்பவராயிருக்கலாமென மனம் வெதும்பி, அவர் அன்றிரவு தங்கித் துயில்கொள்ளுதற் பொருட்டு அப் பழைய மடத்தைப் பரபரப்புடன் துடைத்துத் துப்புரவு செய்தனர். ஆனாற், புதுமை என்னென்றால், வந்த அத் துறவி அவ்விடமெல்லாம் அறிந்து பழக்கப்பட்டவர் போற் காணப்பட்டார். அவர், அம்மடத்தையும் அதற் குச் செல்லும் வழியையும், அடுத்துள்ள ஊர்க்குச் செல் லும் பாதைகளையும், அங்குள்ள குன்றுகள், ஆண்டு ஓடும் நீரோட்டங்களின் பெயர்களையும் நன்கறிந்தவரா

யிருந்தனர். அதனால், அவர் முன்னொருகால் அவ்வூரில் உறைந்தவரா யிருக்கவேண்டுமென்பது அவ்வூரினர் எல்லார் உள்ளத்திலும் பட்டது. என்றாலும், அங்குள்ளாரெவரும் அவரை அறிந்தவராயும் இல்லை, அவரது முகம் அறியப்பட்ட தொன்றாயு மில்லை. அவர் ஆண்டில் இளைஞராயும், அவ்வூரவரிற் சிலர் எழுபதாண்டு உயிர்வாழ்ந்தவராயும் இருந்தனர்.

மறுநாட்காலையில், அத்துறவி அவ்விடத்தைவிட்டு வழிச்செல்பவராயில்லாமல், ஐயம் ஏற்குங் கடிகை ஏந்தி, அவ்வூர்க்குட் புகுந்து, பௌத்த துறவிகள் ஐயம் ஏற்கும் முறைப்படியே, தெருக்கடோறுஞ் சுற்றிவந்து, அன்றைக்குவேண்டும் உணவைத் தொகுத்துக்கொண்டார். அன்றை மாலைப்பொழுதில், அவ்வூரினரெல்லாரும் அவரை அம்மடத்திற் காணவந்தபோது, அவர் தாம் அங்கேயே பதிவா யிருக்கப்போவதைச் சொல்லிப், பிறகு, அம்மடத்தைச் சூழ அத்தேக்கமரங்களை அங்கே நடுவித்த துறவியைப்பற்றியும், அம்மரங்கள் வளர்ந்து முற்றியபின் அத்துறவி திரும்பிவருவதாகக்கூறிய உறுதிமொழியைப்பற்றியும் அவர்கட்கு நினைவுறுத்தினர். அதன்பின் அவ்விளந் துறவியார் அவர்களைநோக்கி, "யானே இம்மரங்களை இங்கு நடுவித்தவன். இதோ! இவை வளர்ந்துவிட்டன; யானும் திரும்பிவந்துவிட்டேன்; யான் முன் மொழிந்ததுபோலவே இப்போது ஒரு திருமடத்தைக் கட்டுவோமாக!" எனவிளம்பினர்.

அவ்வூரவர் அவர்கூறியதில் ஐயுற்றுப் பற்பல கேள்விகளைக்கேட்டனர்; ஆண்டில் முதிர்ந்தோர் நெடுங்காலத்திற்குமுன் வழங்கிய செய்திகளைப்பற்றி அவர்பால் உரையாடினர்; அவைகளையெல்லாம் அவர் அறிந்தவர்போல் அவர்கட்கு விடைகொடுத்தனர். இன்னுந், தாம் தெற்

மீக நெடுங்தொலைவிற் பிறந்து கல்வி பயிற்றப்பட்டதை யுங், தாம் இன்னரென்றே அறியாமல் வளர்ந்ததையும், பிறகு தாம் ஒரு திருமடத்திற்சேர்ந்து 'பொங்கி'* ஆன தையும், பிறகு ஒருநாள் தாம் கனவுகாண்கையில், தாம் தேக்கமரங்கள் நடுவித்ததும் அக்கானகத்திற் சேயதா யுள்ள அச்சிற்றூருக்குத்திரும்பிவருவதாகக்கூறிய உறுதி மொழியுங் தம் நினைவுக்குவந்ததையும் எடுத்துரைத்தார். அங்ஙனங் கனவுகண்ட மறுநாளே தாம் இருந்த இடத் தைவிட்டுப் புறப்பட்டுப் பலநாட்களும் பலகிழமைகளு மாகத் தாம் அவ்வூர்க்கு அவர்கள் கண்ணெதிரே வந்து சேர்ந்ததுங் தெரிவித்தார். வியக்கத்தக்க அவ்வரலாற் றைக்கேட்ட அவ்வூரினர் அவர் கூறிய அதில் நம்பிக்கை யுற்று, அப் பருத்த தேக்கமரங்களை வெட்டி வீழ்த்தி, இப்போது காணப்படும் அப்பெரிய திருமடத்தைக் கட்டி முடித்தனரென்பது."

"இன்னும், இளஞ்சிறார் பலர் தம் முற்பிறவிநிகழ்ச்சி களை நினைவுகூர்ந் துரைக்கின்றனரெனவும், அவர்கள் வளரவளர அந்நினைவு மறைந்துபோதலின் அவாகளவற றையும் மறந்துபோகின்றனரெனவும், ஆனால், அவர்கள் சிறுவராயிருக்கும் வரையில் அந்நினைவு அவர்கள்பாற் றெளிவாகவே விளங்குகின்றதெனவும் பர்மியர் கூறுகின் றனர். யானே அத்தகைய நினைவுவாய்ந்த பிள்ளைகளைப் பார்த்திருக்கின்றேன். ஐம்பது ஆண்டுகளுக்குமுன் 'ஒக் ஷித்கான்' என்னும் ஒரு சிற்றூரில், ஓர் ஆண்மகவும் ஒரு பெண்மகவும், பக்கத்துப் பக்கத்து வீட்டில் ஒரேநாளிற் பிறந்தன. அவை யொன்றாய் வளர்ந்து, ஒன்றாய் விளை யாடி, ஒன்றையொன்று காதலித்தன. பிறகு பருவ

* பௌத்தமதத்திற் சேர்ந்த துறவிகளானவர் 'பொங்கி' என்று கடாரதேயத்தில் வழங்கப்படுகின்றனர்.

மூதிர்ந்து இளைஞரான பின், அவ்விளைஞனும் இளைய மாதும் மணஞ்செய்துகொண்டு, அவ்வூரையடுத்துள்ள வறண்ட பாழ்நிலங்களைத் திருத்திப் பயிர்செய்து, அவற்றிற்கிடைத்த விளைவால் தமது இல்லற வாழ்க்கையை இனிது நடாத்திவரலாயினர். அவர்கள் ஒருவரையொருவர் பிரிந்து உயிர்வாழ மாட்டாத அத்துணைப்பெருங் காதற்கிழமை யுடையராயிருந்தன ரென்பதும், அதனால் அவர்கள் வாழ்நாள்முடிந்து உயிர்துறந்த காலத்தும் ஒன்றாகவே உயிர்துறந்தனரென்பதும் அங்குள்ளாரெல்லாரும் நன்கறிந்தனவாகும். அவர்களிருவரும் ஒரேநாளில் இறந்தமையால், ஊர்க்குப் புறத்தேயுள்ள இடுகாட்டில் அவர்களைப் புதைந்து விட்டார்கள். அவர்களைப் பற்றிய நினைவுங் காலஞ் செல்லச் செல்ல அவ்வூரார்க்கு இல்லாமல் மறைந்துபோயிற்று. ஏனென்றால், காலத்தின் வல்லமை பெரிதன்றோ?

இனி, யான் கூறப்போகும் நிகழ்ச்சியானது, ஆங்கிலரதுபடை 'மாந்தலே' நகரத்தைக் கைப்பற்றிக்கொண்டதற்குப்பின் அடுத்த ஆண்டில் நிகழ்ந்ததாகும். அப்போது கடாரதேயமுழுதும் பெருஞ்சீற்றத்துடன் கலகம் விளைத்துநின்றது. அந்நாட்டவர்களெல்லாரும் படைக் கலந்தாங்கிநின்றனர்; பாட்டைகளிற்செல்வது அச்சத்திற் கிடமாயிருந்தது; இராக்காலமோ ஊர்கள் நெருப்புப் பற்றியெரியுந் திகிலான வெளிச்ச முடையதாய்த் தோன்றியது. அமைதியாய்க் காலங்கழிப்பவர்க்கு அது பொல்லாதகாலமாய் மாறியது. அமைதியாய் உயிர் வாழ்ந்த மாந்தர் பலர் பட்டிக்காடுகளில் இருப்பதை விட்டு, அரசியல் நடைபெறும் நகரங்களையடுத்த பெரிய ஊர்களிற்போய் அடைக்கலம் புகுந்தனர்.

இவ்வாறு துன்புற்ற நாடுகளின் இடையே 'ஒக்ஷித் கான்' என்னும் ஊரும் இருந்தது. அதனால், அதன்கட் குடியிருந்த மக்கள் பலரும் அவ்விடத்தைவிட்டு ஓடிப் போயினர். அவர்களுள் ஒருவனாகிய 'மாங்கான்' என் பவன் தன் மனைவியுடன் 'கட்ப்பு' என்னும் ஒரு சிற்றூரிற் சென்று அங்கே தங்கினன். அந்த 'மாங்கா'னின் மனைவி அவற்கு இரண்டு ஆண்குழந்தைகளை இரட்டைப் பிள்ளைகளாய்ப் பெற்றனள். அப்பிள்ளைகள் ஒன்றாக வளர்ந்து விரைவில் தமது மொழியிற் பேசக் கற்றுக் கொண்டார்கள். அங்ஙனம் அவர்கள் பேசக் கற்றுக் கொண்டபின் விளையாடும் நேரங்களில், அச்சிறார் தம் முள் ஒருவரையொருவர் அழைக்கும் போதெல்லாங், தம்பெற்றோர் தமக்கிட்ட பெயர்களால் தம்மை அழைத் துக்கொள்ளாமல், 'மாங்சன்நயீன்' எனவும் 'மாகைவின்' எனவுந் தம்மை அழைத்துக் கொள்ளுதல்கேட்டு, அவர் தம்பெற்றோர் பெரிதும் இறும்பூதுற்றனர். ஏனென்றால், இரண்டாவது பெயர் ஒரு பெண்மகளின் பெயராகும். மேலும், முதற்பெயரும் இரண்டாவதுபெயரும் பூண் டிருந்த அவ்வாடவனும் மனைவியும் 'ஒக்ஷித்கான்' ஊரிற் காதலன்பிற் சிறந்தவராய் வாழ்ந்து இறந்தபின் னர்த்தான், இம்மகார் இருவரும் இவர்தமக்குப் பிள்ளை களாய்ப் பிறந்தனர்.

ஆகவே, இதனை ஆராய்ந்து பார்க்கும்பொருட்டு இப்பெற்றோர் இப்பிள்ளைகளை அழைத்துக்கொண்டு 'ஒக்ஷித்கான்' ஊர்க்கே போயினர். அங்கே சென்ற பின் அச்சிறுவரிருவரும், அவ்வூரிலுள்ள வழிகளையும், வீடுகளையும், அவ்வீட்டிலுள்ளாரையும், அவ்விருவருந் தமது முற்பிறவியில் வழக்கமாய் அணிந்திருந்த ஆடை களையும் நன்றாகத் தெரிந்து கொண்டனர். அதைப்பற்றிச்

சிறிதும் ஐயமேயில்லை. அவ்விளைஞர் இருவரில் இளவலா யிருந்தவன், தான் முற்பிறவியிற் பெண்மகளாயிருந்த தும், தான் தன் கணவனுக்குத் தெரியாமல் 'மாதெட்' என்னும் ஒரு மாதினிடம் ஒருகால் இரண்டுரூபா கடன் வாங்கியிருந்ததும், அக்கடனைச் செலுத்தாமலே தான் அப்போது இறந்துபோயதும் எல்லாம் நன்கு நினைவு கூர்ந்துரைத்தான். 'மாதெட்' என்னும் அம்மாதர் இன் னும் உயிரோடிருந்தமையாற், பெற்றோர்கள் அக்கட னைப்பற்றி அவளை வினவினர்; அவளும் அதனை நினைவு கூர்ந்து நீண்டநாளுக்குமுன் தான் அங்ஙனங் கடன் கொடுத்தது உண்மையேயென ஒப்புகொண்டாள்.

"சிறிது காலத்திற்குப்பின்னர் யான் இச்சிறுவர் இரு வரையும் பார்த்தேன். இப்போது இவர்கட்கு அகவை ஆறாண்டுக்குமேற் சிறிதுகூட இருக்கும். மூத்தபையன் குள்ளமாய்த் தடித்துக் கொழுமையாய் இருந்தனன்; இளையபையனோ இன்னுங்குள்ளமாய்ச சிறிது இடுகிய கண்ணினனாய் ஒரு பெண்பிள்ளையைப்போல் இருந்த னன். அவரிருவருந் தங்கள் பழம் பிறவிகளின் நிகழ்ச்சி களை எனக்கு மிகுதியாய் எடுத்துரைத்தனர். தாம் முன் னை இறந்தபிறகு தமக்கோர் உடம்பேயில்லாமற் சிறிது காலம் இடைவெளியில் அலைந்து கொண்டிருந்ததாகவும் மரங்களில் ஒளிந்துகொண்டிருந்ததாகவும் எனக்குச் சொன்னார்கள். இவ்வாறு அலையலானது அவர் தாஞ் செய்த தீவினைப்பயனாகும். பின்னர்ச் சிலதிங்கள் கடந்து, மறுபடியும் அவர்கள் இரட்டைப்பிள்ளைகளாய்ப் பிறந் தார்கள். 'முன்னை என் நினைவு மிகத்தெளிவாயிருந்தமை யால் யான் ஒவ்வொன்றையும் நினைவுகூரக் கூடியவனா யிருந்தேன்; ஆனால், இப்போது அது வரவர மழுங்கிப் போகின்றது; முன்போல இப்போது யான் அவைகளை

நினைவுகூரக் கூடவில்லை' என்று அம்மூத்தபையன் என்னிடம் மொழிந்தனன்."

"இன்னும், என்னுடன் அலுவல்பார்க்கும் ஒரு துரைமகனார்க்கு ஒரு பர்மிய பாடிகாவலன் ஏவலனாய் இருக்கின்றனன். இவன் இருபஃதாண்டுள்ள ஓர் இளைஞன். இரண்டாண்டுகளுக்கு முன் அத்துரைமகனார் அவ்வட்டத்திற்கு வந்தது முதல் அவன் அவரிடம் வேலை பார்த்துவருகின்றான் என் நண்பர் தம் ஏவலன் தனது முற்பிறவி நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்திருத்தலை முன்னொருநாள் தற்செயலாய்க் கண்டுபிடித்தார். ஆனாலும், அவன் அதைப்பற்றிப் பேசுவதில் மிகவும் வெறுப்புக் கொண்டிருந்தான். இப்போது தானிருக்கும் இடத்திற்கு இருபதுகல் தொலைவிலுள்ள ஓர் ஊரில் அவன் முற்பிறவியில் ஒரு பெண்மகளாய்ப் பிறந்திருந்தனன். அவன் அப்பிறவியில் நன்னடக்கை யுடையனாயிருந்தமையின், இப்பிறவியில் ஓர் ஆண்மகனாய்ப் பிறந்தனன்; ஏனென்றால், ஆண்பிறவியெடுப்பது கீழ்நிலையிலிருந்த ஓர் உயிர் மேல்நிலைக்கு ஏறுவதாகும்; என்றாலும், அவன் அதைப்பற்றிப் பேசவில்லை. அவன் தான் சிறுபிள்ளையாயிருந்தஞான்று தனது முற்பிறவியின் நிகழ்ச்சிகளைத் தான் நன்கு நினைவுகூர்ந்திருந்தாலும், இப்போதவைகளைத் தான் பெரும்பாலும் மறந்துவிடுவதாகவே எமக்குக் கூறினன்."

"இன்னுஞ், சிறிதுகாலத்திற்கு முன், ஏழாண்டு அகவையினளான ஒரு சிறுபெண்ணைப் பார்த்தேன். அவள் தன் முற்பிறவியில் தான் ஓர் ஆண் மகனாய்ப் பிறந்திருந்த வரலாறுகளை யெல்லாம் எடுத்துரைத்தாள். அப்போதிவள் தான் பூண்டிருந்த பெயர் 'மாங்மன்' என்றும், ஊர் ஊராய்ச்செல்லும் பாவைக் கூத்திற்சேர்ந்து

தான் பாவைகளை ஆட்டிவருவதுண்டென்றுங் கூறி னள். இவடன் பெற்றோர்கள், இவள் சிறுகுழந்தையா யிருக்கையிலேயே இவளுக்குப் பாவைகளிடத்திலும் அவைகளை ஆட்டுவதிலும் மிகுந்த விருப்பம் இருத்தல் கண்டு, இவள் முற்பிறவியிலேயே இத்தகையதொரு தொழிலை மேற்கொண்டவளாகத்தான் இருக்கவேண்டு மெனத் தாம் எண்ணியதாக எனக்கு எடுத்துரைத்தனர். இவள் பால் பருகும் மகவாயிருக்கும்போதே பாவை களைக் கயிறு பூட்டி ஆட்டத் தெரிந்தவளா யிருந்தாள் இவள் நான்காண்டு வளர்ந்த பிறகுதான் இவடன் முற் பிறவி நிகழ்ச்சி இவட்குத் திட்டமாய்த் தெரியலாயிற்று ஒரு பாண்பாவைக் கடையினையும் அதன்கணிருந்த பாவைகளையும் இவள் தான் பார்த்தபோது, அவை முற் பிறவியில் தனக்குரியவாய் இருந்ததனைத் தெரிந்து கொண்டாள் இவள் அப்பாவை ஒவ்வொன்றன் பெயரை யும், அவையிற்றை ஆட்டுங்கால் தான் பேசுஞ் சொற்கள் சிலவற்றையுங்கூடச் செவ்வனே நினைவு கூர்ந்தாள். மேலும் அவள் எனக்குச் சொன்னவை இவை: 'யான் முற்பிறவியில் நான்குமுறை மணஞ் செய்து கொண் டேன். என்மனைவிமார் நால்வருள் இருவர் இறந்து போயினர் மூன்றாம் மனைவியை விலக்கி விட்டேன். நான்காம் மனைவி யான் இறக்குங்கால் உயிரோடிருந்த னள்; இப்போதும் உயிரோடிருக்கின்றனள்; இவளை யான் மிகவுங் காதலித்தேன். யான் விலக்கிவிட்ட மூன் றாம் மனைவியோ மிகவுங்கொடியவள்; இதோ பாருங்கள் (என்று தன் தோளின் மீதிருந்த ஒரு தழும்பைக் காட்டி) எங்கட்குள் நேர்ந்த சண்டையில் அவள் எனக்குத் தந் தது இது! அவள் ஒரு கத்தியை யெடுத்து இவ்வாறு எனக்குக் காயத்தை உண்டாக்கினாள்; அதன் பிறகுதான்

யான் அவளை விலக்கிவிட்டேன். அவள் மிகக்கொடிய குணம் உள்ளவள்'

"இங்ஙனமாக இச்சிறுமி உரையாடியது எனக்குப் பெரிதும் புதுமையாயத் தோன்றியது. இவள் காட்டிய இத்தழும்பு பிறவியிலேயே அமைந்த அடையாளமாகும். என்றாலும், அச்சண்டையில் அவன் மனையாள் உண்டாக்கின காயம் பட்ட அதே இடத்திலேயே இச்சிறுமி காட்டிய வடு அமைந்த உண்மை எனக்கு அங்குள்ளாரால் உறுதிப்படுத்தப்பட்டது

"நீக்கப்பட்ட மனைவியுங், காதலிக்கப்பட்ட மனைவியும் இன்னும் உயிரோடிருக்கின்றனர்; அவர்கள் ஆண்டில் இன்னும் முதிரவில்லை. காதலிக்கப்பட்ட நான்காம் மனைவியானவள், இச்சிறு பெண்ணைத் தன்னுடன் வந்திருக்கும்படி விரும்பினள். ஆனால், அவள் அதற்கிசைந்து அவள்பாற் செல்லவில்லை. அதன்மேல் யான் அச்சிறுமியை நோக்கி 'நீ அந்த அம்மையை நிரம்பவுங் காதலித்தா யென்பது உனக்கே தெரியும். அந்த அம்மையும் உனக்கு நல்ல மனையாளாய் இருந்தவர். அவ்வாறாயின், நீ அவருடன் இருந்து வாழ விரும்ப வேண்டுமே' என வினவினேன். அதற்கு அச்சிறுமி, 'அவை எல்லாம் முற்பிறவியில் நடந்தவை' என்றனள். இப்போது அச சிறுமி தன் பெற்றோரிடத்திலேயே அன்பு மிக்கவளாயிருக்கின்றாள். சென்ற பிறவியின் நினைவு அவட்கொரு கனவாய்த் தோன்றியது. அதுவுந் தொடர்பு பட்டுத் தோன்றாமல், துண்டு துண்டாய் இன்னுந் தோன்றுவதாயிற்று. ஆனால், முற்பிறவியிற் காணப்பட்ட பகைமையும் அன்பும் மனக்கொதிப்பும் உழப்பு மெல்லாம் அடியோடு அவிந்துபோயின."

"இன்னும் ஒரு சிறுபையன் தனக்குத் தன் மூப் பிறவி நிகழ்ச்சி நினைவுக்கு வந்தவரலாற்றினைப் பின்வருமாறு எனக்கெடுத்துக்கூறினன். பௌத்த மடங்களில் திருவிழாக்கொண்டாடுங் காலங்களில், ஒரு துறவி யிருக்கும் இடத்திற்கும் மற்றொருதுறவி யிருக்கும் இடத்திற்கும் இடையிடையே திரைகளிடுவது வழக்கம். அங்ஙனம் இடப்படுந் திரைகளிற் சில, இப்பையன் முற்பிறவியில் அணிந்திருந்த பட்டுத்துணிகளைக் கொண்டு தைக்கப்பட்டிருந்தன. இனி, ஒரு செல்வன்றன் மகனை ஒரு சிறுவன் பௌத்தமதத்தின் துறவியாகச் செய்யப்படுந் திருநாள் ஒன்று ஒரு திருமடத்திற் கொண்டாடப்பட்டது. மேற் கூறிய பையன்றன் பெற்றோர்கள் தம் பையன் மூன்றாண்டுள்ள சிறுவனாயிருந்தபோது, அவனை அழைத்துக்கொண்டு அத்திருநாளுக்குச் சென்றனர். அவன் அது நடைபெறுந் திருமடத்திற்குச் சென்றதும், அங்கே தொங்கவிடப்பட்டிருக்குந் திரைகள் சில தான் முற்பிறவியில் அணிந்திருந்த பட்டுத்துணிகளைக்கொண்டு செய்யப்பட்டிருத்தலைக் கண்டனன்; கண்டவுடனே, அவனுக்குத் தனது முற்பிறவியின் நிகழ்ச்சி நினைவுக்கு வந்துவிட்டது. அவனும் அதனைக் குறிப்பிட்டுக் காட்டினன்.

"இச்சிறுவன் தான் முன்னே இறந்துபட்டதும், மூன்று திங்கள்வரையில் மற்றொரு பிறவிக்கு வாராமல் தான் துன்புற்றதும் எனக்கு எடுத்துரைத்தான். இஃது எதனால் நேர்ந்ததென்றால், அவன் தற்செயலாக ஒரு கோழியைக் கொன்றதனால் நேர்ந்ததாகும். அவன் வேண்டுமென்றே அதனைக் கொன்றிருந்தனனாயின், இன்னுங் கடுமையாக அவன் ஒறுக்கப்பட்டிருப்பனும். இந்த மூன்று திங்களிற் பெரும்பாலும் அவன் ஒரு தேங்காய்ச்

சிரட்டைக் குடைவிலேயே யிருந்தமையாலும், அச்சிரட்டை மாட்டுக்காரப் பயல்கள் மாடுஒட்டிச்செல்லும் ஒரு வழியண்டையிற் கிடந்ததனால் அப்பயல்கள் விடியற்காலையில் மாடுகளை யோட்டிச்செல்லுங்கால் தமது கையிலுள்ள கோலால் அச்சிரட்டையை அடித்துக்கொண்டே சென்றமையாலும் அதனுள்ளிருந்த தனக்குப் பெருந்துன்ப முண்டாயிற்றென்று அதனை எனக்கு விளக்கிச்சொன்னான் என்பது.''

## மாமரம்

மா என்னும் சிறந்த மரம், சூடுமிகுந்த இத்தமிழ் நாட்டிலும் இதனையடுத்துள்ள சில நாடுகளிலும், இதற்குக் கிழக்கேயுள்ள கடாரம், மலேயா, சாவகம் முதலான வெவ்விய தேயங்களிலும் மிகுதியாய் வளர்கின்றன. குளிர்மிகுந்த நீலமலை, இமயமலை முதலிய விலங்கல்கள் மேலும், பனிப்பெய்யும் ஐரோப்பிய மேல்நாடுகளிலும் இவை பயிராவதில்லை.

'மாந்தி,' 'கொக்கு,' 'மாழை,' 'நாளினி,' 'எகினம்' முதலிய சொற்கள் மாமரத்தைக் குறிப்பனவான பழைய தமிழ்ச்சொற்களாகும். இவற்றுள், நாளினி, மாழை, எகினம் என்பன புளியாவினைச் சுட்டுமென்று பிங்கலந்தை நிகண்டு கூறுகின்றது. 'சூதம்,' 'ஆமிரம்,' 'சிஞ்சம்,' முதலியன மாமரத்தினை யுணர்த்தும் வடசொற்களாகும்.

பழையகாலந்தொட்டு வளர்ந்தோங்கி நிற்கும் மாமரங்களில் ஒருசாரன தேமாவென்றும், மற்றொருசாரன புளிமாவென்றும் பகுத்து வழங்கப்பட்டு வருகின்றன. ஏனென்றால், காய்முற்றிப் பழுத்தபின் இனியசுவை தரும் ஒருவகை தேமாவெனப்படுகின்றது; பழுத்தபின்

னும் புளிப்பாயிருத்தல்பற்றி மற்றொருவகை புளிமா வெனப்படுகின்றது. பழைய மாங்கனிகளில் நார் இல்லாதவைகளைக் காண்டல் அரிது.

ஆனால், இந்நாளிலோ, பழைய மாமரத்தின் சிறுகிளைகளில் வேறு மரஞ்செடிகளின் கிளைகளைக் கொணர்ந்து சீவிப் பிணைத்துக்கட்டி எடுத்த ஒட்டுமாஞ்செடிகளை எங்கும் மிகுதியாய்ப் பயிராக்குகின்றார்கள். இவை மூன்று நான்கு ஆண்டுகளிலெல்லாங் காய்த்து நாரில்லாத இனிய பழங்களைத் தருகின்றன. கொட்டை மாங்கனிகளைவிட ஒட்டுமாங்கனிகள் அளவிற் பெரியனவாய்த் தீஞ்சுவையில் மிகுந்தனவாய் இருக்கின்றன. கொட்டை மாங்கனிகள் பெரும்பாலனவற்றில் நாரும் புளிப்பும் இருத்தலால் அவற்றைச் சிறுக உண்டாலும் அவை உடம்பின் நலத்தைப் பழுதுபடுத்துகின்றன. ஒட்டுமாங்கனிகளிலோ நாரும் புளிப்பும் இல்லாமல் உள்ளுள்ள தசை சுளை சுளையாக இருத்தலாலுந், தித்திப்பான சாறு நிரம்பியிருத்தலாலும் அவையிற்றைச் சிறிது மிகுதியாக உட்கொண்டாலும் உடம்பின் நலம் பழுதுறாது; அளவாயுண்டால் உடம்பின்நலம் பெருகும். என்றாலும், ஒட்டுமாங்கனிகளிற் சில புளிப்பாயிருத்தல் ஏன் என்றால், கடைக்காரர்கள் மரங்களில் நன்றாய் முற்றுதற்கு முன்னமே அவை தம்மைப் பறித்து விற்பனை செய்யக்கொணர்கின்றனர். அதனால் அவை யங்ஙனம் புளிப்பாயிருக்கின்றன. மரங்களில் நன்றாக முற்றும்மட்டும் விட்டுவைத்துப், பின்னர்ப் பறித்துப் பழுக்கவைத்த ஒட்டுமாம் பழங்கள் ஆராத் தீஞ்சுவை பயப்பனவாயிருத்தலை எமது தோட்டத்திலுள்ள ஒட்டுமாமரங்களில் வைத்தே நன்கறிந்திருக்கின்றேம். ஆனால், மரங்களில் அவை செவ்வனே முற்றும்மட்டும் அவையிற்றை விட்டு

வைப்பதற்குச் சில இடையூறுகள் இருக்கின்றன. பகற் காலத்தில் அணிற்பிள்ளைகளும், இராக்காலத்திற் பழந் தின்னி வௌவால்களும் பகலிராக்காலங்களிற் சிறுவர் கள் கள்வர்களும் புகுந்து அவையிற்றைக் கடித்துத் தின்றுங் கவர்ந்துகொண்டும் போய்விடுதலால், அவை முதிர்ந்து செங்காய் ஆகுதற்கு முன்னமே தோட்டக் காரர்கள் அவையிற்றைப் பறித்துவிடுகின்றார்கள்.

ஒட்டுமாமரங்களில் 'நடுச்சாலை' என்னும் வகை மிகுந்த மணமும் நிறைந்தசுவையும் உடையன. 'மல் கோவா' என்னும் வகை அத்துணை மணம் இல்லாவிடி னும், இன்சுவையில் மிக்கனவாய், அளவிலும் ஒரு தேங் காய்ப்பருமன் பெருக்கின்றன. 'கிளிமூக்கு' என்னும் வகையில் மணம் மிகக்குறைவு; சுவையில் மூன்றாந்தர மே. 'நீலம்'என்னும் வகையிற் சேர்ந்த ஒட்டுமாம் பழங் கள் நன்றாய் முற்றியபின்னும் பச்சென்ற தோலுடைய வாய்க் காணப்படுகின்றன; ஆனாலும், உள்ளேயுள்ள தசை சிவந்த மஞ்சள்நிறம் வாய்ந்து தேனூறித் திதிக்கின்றன. இந்நான்குவகைகளைத் தவிர, இன்னும் எத்தனையோ வகையான ஒட்டுமாமரங்கள் உண்டு. இங்ஙனமே கொட்டை மாமரங்களிலும் பற்பல வகைகள் உண்டு.

இனி, இஞ்ஞான்று இத்தென்னாட்டிற் பலவிடங் களிற் பருத்தடர்ந்து காணப்படும் மாந்தோப்புகளில் உள்ள பெரிய பெரிய மரங்களெல்லாங் கொட்டைகளி லிருந்து உண்டானவைகளே யாகும். இக்கொட்டை மா மரங்களில் ஐந்நூறாண்டு ஆயிர ஆண்டுகளுக்குமேல் உயிருடன் நிற்கும் மரங்களும் உண்டு. இம்மரங்களின் அடிகண் மேலுள்ள பட்டைகள் பொரிந்த வடிவுடை யனவாய் இருத்தலால் இவைதம்மைப் 'பெரியரைமா' என்று பழைய தமிழ்நூற்செய்யுட்கள் அடுத்தடுத்து

வழங்காநிற்கும். இம்மாமரங்கள் பெரும்பாலும் பட்டிக் காடுகளுக்குப் பக்கத்தே ஒரு தொகுப்பாக வைத்துப் பழைய நாட்களிலேயே பயிராக்கப்பட்டுள்ளன. இங்ஙனம் ஒரு தொகுப்பாக வைக்கப்பட்ட மரச்செறிவே 'தோப்பு' என வழங்கப்படலாயிற்று. தொகுப்பு என்னுஞ்சொல்லே தோப்பு எனத் திரிபுற்றது.

இப்பழைய கொட்டைமாமரங்கள் பருத்துயர்ந்து, பரியபரிய கோடுகளையுங் கொம்புகளையும் வளார்களையும் அவற்றில் இலைகளையும் நாற்புறங்களிலும் பரப்பி அடர்ந்து வானளாவி நிற்குந் தோப்புகளின் காட்சியானது காண்பார் கண்களுக்கும் உள்ளத்திற்கும் மகிழ்ச்சியையும் ஆறுதலையுந் தருகின்றனவன்றோ? வெப்பம் மிகுந்த வேனிற்காலத்தில் ஊர்ப்புறத்தேசென்று, இத்தோப்புகளின் ஊடுநுழைந்து வெயிலேபடாத அம்மர நீழல்களில் வைகி இளைப்பாறுவதினும் மிக்கதோரின்பம் பிறிதுண்டோ? வேனிற்காலத்திற்கு முன்னுஞ் சில இடங்களில் வேனிற்காலத் துவக்கத்தும் மாமரங்கள் பூவெடுத்தலால், அப்போது அப்பூக்களின் நறுமணத்தில் அளைந்து வந்து சில்லென்று வீசும் மெல்லிய தென்றற்காற்று நம் முடம்பின்மேற் படுங்கால் ஆ! அது நமக்கு எவ்வளவு இன்பத்தைத் தருகின்றது!

மற்றைப்பறவைகளைப்போல் எளிதிற் காணப்படுவதில்லாத குயிற்பறவைகள் வேனிற்காலத்தில் மாமரங்களில் அமர்ந்து கூவும் ஓசை கேட்கக்கேட்க இனியதாயிருக்கும். பெரும்பாலும் மக்கள் வழங்காத ஊர்ப்புறத் தோப்புகளிலிருந்தே குயில்கள் கூவுதலால், தனித்த அவ்விடங்களிற்சென்று அவைகூவும் அவ் வின்னோசையைக் கேட்பது பின்னும் அவ்வினிமையை மிகுதிப்படுத்துகின்றது. ஆனாலுந், தங் காதலரைப்பிரிந்து, அவரது பிரிவை ஆற்

றாது வருந்தும் மகளிர்க்குக் குயில்கூவும் ஓசை அவரது வருத்தத்தைப் பெருகுவிக்குமென்று நல்லிசைப்புலவர்கள் பாடியிருக்கின்றனர். அரசனும் புலவனுமான ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்பான் தான் பாடிய செய்யுள் ஒன்றில்,

"மாநனை கொழுதிய மணிநிற இருங்குயில்
பருநா விளியா னடுநின்று அல்கலும்
உரைப்ப போல ஊழ்கொள்பு கூவ,
இனச்சிதர் உகுத்த இலவத் தாங்கட்
சினைப்பூங் கோங்கின் நுண்டாது பகர்நர்
பவளச் செப்பிற் பொன்சொரிந் தன்ன
இகழுநர் இகழா இளநாள் அமையஞ்
செய்தோர் மறை குறியென நீநின்
பைதல் உண்கண் பனிவார்பு உறைப்ப
வாராமையிற் புலந்த நெஞ்சமொடு
நோவல் குறுமகள்" (அகநானூறு, உ௫)

எனத், தன் கொழுநனைப் பிரிந்த வேனிற்காலத்திற் குயிலிசைகேட்டு வருந்தும் ஒரு நங்கைக்கு அவடன்றோழி ஆறுதன்மொழி பகர்தலை எடுத்துக்காட்டி யிருக்கின்றார்.

இனி, ஐப்பசித்திங்களிற் பூவெடுக்கும் ஒட்டுமா மரங்கள் பிஞ்சுபிடித்துக் காய்த்துச் சித்திரைத்திங்களிலேயிருந்து பழங்களைத் தருகின்றன. கார்த்திகைத்திங்களிற் பூத்துக்காய்க்கும் மரங்களோ வைகாசி அல்லது ஆனிமுதற் பழுத்து நறுஞ்சுவைக்கனிகளைத் தருகின்றன. இவ்வொட்டுமாமரங்கள் பூத்திருக்குங்கால் அவற்றிலிருந்து சிலநாட்கள்வரையில் வருங் குளிர்ந்தமணமானது உளத்திற்கு அமைதியான இன்பத்தை ஊட்டுகின்றது

ஒட்டுமாமரங்களின் தீஞ்சுவையினை அறிந்தவர்கள், வாழை பலா நாரத்தை மாதுளை விளா முதலான ஏனை எல்லா மரங்களின் கனிகளைவிட இவற்றையே மிகவும் விழைந்து பாராட்டுகின்றார்கள். உண்மையாகவே ஒட்டுமாங்கனிகளின் சுவை வேறெவ்வகைக் கனிகளுக்கும் இல்லை. ஆதலினாற்றான், குளிர்மிகுந்த ஐரோப்பாதேயத்திலுள்ள வெள்ளைக்காரர்கள் மிகுந்த விலை கொடுத்து ஒட்டுமாங்கனிகளைத் தம்மூர்களுக்கு வருவிக்கின்றனர். சில காலங்களில் ஓர் ஒட்டுமாங்கனிக்குப் பதினைந்து ரூபாவரையில் விலைகொடுத்து வாங்குகிறார்கள் என்று கல்வியிற்சிறந்த ஒரு துரைமகன் எழுதியிருக்கின்றார். இவ்விந்திய நாட்டுக்கு மிகவுஞ் சேயவான தேயங்களுக்கு இவ்வொட்டுமாம்பழங்களைக் கொண்டு செல்லவேண்டுபவர்கள், சாடிகளில் தேனை நிரப்பி அத் தேனில் அப்பழங்களை அமிழ்த்திவைத்துக் கொண்டு போகின்றார்கள். இவ்விந்தியநாட்டிலுள்ள பெருஞ்செல்வர்களிற் சிலரும் ஒட்டுமாங்கனிகளிற் றமக்கு ஆராவேட்கை இருத்தலால், அவை கிடைப்பதில்லா மற்றைப் பருவ காலங்களிலும் அவற்றை யுண்டு இன்புறுதற் பொருட்டு, அங்ஙனமே அவறறைத் தேன் நிறைத்த சாடிகளில் இட்டுவைத்துத், தாம் வேண்டுங்காலங்களில் எடுத்து அருந்துகின்றார்கள். முறைப்படியெடுத்துவைத்த தூய தேனில் எத்தகைய பச்சைப்பண்டங்களை இட்டு வைத்தாலும் அவை நெடுநாள்வரையிற் கெடாமல், இட்டக்கால் இருந்த பதப்படியேயிருக்குமென்று அங்ஙனஞ் செய்துபார்த்தவர்கள் சொல்லக்கேட்டிருக்கின்றேம்.

இனி, ஒட்டுமாம்பழங்களை விரும்பி அடுத்தடுத்து உண்பவர்கள் உடல்நலங் கெடாமைப்பொருட்டு, அவற்றை உண்டபின் காய்ச்சிய ஆவின்பாலைப் பருகுதல்

வேண்டும். ஆனாலும், இவைதம்மைச் செரிக்கும் அள வறிந்து உட்கொள்பவர்கள் செழுமையான இரத்தம் ஊறப்பெற்று உடல்நல மனநலங்கள் வாய்ந்து திகழ்வர். அளவுக்குமேல் அவாவை அடக்காமல் அவையிற்றை உண்பவர்கள் வயிற்றுநோய் வயிற்றுக்கழிச்சலால் வருந் துவர். "அமிழ்தமேயானாலும் அளவறிந்துண்," "அள வுக்குமிஞ்சினால் அமிழ்தமும் நஞ்சாம்" என்னும் பழ மொழிகள் நமதுடம்பின் நலத்திற்கு வேண்டுவ வறிந் துரைக்கும் உண்மைப் பொன்மொழிகளாகவே விளங்கு கின்றன.

இனிக், கொட்டைமாமரங்கள் நார் உள்ளவைகளா யிருப்பினும் அவற்றிலுந் தீஞ்சுவைக்கனிகள் உண்டு. எனினும், ஒட்டுமாங்கனிகள் மிகுதியாய்க் கிடைக்கக் கூடியகாலம் வளர வளர, ஏழை யெளியவர்களைத் தவிர ஏனையோரெல்லாரும் ஒட்டுக் கனிகளையே மிகுதியும் வாங்கி அயில்கின்றனர். மேலும், ஒட்டுமாமரங்கள் வர வர நாடெங்கும் மிகுதியாய்ப் பயிர்செய்யப்பட்டுப் பெருகுதலால், இருபது இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் அவை மிகுந்த விலைக்கு விற்றதுபோலில்லாமல், இப்போதவை நயமான விலைக்குக்கிடைக்கின்றன. அத னாற், கொட்டைமாம்பழங்கள் இந்நாளில் மிகுதியாய் விற்கக் காணேம். என்றாலும், ஊறுகாய் செய்வதற்குப் பெரும்பாலுங் கொட்டைமாங்காய்களையே எல்லாரும் பயன்படுத்துகின்றனர். மாங்கொட்டைகளையும் இராக் காலக் குழம்புகளுக்குச் சைவர்கள் பயன்படுத்துகின்றார் கள். மாம்பருப்புகள் வயிற்றுளைச்சலைப் போக்குதற்குச் சிறந்தமருந்தாக எளியமக்களாற் பயன்படுத்தப் படு கின்றன.

இனி, யாங்கள் ஒட்டுமாம்பழங்களைப் பழங்களாக வே பயன்படுத்தியதுடன், அவற்றின் காய்களையும் பருப்புக்குழம்பு, வெல்லப்பாகு, தயிர்ப்பச்சடி முதலியவற்றிற் சேர்த்து அருந்திப்பார்த்ததில், அவை இவ்வகையிலுங் குழைவுஞ் சுவையும் மிக்கனவாய் இருத்தல்கண்டு உவப்புற்றேம். ஊறுகாய் இட்டாலும் ஒட்டுமாங்காய்கள் களிப்பாய் நாவுக்கு நன்சுவை விளைக்கின்றன. இங்ஙனம் பல வகையாலும் பயன்பட்டு நம்நாட்டவரை இன்புறுத்தும் மாமரங்களை நம்மனோர்க்கு வழங்கிய இறைவன் றிருவருளுக்கு நம்முடைய நன்றியையும் வணக்கத்தையுஞ் செலுத்துவாமாக!

## அறிவும் உழைப்பும் விடாமுயற்சியும்

உழைப்பும் விடாமுயற்சியும் உடைய அறிவாளிகள்சிலர் ஆங்காங்குத் தோன்றுவதனாலேயே மக்கள் வாழ்க்கையானது மேன்மேல் அறிவும் இன்பமுந தருந்தகைத்தாய் நடைபெறுகின்றது. அத்தன்மையரான அறிஞர் தோன்றாத மிகப்பழைய காலங்களில் நம்முன்னோர்கள் எங்ஙனம் உயிர்வாழ்ந்தனரென்பதைப் பழைய மக்கள்வரலாறு நுவலும்நூல்களில் (Anthropology) நாம் படித்துப் பார்ப்பமாயின், நந் நெஞ்சங் கலங்காதிராது. நாடோறும் உண்ணுதற்குச் செவ்வையான உணவும் உடுக்கக் கூறையும் இன்றி அவர்கள் பட்டபாடு நினைக்கநினைக்கப் பெருந் திகிலை உண்டுபண்ணுகின்றது. வயிற்றுக்கு உணவுதேடித் தந்து தமது உடலை ஓம்புவதே அவர்கட்கு அந்நாளில் ஓயாப் பெருமுயற்சியா யிருந்தது. இப்போதுள்ள யானைகளைவிடப் பன்மடங்கு பெரியவான 'மாமதம்' (mammoth) என்னும் பெரிய யானைகள் அந்நாளில் மந்தை

மந்தையாக இருந்தன. அவ்வியானைகளை யொப்பவே உருவிற் பெரியவான கல்யானைகளுங், கொடும்புலி களும், அரிமாக்களும், மலைப்பாம்புகளும், பெருமுதலை களும், பெருங்கழுகுகளுங், கொடும்பெருங் குரங்கு களுங், கடல்நீரின் மட்டுமன்றி நிலத்தின்மேலும் வந்துல வும் பெரிய பெரிய கடல்விலங்குகளுப் இம்மாநிலத்தே திரிந்தன. அவற்றிடையேயிருந்து உயிர்பிழைத்த பண் டைநாள் மக்கள் இருக்க இல்லம் அமைக்கத் தெரியாத வர்கள்; மலைக்குகைகளையும் மரப்பொந்துகளையும் மர உச்சிகளையுமே இருப்பிடமாய்க்கொண்டவர்கள். நெடுங் காலம் வரையில் தமதுடம்பைக் குளிரும் வெப்பமுந் தாக்காமல், தழைகளாலேனும் மரப்பட்டைகளாலேனும் விலங்கின் தோல்களாலேனும் மறைத்துக் கொள்ளும் வகை தெரியாதிருந்தவர்கள். இத்துணை இடர்ப்பாட்டிற் சிறு சிறு கூட்டத்தினரா யிருந்த அப்பண்டைமக்கள், தமக்குந் தம்மைச்சேர்ந்தார்க்கும் உணவுதேடும்பொருட் டுக் காடுகளிலும், மலைகளிலுங், கடலோரம் யாற்றோரங் களிலுஞ் சென்றக்கால், அக்கொடிய பெருவிலங்குகளால் அவர்கள் எவ்வளவு துன்புறுத்தப்பட் டிருக்கவேண்டும்! அவற்றொடு போராடியதில் எத்தனைபேர் மடிந்திருக்க வேண்டும்! அவர்கள் எல்லாருமே அக்கொடுவிலங்கு களின் போராட்டத்தில் மாண்டு மடிந்துபோயிருந்தால், நாமெல்லாம் இங்கே தலைக்காட்டிப் பிறந்திருத்தல்கூடு மோ! அப்பழையபோராட்டத்தில் அவ்விலங்கினங்களுக் குத் தப்பிப்பிழைக்கும் வகை கண்டறியும் பொருட்டுத் தம் அறிவையும் விடாமுயற்சியையும் பயன்படுத்தி அவற்றைத் தப்பி யுயிர்வாழ்ந்த சிலராயினும் வழிவழித் தோன்றினமையா லன்றோ நாம் இஞ்ஞான்று நாகரிகத் திற் சிறந்து இன்பவாழ்க்கையில் வாழ்கின்றோம்?

அப்பண்டைமக்கட் சிறுகூட்டத்தில் ஒரு சிலர் ஏனையோரினுஞ் சிறிது அறிவுவிளக்கம் உடையராகித், தம்மோடு ஓயாப் போர் மலைந்த அக்கொடுவிலங்குகளைக் கொல்லுதற்கு வலியதீக்கற்களிலிருந்து கத்திகளும் மழுப் படைகளும்அம்புகளுஞ் செய்யக் கற்றுக்கொண்ட காலந் தொட்டும்; அதன்பின் அப்படைகளைக்கொண்டு அவ் விலங்குகளைக் கொன்று அவைதம் இனங்கள் பின்னர் அச்சத்தால் தம்மையணுகாமல் அகன்றோடிவிடத் தாங் காடுகளிலும் மலைகளிலும் அச்சமின்றி யுலவி ஆங்காங் குள்ள காய்களையுங் கனிகளையுங் கிழங்குகளையும் வித் துக்களையும் இலைகளையும் மிகுதியாய்ப் பெற்றுண்டும், மரக்கோடுகள் பொந்துகளிற் கிடைத்த தேனையும் மலைச் சுனைகள் மலையருவிகள் கான்யாறுகள் மடுக்களிற் பெற்ற நீரையும் பருகியும் நாளுக்குநாள் உடல்நல மனநலங் களிற்சிறந்து அவரது கால்வழி பெருகத்துவங்கிய காலந் தொட்டும்; அதன்பிற் றம்மை யெதிர்த்துத் தம்மாற் கொல்லப்பட்ட விலங்கின் தசைகள் மலைப்பாறைகண் மேற் கிடந்து வெயில் வெப்பத்தால் வெதுப்பப்பட்டுத் தின்னுதற் கேற்ற மணமுஞ் சுவையும் வாய்ந்தனவா தலைக் கண்டுகொண்ட அம்மக்களில் வேறு சிலர், வெயிலைப்போல் வெய்யவாய்ச் சுடும் நெருப்பு ஒன்று உண்டென்பதைத் தாந் தீக்கல்லிலிருந்து கத்தி மழு முத லான கருவிகள் அமைத்தக்காற் பறந்த தீப்பொறிகளால் அறிந்து, அக்கற்களை ஒன்றோடொன்று மோதியுண்டாக் கிய தீயிற் பிறகு அவ்விலங்கின் தசைகளை வதக்கிச சுட்டுத் தின்னத் தெரிந்த காலந்தொட்டும்; பறவையினங் கள் தாங் குஞ்சுபொரிக்கும் பருவம் அண்முதலும்,நார் களாலும் மரக்குச்சிகளாலும் மரப்பஞ்சுகளாலுங் கூடு கள் கட்டி அவற்றினுள்ளிருந்து முட்டையிட்டுக் குஞ்சு

பொரித்து இனிதுவாழ்தலை உற்றுநோக்கிய அப்பழைய மக்களிற் பின்னுஞ்சிலர் தாமும் அப்பறவைகளைப்போல் மரக்கொம்புகள் வளார்கள் நார்கள் இலைகளாற் சிறு சிறு குடில்கள் அமைத்து அவற்றுட் டாமுந் தம்மக்களும், வெயில் மழை பனி பனிக்காற்று முதலியவைகளால் அலக்கணுறாமல் இனிது வாழத்தெரிந்த காலந்தொட்டும்; மழையில் நனையாமலுங் குளிரில் நடுங்காமலும் பறவைகள் விலங்குகள் உடம்பெங்கும் மயிர்ப்போர்வையால் நன்குமூடப்பட்டிருத்தலைக் கருதிப்பார்த்த அப்பண்டை மாந்தரிற் பின்னுஞ்சிலர் தாமுந் தாங்கொன்ற விலங்குகளின் தோலை உரித்தெடுத்து அவற்றின்மேலுள்ள மயிரைச் சிவாமற் றம்மேல் அவைதம்மைப் போர்த்துக் கொள்ளத் தெரிந்த காலந்தொட்டும்; அப்பறவைகளும் அவ்விலங்குகளுந் தம்மெண்ணங்களைத் தமக்குட் சிற்சில ஒலிகளால் அறிவித்துக்கொள்ளுதலைப் பலகாலும் உற்றுநோக்கி வியந்த அம்மாந்தரில் மேலுஞ் சிலர்தாமும் அவைபோற் சிற்சில ஒலிகளை எழுப்பித் தங்கருத்தைத் தம்மனோர்க் கறிவிக்கத் துவங்கிய காலந்தொட்டும் நம் முதுமக்களின் வாழ்க்கையானது வரவர நாகரிகத்தில் வளர்ந்தோங்கி வரலாயிற்றென்பதை நாங் கருத்திற் பதித்தல்வேண்டும்.

அங்ஙனம் நம்பண்டைமக்கள் தமதறிவை மேலுக்குமேற் பயன்படுத்தி உழைப்பும் விடாமுயற்சியும் உடையராய் நடந்திரா விட்டால், மக்கட் பூண்டென்பதே யொன்று சுவடில்லாமல் மாய்ந்து மறைந்துபோயிருக்குமென்பதை நாஞ்சொல்லுதலும் வேண்டுமோ? அவ்வாறு அவர்கள் இந்நிலவுலகிற் றோன்றிய காலம்முதற் சிறிதும் மடிந்திராமல் அறிவும் முயற்சியும் உடையராய் ஒழுகி வாழ்க்கைசெலுத்திவந்த இறந்தகால நிகழ்ச்சியினை நாம்

ஆராய்ந்து பார்க்கப்பார்க்க, நாம் உயிரோடிருக்கும் இந் நிகழ்காலத்தும், நமக்குப் பின் நம்மரபில் வருவார் உயிர் வாழும் எதிர்காலத்தும் எல்லாரும் நாளுக்குநாள் எவ்வளவு அறிவும் எவ்வளவு முயற்சியுமுடையராய் ஒழுகுதல் வேண்டுமென்பது விளங்காமற்போகுமோ?

இனி, அறிவும் உழைப்பும் முயற்சியும் என்னும் மூன்றனுள் அறிவை மேன்மேற் பெருக்கினாலல்லாமல், உழைப்பும் முயற்சியும் மிக்கபயனைத் தரா. நாடோறுங் காலையில் எழுந்து மாலைவரையில் உழுதொழிலைச் செய்வோனுஞ், சரக்குவண்டியிழுப்போனும், யாற்றிற் படகு செலுத்துவோனுங், காட்டில் விறகுவெட்டி விற்போனுந் தாம் வழக்கமாய் மேற்கொண்ட அவ்வுழைப்புக்குமேற் றமதறிவைப்பெருகச்செய்வதில் அவாவில்லாதவர்களாய் நாட்கழிப்பராயின், அவரது செயல்,நெற்குத்தும் பொறி, மாவரைக்கும் பொறி,நீர்இறைக்கும் பொறி, வண்டியிழுக்கும் பொறி முதலியவற்றின் அறிவில்லாச் செயலையே ஒப்பதாய்விடும். ஆகவே, கடுமையானதோர் உழைப்பிற் புகுந்திருக்கும்போதும் அதனை மேன்மேல் அறிவுடன்செய்து பயன்படுத்துவதோடு, அதுசெய்தநேரம் போக மிச்சமான நேரத்தை உயர்ந்த அறிவுடையோர் செய்த நூல்களைப்பயல்வதிலும் பயன்படுத்தல்வேண்டும். ஏனெனில், அறிவை மேன்மேற் பெருக்குவதற்கு ஏற்ற வழி, அறிவின் மிக்கார் இயற்றிய நூல்களை இடையறாது பயில்வதே யாகும். மணற்கேணியினைத் தோண்டத் தோண்ட நீர் ஊறுதல்போல ஆன்றோர் நூல்களைக் கற்கக் கற்க அறிவு எல்லையின்றி வளராநிற்கும்.

"தொட்டனைத்தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு"

என்றார் திருவள்ளுவரும். அங்ஙனமே, வாழ்க்கைக்கு இன்றி யமையாது வேண்டிய செல்வப்பொருளை ஈட்டு தற்குப் பலதுறைகளிற் புகுந்து பல்வகை முயற்சிகள் செய்வோரும், அம் முயற்சியளவில் தமதறிவைக் கரை கோலி மட்டுப்படுத்திவிடாமல், அம்முயற்சி யவிந்த நேரங்களில் விழுமிய அறிவு நூல்களைத் தொடர்பாகக் கற்று அறிவை விரிவுசெய்தல் வேண்டும். அங்ஙனஞ் செய்யாக்கால்,தமக்கு இரைவேண்டுங் காலத்துங் குஞ்சு பொரிக்குங்காலத்தும் மிக்க சுருசுருப்புடன் முயன்று, பின்னர் முயற்சி யற்று வாளா இருந்து கழியும் பறவை கள் முதலான சிற்றுயிர்களுக்கும் மக்கட்கும் வேற்றுமை இல்லையாய் விடும். இரைதேடித் தின்றபிற், சிற்சில காலங் களில் ஆணும் பெண்ணுமாய் மருவிச் சிறிது • இன்புறும் அத்துணையே யன்றி, அதனின் மிக்க இன்பத்தைத் தொடர்பாக நுகர்தற்கேனும்,அந் நுகர்ச்சியினைப் பயத்தற் கேற்ற அறிவினை மேன்மேற் றோற்றுவித்தற்கேனும் அச் சிற்றுயிர்கள் வல்லனஅல்ல. மக்களோ தமக்கு அரிதின் வாய்த்த பகுத்தறிவின் மாட்சிகொண்டு தமது வாழ்க் கையில் வருந் துன்பங்களை வரவரக் குறைத்து, நாளுக்கு நாள் தாந் தொடர்பாக இன்பந் துய்த்தற்கேற்ற வழி துறைகளைத் தம்மறிவு முயற்சியாற கண்டடைந்து வரு கின்றனர். இவ்வாறு அறிவும் இன்பமும் நாளுக்குநாட் பெருகப்பெறும் மக்கள் வாழ்க்கைதான் நாகரிகவாழ்க் கை யென்றும், மற்று அவையிரண்டும் பெருகுதல் இல் லாத மாக்களின் உயிர்வாழ்க்கையோ நாகரிகமில்லா வெற்றுயிர் வாழ்க்கையென்றும் வழங்கப்படும். தமக் குள்ள பகுத்தறிவினைப் பயன்படுத்துகின்றவர்களே மக் கள்; மற்று,அதனைப் பயன்படுத்தாதவர்களோ மாக்கள். இந்த உண்மை முறையில் வைத்து நம்நாட்டவர் வாழ்க்

கை நிலையினையும் மேல்நாட்டவர் வாழ்க்கை நிலையினையும் ஒப்பிட்டுப் பார்க்குங்கால், மேல்நாட்டவர் நிலையே மிகவும் பாராட்டற்பாலதான விழுப்பமுடைத்தாய் விளங்காநிற்கின்றது. நீராவிப்பொறி, அச்சுப்பொறி, காவல் விளக்கு(Safety lamp), மின்செய்தி (Electric telegraph), கம்பியில்செய்தி (Wirless message) முதலான பலவியப்புகளையெல்லாம் அரும்பாடுபட்டுத் தாங் கண்டறிந்த தல்லாமலுந், தாங்கண்ட அவ்வியப்புகளைக் கோடி கோடியாகப் பொருட்செலவு செய்து இம்மாநிலமெங்கும் பரப்பி,எல்லா மக்கள் இனமும் அவற்றின் பயனை யெய்தி, முன்னை தமக்கிருந்த பல்பெருந் துன்பங்களெல்லாம் நீங்கி இன்புற்று வாழுமாறு பேருதவி புரிந்துவரும் மேனாட் டறிஞரின் அறிவுமுயற்சி, எல்லாமாந்தரின் நன்றியறிவுக்கும் இடனாய்த் திகழ்கின்றதன்றோ?

அங்ஙனம் மேனாட்டறிஞர் கண்டறிந்து பரப்பிய பல்பெரும் பொறிகளில், நூல்நூற்கும் பொறியும் மிக்கதொரு பயனை உலகிற்குவிளைத்த வியத்தகுசிறப்புவாய்ந்ததாகும். இதனை ஓவாது அறிவுமுயன்று கண்டுபிடித்த மேலோர் ஆர்க்குரையர் (Arkwright) என்னும் பெயரினராவர். இவர்க்கு முப்பதாண்டுகளுக்கு முன்னேயிருந்த வேறு இருவர் நூற்கும்பொறிகளை வருந்தியமைத்தனராயினும், அவை முற்றுந் திருத்தமாக அமைக்கப் படாமையால் அவை தொழிற்படுத்தப்பட்டக்காற் செவ்வனே இயங்காமல் வீணாய்ப்போயின. மற்று, ஆர்க்குரையரோ தமக்கு முன்னேயிருந்தார் கண்டுபிடித்தவைகளில் இருந்த குறைபாடுகளையெல்லாம் நீக்கி, மிகவுந் திருத்தமானதொரு முறையிற் றமே புதுவதாக ஒரு 'நூற்பொறி'யினைச் செய்துமுடித்தார்.

ஆர்க்குரையர், பெரும்பாலும் ஏனைப்பெரியாரைப் போற், றாழ்ந்தகுடியிற்றோன்றியவர். இவர் கி.பி 1732-ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் கண்ணதான 'பிரத்தன்' (Preston) என்னுந் துறைமுகப்பட்டினத்திற் பிறந்தார். இவர்தம்பெற்றோர்களோ மிகவும் ஏழைமையான நிலையி லிருந்தார்கள். அவர்கட்குப்பிறந்த பதின்மூன்று பிள்ளை களுள் இவர் கடைசிப்பிள்ளை யாவர். இவர் பள்ளிக் கூடத்திற்சென்று கல்விபயின்றதேயில்லை; இவர் கற்றுக் கொண்டதெல்லாம் இவர் தாமாகவே முயன்று கற்ற தொரு சிறுகல்வியாகும்; தமது முடிவுகாலம்வரையில் மிகவுந் தொல்லைப்பட்டே இவர் எதும் எழுதக்கூடிய வராய் இருந்தனர். இவர் சிறுபிள்ளையா யிருந்தஞான்று, ஓர் அம்பட்டனிடத்தில் தொழில் கற்றுக்கொள்ளுமாறு விடப்பட்டார். அதனை நன்குகற்றறிந்தபின், 'பொலுத் தான்' என்றும் ஊரில் தாம் அத்தொழிலை நடத்துதற்குச் சென்று, நிலத்தின்கீழ் உள்ளதோர் அறையைக் குடிக் கூலிக்கெடுத்து, அதன்மேல் "நிலத்தின் கீழ் அம்பட்ட னிடம்; வாருங்கள், அவன் ஒரு பணத்திற்குச் சிரைக் கின்றான்" எனப் பலகையும் எழுதிக் கட்டிவிட்டார். அதனால், மற்றை அம்பட்டர்க்கு வருவாய் சுருங்கவே, அவர்களுந் தமது சிரைப்புக்கூலியை அந்த அளவுக்கே குறைக்கவேண்டியவரானார்கள். அதுகண்ட ஆர்க்குரை யர் தமதுதொழில்நன்குநடைபெறல்வேண்டி, "அரைப் பணற்திற்கு இங்கே திருத்தமான சிரைப்பு" எனப் பல கை எழுதிக் கட்டினார்.

இவ்வாறு சில ஆண்டுகள் கழித்தபின், அவர் அந் நிலவறையைவிட்டுத், தெருத்தெருவாய்த்திரிந்து மயிர் விற்பனைசெய்யுந் தொழிலை மேற்கொண்டார். அந்நாளில் மேல்நாட்டவர் தந் தலைக்குப் பொய்ம்மயிர் வைத்துப்

புனைந்துகொள்வது வழக்கம். அதனால், அஞ்ஞான்றை மயிர்வினைஞர் அத்தகைய பொய்ம்மயிர் முடிகள் செய்து விற்குந்தொழிலை மிகுதியாய் மேற்கொண்டிருந்தனர். ஆகவே, ஆர்க்குரையரும் அம்முடிகளின் பொருட்டுத் தலைமயிர் வாங்கி விற்றுவந்தார். இலங்காஷயரிற் கூடுஞ் சந்தைகளில், தங் கூந்தலை நீளப்பின்னிவிடுதற்காகத் தலைமயிர் வாங்கவரும் மகளிர்க்கு இவர் மயிர்விற்பனை செய்ததில் நல்ல ஊதியத்தை அடைந்தார். அதுவல்லாமலும், இவர் ஒருசிறந்த மயிர்ச்சாயஞ் செய்து திறமையாக விற்றதிலிருந்தும் மிக்க ஊதியத்தைப்பெற்றார். இங்ஙனமெல்லாம் இத்துறையில் இவர் சுருசுருப்பாக முயன்றும், இவரது வாழ்நாட்செலவுக்குமேல் மிகுதியாய் வேறேதுங் கிடைத்திலது.

பின்னர்ச் சில ஆண்டுகளிலெல்லாம், பொய்ம்மயிர் புனையும் நடையும் மாறிவிடலாயிற்று. அதனால், பொய்ம்மயிர்வினைஞ ரெல்லாரும் பெரிதும் இடருழக்கலானார்கள். ஆயினும், ஆர்க்குரையர் தமது முயற்சியை அத்துறையினின்றுந் திருப்பித், தமக்கு இயற்கையாய் வாய்ந்தபொறியமைக்கும்வழியிற்செலுத்தத்துவங்கினார். அஞ்ஞான்று, நூல்நூற்கும் பொறியொன்று அமைப்பதற்குப் பலர் பலவாறு முயன்றுகொண்டிருந்தனர். அது கண்ட ஆர்க்குரையர் தாமும் அத்துறையில் இறங்கினார். தாமாகவே கலையறிவிற் றேர்ச்சிபெற்ற மற்றைப்பெரியாரைப்போல், இவரும் முன்னமே தமக்குக் கிடைத்த ஒழிவுநேரங்களில், எப்பொழுதும் இயங்கவல்லதான ஒரு பொறியைப் புதிதுசெய்வதிற் றமது கருத்தைச் செலுத்திவந்தார்; அம்முயற்சியிலிருந்து நூற்கும் பொறியினை ஆக்குவது அவர்க்கு எளிதில் வந்து கைகூடிற்று.

அங்ஙனம் அதனை ஆக்கும் ஆராய்ச்சியிலேயே இவர் தமது கருத்தை முழுதும் ஈடுபடுத்தியிருந்தமையால், தமக்கு வழக்கமாயுள்ள தொழிலையும் பராமுகஞ் செய்தனர்; அதனால், சிறிது மிச்சம்பிடித்து வைத்திருந்த பணத்தையுந் தொலைத்துவிட்டனர்; கொடிய வறுமையும் இவரைவந்துபற்றி நலிவதாயிற்று. இத்தறுவாயில் இவர்க்கு மணமாகியிருந்தது. இவர்தம் மனைவி, இவர் தம்முடைய காலத்தையுங் காசையும் வேண்டுமென்றே பாழாக்குவதாகக்கருதி மனம்பொறுதவளாய், ஒருநாள் தனக்குத் திடுமெனத்தோன்றிய மிக்கசினத்தால், தனது குடும்பத்திற்குவந்த வறுமையின் காரணத்தைப் போக்கு வாள்போல், இவர் உருவாக்கிவைத்திருந்த மூலப்பொறிகளையெல்லாம் வலிந்தெடுத்து உடைத்தெறிந்தாள். ஆர்க்குரையரோ தாம் மேற்கொண்டதோர் அருமுயற்சியில் விடாப்பிடியும் மனக்கிளர்ச்சியும் வாய்ந்தவர்; ஆகவே, இவர் தம் மனைவிசெய்த இவ்வடாச்செயலைக்கண்டு அளவுக்குமிஞ்சிய மனநோக்காடுடையராய், உடனே அவளை விட்டுப் பிரிந்துபோயினர்.

பிறகு, அயலூர்களில் இவர் செல்கையில், 'வாரிங்கதன்' (Warrington) என்னும் ஊரில் நாழிகைவட்டில் (கடிகாரம்) செய்வாரான 'கே' எனப்பெயரிய ஒருவரோடு இவர் பழக்கமானார். அவர், இவர் ஆக்கிய 'ஓவா இயக்கப்பொறி'யின் சில பகுதிகளைச் செய்வதற்கு உதவி புரிந்தார். ஆர்க்குரையர் சிகழிகை விற்குந் தொழிலை அறவே கைவிட்டுத், தாஞ் சமைத்தற்குப் புகுந்த நூற்பொறியை முற்றுந் திருத்தமாகச் செய்துமுடித்தலிலேயே கருத்தொருப்பட்டு நின்றார். அதனை முடித்த பின், அதன் முதற்படியினை இவர் சொல்லிக் காட்டிய வண்ணமே 'கே' என்பவர் செவ்வனே செய்தமைத்தார்.

அங்ஙனம் அமைத்த அப்பொறியைப், பிரத்தன்மா நக ரின் கண்ணதான இலக்கண அறச்சாலையின் கூடத்திற் கொண்டுபோய் வைத்தார். இவர் தமக்குள்ள வறுமை யாற் கந்தையாய்ப் போன உடைகளை உடுத்திருத்தல் கண்ட அவ்வூரவர் சிலர் தாம் ஒருங்குசேர்ந்துதவிய பொருளாற் புதிய உடைசெய்து அவரை உடுப்பித்தனர். அதன்பிறகே இவர் தமது பொறியினைக் காட்டுங் கூடத் திற்குச் சென்றனர். ஆனாற், கையால் நூல் நூற்றுப் பிழைக்குந் தொழிலாளிகள் நிறைந்த அந் நகரத்தில் இவர் தமது நூற்பொறியைக் கொணர்ந்து காட்டுவது இடர் விளைப்பதொன்றாய்த் தோன்றியது. அவ்வறப்பள் ளிக்கூடத்துக்கு வெளியிலே அத் தொழிலாளிகள் இடை யிடையே உறுமும் ஒலி கேட்டது. இதற்கு முன் ஒரு நூனுழிப்பொறி அமைத்த 'கே' என்பவரும், இராட்டி னம் ஒன்றமைத்த எளிய 'ஆர்கிரிவரும்'தாம் ஆக்கிய அப் பொறிகளைப் பலர்க்குங் காட்டப்போன ஊர்களில் அவ் வூர்க் கலகக்காரரால், அவருடைய பொறிகள் உடைத் தெறியப்பட்டன. அந்நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்த ஆர்க் குரையர் இனி இவ்வூரிற் றங்குவது தொல்லைக் கிடமாகு மென அஞ்சித், தமது பொறியை யெடுத்துக்கொண்டு அத்தகைய துன்பத்திற்கு அஞ்சவேண்டுவதில்லாத 'நாட் டிங்காம்' என்னும் நகருக்குப் போயினர்.

அங்கே சில நாள் வைகித், தமக்குப் பொருளுதவி செய்து, தமது நூற்பொறியைப் பயன்படுத்தத் தக்காரை இவர் நாடுகையில், அந்நகரில் மிக்க புகழ்உடைய ஒரு தொழில் நிலையத்தின் தலைவரும் பொறிகள் அமைப்பதிற் றிறமைவாய்ந்தவரும் ஆன 'இசுருதர்' (Strutt) என்பார் தமக்கு நண்பராகப்பெற்றார். இசுருதர் இவர் ஆக்கிய நூற்பொறியின் அமைப்பினைக் கண்டு மிகவும் வியந்து;

தம்மொடு கூட்டாகச் சேர்ந்து நூற்குந்தொழில் நடாத் தும்படி இவரோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். அதுமுதல் இவர்க்கு நல்லகாலம் பிறந்தது. 1769-ஆம் ஆண்டில் ஆர்க்குரையர் பெயரினாலேயே அந்நூற் பொறிக்குரிமை வாங்கப்பட்டது. அதே ஆண்டில் 'ஜேம்ஸ்வாட்' என்பவர் புதிதுகண்டமைத்த 'நீராவிப் பொறி'க்கு உரிமை வாங்கப்பட்ட நிகழ்ச்சியும் ஒத்துக் கொண்டமை பெரிதும் இறும்பூது பயப்பதாயிருக்கின்றது. அதன்பின், அந்நாட்டிங்காம் ஊரிலேதான் முதன் முதல் ஒரு பஞ்சாலை நிறுவப்பட்டது.

இவ்வளவிலே ஆர்க்குரையரின் பாடு முடிந்த தென்று சொல்லுதற்கிடமில்லை. தாம் இயற்றிய நூற் பொறி இயங்குங்கால அதில் இவர் இன்னும் பல சீர் திருத்தங்கள் செய்யவேண்டியவரானார். ஓயாமல் அதிற் பலமாறுதல்களுந் திருத்தங்களுஞ் செய்தபடியாகவே யிருந்தார். அங்ஙனமெல்லாம் இவர் அதனைச் செப்பஞ் செய்து கொண்டுவந்த பின்னர்த்தான் அது செவ்வனே யியங்கிப் பயன்றருவதாயிற்று. இவ்வாறு அது செவ்வனே நடைபெறலானபின்னுஞ், சில ஆண்டுகள் வரையில் தன்னால் வருவாய்க்கிடமின்றி மனவயர்ச்சியினை உண்டாக்கியதன்றியும், அது தன் செலவுக்காக ஏராளமான பொருளையும் விழுங்கிவரலாயிற்று.

இவ்வாறு சில ஆண்டுகள் கடந்தபின், நன்மையுண்டாகி வருந் தறுவாயில், இலங்காமாகாணத்துக் கைந் நெசவுகாரர்கள், ஆர்க்குரையரது உரிமை நூற்பொறியை வலிந்துகைப்பற்றி உடைத்தெறிந்தனர். ஆர்க்குரையர் தொழிலாளிகட்குப் பகைஞர் என்றும் ஆங்காங்கு ஏசப்பட்டார். சோர்லிஎன்னும் ஊருக்கு அருகாமையில் இவர் அமைப்பித்த பஞ்சாலையினையும் அவ்வூர்க் கலகக்

காரர்கள் இடித்தழித்தனர்; ஊர்காவற்காரர்களும் படைஞரும் அதனைத்தடுக்க எவ்வளவோ முயன்றும் பயன் படவில்லை. ஆர்க்குரையரின் பஞ்சாலையிற் செய்யப்பட்டு வெளிவந்த சரக்குகள், ஏனையோர் கொணர்ந்து விற்ற சரக்குகள் எல்லாவற்றினும் மிகச்சிறந்தனவாயிருந்தும், இலங்கா ஊரார் அவைதம்மை வாங்காமல் மறுத்துவிட்டனர். அதன்மேலும், இவருடைய பொறிகளுக்கு உரிமை கொடுப்பதனையும் அவ்வூரவர் மறுத்துவிட்டதுடன், இவரை அறமன்றத்திற்கு இழுத்து நசுக்கிவிடவுந் துணிந்தனர். செம்மையுள்ளம் வாய்ந்தாரனைவரும் அருவருக்குமாறு இவரது உரிமையினையும் அவர்கள் கவிழ்த்துவிட்டனர். வழக்குமுடிந்து இவர் தம் எதிரிகள் தங்கியிருந்த உணவுவிடுதி யோரமாய்ச் செல்கையில், அவர்களுள் ஒருவன் இவரது செவியிற்கேட்கும்படி "கடைசியாக நாம் பழைய அம்பட்டனைத் தொலைத்துவிட்டோம்" என உரக்கச்சொல்லினன்; அதற்கிவர் பொறுமையாய்; "அதைப்பற்றிக் கவலையில்லை; இன்னும் என்னிடஞ் சிரைக்குங்கத்தி மிச்சமாய் இருக்கின்றது; அதுகொண்டு நுங்களெல்லாரையுஞ் சிரைத்துவிடுவேன்" என மறுமொழிதந்தனர்.

பின்னர்ச் சிறிதுகாலத்தில் இவர் இலங்காவூர்முதற் பல இடங்களிற் புதிய பஞ்சாலைகள் அமைத்தனர். இசுருதருடன்கொண்ட கூட்டுத் தீர்ந்தபின் இருவருஞ் சேர்ந்து நடத்திய பஞ்சாலைகளும் இவருடைய கைக்கு வந்தன. இவருடைய பஞ்சாலைகளிலிருந்து போந்த சரக்குகள் தொகையிலுந் தன்மையிலும் விழுமியவாயிருந்தமையாற், சிறிதுகாலத்திலெல்லாம் நூல்வாணிகம் முழுதும் இவரது ஆட்சிக்கே உட்படலாயிற்று. ஏனைநூல் வண்கர் தொழில் முற்றும் இவரது ஆட்சிக்கீழ் வந்த

மையால், இவரே சரக்குகளின் விலையை ஒருநிலையில் வைத்து உறுதிப்படுத்தினர்.

இவ்வாறாக ஆர்க்குரையர் தமக்குநேர்ந்த பல அல்லல்களின் இடையிலுஞ் சிறிதும் உளங்கலங்காதவராய்த், தாம் மேற்கொண்டதொரு சிறந்த முயற்சியிலேயே உறைத்துநின்றமையால், இவர் அவ்விடர்களை யெல்லாம் புறங்கண்டு, தமதரியமுயற்சியின் பயனை நன்கு பெறலானார். முதன்முதற் றாம்ஆக்கிய நூற்பொறிக்குப்பின் பதினெட்டாண்டுகள் கழித்துத், 'தெரிபி' மாகாணத்திலுள்ளாரால் இவர் பெரிதும் நன்குமதிக்கப்பட்டு, இவர் அவ்வூர்க்கு நாட்டாண்மைக்காரராகவும் ஏற்படுத்தப் பட்டனர். அதற்குப்பிற் சிலநாளில் மூன்றாஞ் 'சியார்சு' மன்னர் இவர்க்கு 'நைட்' என்னுஞ் சிறந்த பட்டமும் வழங்கி இவர்க்குப் பெருஞ்சிறப்புச் செய்தனரென்பது.

உலகத்திற்குப் பெரும்பயன்றரும் ஒருசிறந்த முயற்சியினைத் துவங்கி அதனை முடித்துப் பயன்படுத்துவதிற்றலையிட்டமேலோர்கள், தாம் பிறந்த குடி எவ்வளவு இழிந்ததும் ஏழைமையுடையதுமாயிருப்பினும், தம்முடைய பிறப்பின் இழிபும் எளிமையும் நோக்கிக் கல்லாக் கசடர்களுங் கற்றும் மெய்யறிவு பெறாதவர்களும் அவரை எவ்வளவுதான் இழித்துரைப்பினும், தாம் எடுத்த நன்முயற்சி நன்கு முடியாவாறு அக்கயவர்கள் அவர்க்கு எவ்வளவுதான் தீங்கிழைப்பினும் அவர் தாமெடுத்த முயற்சியைச் சிறிதுஞ் சோர்ந்துவிடாராய் அதனை எங்ஙனமாயினும் நன்கு முடித்துத், தமக்கு இன்னாசெய்தாரும் அதனால் இனிதுபெற்று மகிழ்ந்திடப்புரிகுவர். என்னும் இவ்வுண்மையினை ஆர்க்குரையரின் வாழ்க்கை வரலாறு நன்கு விளக்குதல்காண்க. செயற்கரிய செய்பவரே பெரியர், அதுசெயமாட்டாதவரே சிறியர் என்பது

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்" என்னுந் திருக்குற ளுரையாலும் நன்கு விளங்குகின்றதன்றோ? கல்வியுந் தவமும் நன்முயற்சியும் வாயாத கீழ்மக்கள் தம்மை உயர்குலத்தவராகவும், அம்மூன்றும் வாய்ந்த மேன்மக் களை இழிகுலத்தவராகவும் பிழைபடக் கருதியுஞ் செருக் கிக் கூறியுந், தாம் உள்ளீடில்லாப் பதராதலைக் காட்டுத லுடன், மேன்மக்கள் செய்யும் நன்முயற்சிகளைப் பய னிலவாக்குதற்கும் மடிகட்டி நிற்கின்றனர். அன்ன வரை நோக்கியன்றோ **நாலடியார்,**

"நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை-தொல்சிறப்பின்
ஒண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
என்றிவற்றான் ஆகுங் குலம்" என்று நவலுவதா யிற்று? ஆர்க்குரையரை அவர் பிறந்த குலம்பற்றியும், அவர் முதலிற் செய்து போந்த சிரைத்தற் றொழில்பற்றி யும் இழித்துப் பேசியவர்களே, அவர் அரிதின் ஆக்கிய நூற்பொறியாற் சீருஞ் செல்வமும் பெற்றபின், அவரை யே தமதூருக்கு நாட்டாண்மைக்கார ராக்கி உயர்த்தி வைத்தனர்கள். நன்முயற்சி யுடைய உண்மையாளர் பக் கமே இறைவன் நிற்றலால், அவர்க்குப் பகைவராய் நிற் பார் செய்யுந் தீங்குகள் அவரை அணுகாமலே விலகி ஒழிகின்றன. ஆதலால், அறிவும் உழைப்பும் விடா முயற்சியும் உடையராய்த் தமக்கும் பிறர்க்கும் பயன்பட வாழ்தலே மக்கட்பிறவி யெடுத்தாரெல்லார்க்கும் உரிய இன்றியமையா ஒழுகலாறுமென்று தெளிந்துகொள்க.



## திருவள்ளுவர் வாழ்க்கை

திருவள்ளுவ நாயனுர் தம் மருமை மனைவியார் பாப்பம்மையாரோடு அன்புடன் அளவளாவி இல்லற வாழ்க்கையினை இனிது நடாத்தப் புக்கபின், அதனை இடர்ப்படாது நடத்துதற்கு இன்றியமையாது வேண்டிய பொருள் ஈட்டுதற்கருவியாவது யாதென ஆராயலானுர். உலகியல் வாழ்க்கைக்கு முதலதான உணவுப் பொருளைத் தரும் உழவுதொழிலை எல்லாத் தொழில்களினுஞ் சிறந்ததென முடிவுகண்டுரைத்தாராயினும், உழவினைச் செய்யுங்கால் ஓரறிவுயிர்களான பல்வகைப் புற்பூண்டுகளுங் களைந்தெறியப்படுதலானும், ஈரறிவுயிர்களான நத்தை கிளிஞ்சில் முதலியன நசுக்குண்டு இறத்தலானும், மூவறிவுயிர்களான எறும்பும் அட்டையும் மிதியுண்டு அழிதலானும், நான்கறிவுயிரான நண்டும் ஐயறிவுயிர்களான மலங்கும் பாம்பும் ஏரின்கொழுவாற் கிழிவுண்டு மாய்தலானுங், கொல்லா அறத்தினையே முதலறமாய்க் கைக்கொண்ட தமக்கு அவ்வுழவு தொழில் ஆகாமையினை ஆய்ந்துணர்ந்தார்.

இனி, ஓர் அரசன் கீழாயினும் ஒரு பெருஞ்செல்வரை அடுத்தாயினும் ஒருதொழில் புரிந்து பொருள் ஈட்டலாமெனின், அவர் ஏவிய வழியன்றித், தமக்கென ஓர் அறிவுந் தமக்கென ஒருசெயலும் இல்லா ஒரு மரப்பாவைபோல் இயங்கி, எந்நேரமும் அச்சத்திலுங் கவலையிலும் ஓய்வின்றி வாழ்நாட் கழிக்கவேண்டி வருமாகலின், அதுவுந் தமக்கு ஆகாதென உணர்ந்தார். இவரது மனநிலை இன்னதாதல்,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந்
தொழுதுண்டு பின்செல்பவர்" என்றும்,

"என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை" என்றும் அவர் அருளிச் செய்த திருக்குறட் பாக்களால் இனிதறியப்படும்.

இனிப், பல்பண்டங்களை விலைகொண்டு விற்கும் வாணிக வாழ்க்கையை நடாத்திப் பொருள் பெறலாமெனின், எந்நேரமும் உயர்ந்த பொருட்பயன் ஆராய்தலிலுந், தமக்கு முன்னிருந்த சான்றோர் அருளிய நூல்களைப் பயிறலிலும், அவற்றைப் பயின்றதன் பயனாக எல்லா அறிவும் எல்லா முதன்மையும் ஒருங்குடைய இறைவன் றிருவடிகளை ஓவாது தொழும் அருந்தவப் பயிற்சி செய்தலிலுங் கருத்து ஈடுபட்டு நிற்குந் தமக்குப், பலநாடு சென்று பல பண்டங்கள் தேடிக்கொணர்ந்து விற்கும் வாணிக வாழ்க்கையும் ஆகாதென நன்குணர்ந்தார். மேலும், வாணிகம் நடாத்துதலிற், பிறருடைய பொருளைத் தம்பொருள்போற் கருதும் நடுவுநிலை வாய்த்தலும் அரிதெனக் கண்டார். இவரது மனப்பான்மை இப்பெற்றியதாதல்,

"நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழினலம்
மண்மாண் புனைபாவை யற்று" எனவுந்,

"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு" எனவுங்,

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்" எனவுந்,

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு" எனவும்,

"வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்" எனவும் அவர் அருளிச்செய்தவாற்றால் நன்கறியப்படும்.

ஆகவே, நாயனார் தமதில்லறவாழ்க்கையைச் சுருங்கிய செலவில் ஆரவாரமின்றி நடத்தினார், பொருள் வருவாயை மிகுதியாக நாடவேண்டுவதில்லை யெனவும், பொருள் வருவாயை மிகுதியாக நாடாதபோது வாணிகஞ்செய்தலும் பெருஞ் செல்வரின்கீழ் ஊழியஞ் செய்தலும் வேண்டாவெனவும் முடிவுசெய்தார்; இஃது,

"ஆகா றளவிட் டிதாயினுங் கேடில்லைப்
போகா றகலாக் கடை" என அவரருளிச்செய்த

திருக்குறட் செய்யுளால் இனிது விளங்காநிற்கின்றது.

இவ்வாறாக ஊழியமும் வாணிகமுந் தமக்குஆகா எனக் கண்டபின், தமது எளியவாழ்க்கைக்கு இசைவதாவது, ஆடைநெய்துவிற்று, அதில்வருஞ் சிறியதோர் ஊதியங்கொண்டு தாமுந் தம்மனைவியாரும் இல்லறம் நடாத்துதலேயாம் என முடிவு செய்தார். இங்ஙனம் முடிவு செய்தபின், நாடோறும 'ஏலேலசிங்கர்' என்னும் வணிகர்பாற் சென்று, அவரிடமிருந்து ஐந்து பணத்திற்கு நூல்வாங்கி அதனை ஆடையாகநெய்து, தமது அன்றாட வாழ்க்கைச் செலவுக்கு வேண்டிய அளவு அதனை ஊதியத்துக்குவிற்று, ஊதியத்தை மனைச்செலவுக்கும், மிசசம் ஐந்து பணத்தை அடுத்தநாள் நூல்வாங்குதற்கு முதலுமாக வைத்துத், தம் அருமை மனைவியாருடன் காதலன்பிற் றிளைத்தபடியே, தமது அருந்தவவொழுக்கத்தைப் பொருந்துமுறையில் ஆற்றிவந்தார். நாயனார் செய்தது நெய்தற் றொழிலேயென்பது,

"பூவிலயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவியளந்தோனுந் தாமிருக்க—நாவில்
இழைநக்கி நூனெருடும் ஏழையறிவேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து"

என்னும் இவரது தனிச்செய்யுளினால் அறியப்படும்;

இச்செய்யுள் தமிழ்நாவலர் சரிதையிற் காணப்படு

இங்ஙனம் இல்லறம் என்னுந் தீம்புனல்யாறு ஒரு புறமுந், துறவறம் என்னுந் தண்புனல்யாறு மற்றொருபுற முமம் வந்துநிறையும் ஒரு மலர்வாவிபோல, நாயனார் இருவகை யொழுக்கமும் ஒருவகையிற்கொண்டு தமக் கும் பிறர்க்கும் பெரிதும் பயன்படுத லுடையராய் வாழ்ந்து வரலானார். அதனோடு அஞ்ஞான்று தமிழி லும் வடமொழியிலும் வழங்கிய அரிய பெரிய நூற் பொருள்களை யெல்லாம் ஆழ்ந்து நுண்ணிதின் ஆராய்ந் தறிந்து கல்விக் கடற்கோர் எல்லையாயும் விளங்கினார் நாயனார். இங்ஙனந்தமிழ்ப் பேராசிரியராய் இவர் விளங் குதலைக் கண்ட கலைவல்லாரெல்லாம், இவர்தந் திருவடி களை அடைந்து இவர் அறிவுறுக்கும அரும்பொருள் அறிவுரைகளைச் செவியாரப் பருகித், தம்முளத்தை அவ் வறிவுப் பேரமிழ்திற் றோய்விக்கும் விழைவு பெரிதுடை யராய்க் குழுமினார். அதனால், தவப்பெருந் தலைவரான நாயனார், மக்களுயிர்க்கு இம்மை மறுமையில் உறுதி பயப்பவான ஒவ்வொரு பொருளினையும், பாலைத் துழா வித் துழாவிக் காய்ச்சி அதன் பரப்பனைத்தினையுஞ் சுருங் கத் திரட்டி மாற்றுயர்ந்த ஒருசிறு பொன்வள்ளத்தில் நிறையவைத்தாலென்ன, மிகச்சில விழுமியசொற்களால் மிகச்சிறிதாய் நறுவிதாய் அமைத்த குறட்பாவிற் செறித்து, அங்ஙனஞ் செறித்த அவ் வரும்பெரும் பொருளை யெல்லாந், தம்மை யணுகிய மாணாக்கர்க்கு உளங்கொளத் தேக்கும் பேருதவியினைச் செய்து வர லானார்.

பிறரெல்லாம் எண்ணுவதொன்றுஞ் சொல்லுவது மற்றொன்றுஞ் செய்வது பிறிதொன்றுமாகத் தாமே தம்

மிற் பெரிதும் முரணிநிற்பர். அங்ஙனந் தாமே முரணி நிற்றலால், அவரெல்லாந் தமது வாழ்க்கையினைச் செவ்வனே நடத்தமாட்டாமற் றாம் பெரிதுந் துன்புறுதலுடன், தம்மைச் சார்ந்தா ரத்தனைபேரும் மிக்க துன்பத்தினை எய்துமாறுஞ் செய்வர். மற்று, நாயனாரோ தாம் நன்குஆராய்ந்து நினைந்ததனையே பிறர்க்குஞ் சொல்லினர்; தாமுஞ் செய்தனர். நாயனார் அறங்களுள் மிகச் சிறந்ததெனத் தெளிந்தது ஒருயிரையுங் கொலைசெய்யாத கொல்லா அறமே யாம்; தாங் கண்ட அவ்வுண்மையினையே,

"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று" என்று தாம் அருளிச்செய்த திருக்குறளிலும் பலரறியச் சொல்லினர். அங்ஙனஞ் சொல்லியதற் கேற்பவே, உயிரழிவுக் கிடமான மற்றைத் தொழில்களெல்லாஞ் செய்தலைவிட்டு, உயிரழிவுக்கு இடமில்லா நெய்தற்றொழிலையே செய்து போந்தனர்.

இனிக், கொல்லாமைக்கு அடுத்தபடியிலே நாயனார் சிறந்த அறமெனக் கொண்டது பொய் கூறாமையே யாம். வாணிகஞ் செய்தலில் எங்ஙனமேனும் பொய் வந்து நுழையுமாதலால், அது செய்தற்குத் தமதுளம் ஒருப்படாராய்த் தாம் அன்றாடம் நெய்த ஆடையினை விலைசெய்து பெற்ற சிறுபொருள் கொண்டே தமது வாழ்க்கையினை வளனுற நடாத்திவந்தார். இவர் இவ்வாறு சிறிய வருவாய்ப் பொருள்கொண்டு மனையறம் நடாத்துதற்கு, இவர்தம் மனைவியார் மிகவும் மனம் ஒத்து நடந்தவராகல் வேண்டும்; இல்லையானால், நாயனார் தாங்கண்ட அறநெறியிற் செல்லுதல் இயலாது.

பார்மின்! இஞ்ஞான்றை மாதரார் பொற்சரிகை மிடைந்த பட்டாடை உடுப்பதிலும், கதிரொளி மிளிரும் மணிக்கலன் பூண்பதிலும், அறுசுவைமிக்க சொறு வைகள் உண்பதிலும், நறுமலர் புழுகு நாளும் அணிதலிலும், நாடகக் காட்சியும் நகைச்சுவைப் பாட்டும் நாடொறுங் கண்டு கேட்டுக் களிப்பதிலும் அடங்கா வேட்கையுடையராய்த், தங்கணவரின் வருவாய்க் குறையினைச் சிறிதுங் கருதிப்பாராது, அவரைப் பெரும்பொருள் கொணரும்படி ஓவாது வருத்தி வருகின்றனர்! அதனால், ஆடவரிற்பலர், தீதும் பழியும் பாராது, தமது தகுதிக்கும் நிலைக்கும் ஏற்ப வரும் வருவாய்ப் பொருளளவில் அமைதிபெறாது, வரம்பு கடந்து சென்று, பிறரை ஏழை எளியரென்றும் நினையாது பல வகையால் நெருக்கி, அவரிடமிருந்து பிழிந்தெடுப்பதுபோல் எடுத்துப் பெற்ற தொகைகொண்டு தம்மனைவியர் வேண்டுமாறெல்லாம் நடந்து அவரை உவப்பிக்கின்றனர்! இவ்வாறு தொடர்பாகத் தீநெறியிற் பொருள் தொகுக்கும் இவர்கள், தமக்கு மேலுள்ள தலைவர்களால் தமது குற்றங் கண்டு பிடிக்கப்பட்டுச் சிறையிடப்படுதலும் உண்டு; அதற்குத் தப்பினால் தம்மாற் பெரிதுந் துன்புறுத்தப் படுங் குடிமக்களிற் றீயாராற் கொலை செய்யப்படுதலும் உண்டு; அதற்குந் தப்பினால் அச்சத்தாலுங் கவலையாலும் ஓயாமுயற்சியாலும் உள்ளம்வெந்து, என்புருக்கி நோய் முதலியன கொண்டு, ஆற்றொணத் துன்புழந்து காலம் முதிராமுன்னரே மாய்தலும் உண்டு. எவ்வாறேனும் பிறன் கைப்பொருளை வெஃகி அறனல்ல செய்பவர் கெட்டொழிதல் திண்ணம்; அவரேயன்றி அவரது குடிமுழுதும் மாயுமென்பதனையும் நாயனரே,

"நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்" என்று அருளிச் செய்
திருக்கின்றார். இங்ஙனமாக, ஆடவர்தந் தீவினைக்கு அவர்
தம் மனைவியரின் அடங்காப் பேராவாவே காரணமா
யிருத்தலால், அவர்தம் நல்வினைக்கும் அவர்தம் அவா
வின்மையே காரணமாயிருக்கின்றது. இவ்வுண்மை
யினை நாயனாரே,

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" என்றும்,

"மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்" என்றும்,

"இல்லதென் இல்லவள் மாண்பானல், உள்ளதென்
இல்லவள் மாணக்கடை" என்றும் நன்குவிளக்கி

யிருத்தல் காண்க. இங்கே கூறியதுகொண்டு மகளி
ரெல்லாருந், திருவள்ளுவரின் மனைவியாரைப் போல்,
மிக்க எளிய நிலையிலேயே காலங் கழிக்கவேண்டுமென்
பது எமது கருத்தாகக் கொள்ளற்க. மகளிராவார் தங்
கணவரின் வருவாய்க்குத் தக்கபடியாகவுந், தங் குடும்
பத்தின் செல்வநிலைக்குத் தக்கபடியாகவும், உயர்ந்த
முறையிலோ, அன்றி நடுவானமுறையிலோ, அன்றி
எளிய நிலையிலோ மனப்புழுக்கமின்றித் தங்கொழுந
ரோடு ஒத்து வாழ்க்கை செலுத்தல் வேண்டுமென்பதே
எமதுகருத்தாவதாம். தீதின்றி வந்தபெரும்பொருள் உள
தாயின், அதனைக் கற்றார்க்கும் வறியார்க்கும் ஏழைமக்
கட்குங் கொடுத் துதவிசெய்வதுடன், தாமும் உயர்ந்த
முறையில் ஐம்புலநுகர்தலிற் குற்றம் ஏதும் இல்லை.
பெருஞ்செல்வர் செயல் இங்ஙன நடைபெறற்பாலதென்
பதனை நாயனாரே,

"வைத்தான்வாய்சான்ற பெரும்பொருள் அஃதுண்
செத்தான் செயக்கிடந்த தில்" எனவுங், [ணான்
"கொடுப்பதூஉந் துய்ப்பதூஉம் இல்லார்க் கடுக்கிய
கோடி உண்டாயினும் இல்" எனவும்,
"ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் தக்கார்க்
கீதல் இயல்பிலாதான்" [கொன்

எனவும் ஓதுமாற்றால் நன்கு தெளிந்துகொள்க.

அஃதொக்கும், மிகுந்த செல்வம் உடையாருந் தமது பெரும்பொருளை அற்றார்க்கும் அலந்தார்க்கும் பயன்படுத்துதலே முறையாமல்லது, உயர்ந்த ஐம்புல இன்பங்களைத் தாம் நுகர்தலினும் அதனை அழித்தல் நன்றாமாறு யாங்ஙனமெனிற், கூறுதும். அற்றார் அழிபசிதீர்த்தலும், அவருடுக்கக் கூறை கொடுத்தலும், அவர் மேலுமேலுந் தம் வயிறு கழுவுதற்கு ஆவனசெய்து வைத்தலும் எல்லாம் அவரது உடம்பினை ஓம்புதற்குப் பயன்படும் அவ்வளவே யல்லாமல், அவரது அறிவினை வளர்த்து அதனை ஒளிபெறச்செய்தற்குப் பயன்படுதல் கண்டிலமே. அதனால், அவரது உடம்பினை மட்டும் பேணுதற்குத் தக்கதாகப் பொருளைப் பயன்படுத்தும் ஒரு துறையிலேயே செல்வர் தமது முயற்சியினை ஊன்றிச் செய்தல் நிலையான பெரும்பயனைத் தரவல்லதன்று. அவரது அறிவு வளர்ந்து ஒளிர்தற்கான பல கலைத்துறைகளிலும் அவர்களைப் பயிற்றுதலினுந் தம் பொருளையும் முயற்சியையும் பயன்படுத்துதலே அவர் தமக்கு இன்றியமையாத அறமுங் கடமையுமாகும். அவ்வாறு ஏழை யெளியவர்களைப் பல்வகைக் கல்விகளிலும் பயிற்றி, அவரை அறிவிலும் முயற்சியிலும் மேம்படச் செய்துவிட்டால், அவர் பின்னர்ப் பிறருதவி வேண்டாது தமது வாழ்க்கையினைத் தாமே இடர்ப்படாது நடாத்தித் தமக்கும் பிறர்க்கும் பயன் படுவர்.

ஆகவே, செல்வத்தின் அளவுக்கு ஏற்றபடி அதில் ஒரு பகுதியை அற்றார் அலந்தார் அழிபசி தீர்த்தற்கும், அவர் பலதுறைக் கல்வியில் தேர்ச்சி பெறுதற்கும் பயன்படுத்தி வைத்து, மிச்சத்தைத் தாம் ஐம்புலவின்பம் நுகர்தற்குங், கருவிநூல் வீட்டுநூல் ஓவாது கற்றுப் புலமை நிரப்புதற் குந், திருக்கோயில்கடோறுஞ் சென்று இறைவனை வழி பட்டுப் பிறவியைத் தூய்தாக்குதற்கும் பயன்படுத்திக் கொள்ளல்வேண்டும். ஐம்புல இன்பங்களை நுகராக்கால் எவர்க்கும் மனக்கிளர்ச்சி குன்றிவிடும்; மனக்கிளர்ச்சி குன்றவே அறிவு மழுங்கும், முயற்சி அவியும்; அறிவும் முயற்சியுங் குறையவே கருவிநூல் வீட்டுநூல் கற்றலில் அவா வுண்டாகாது; அவை யிரண்டுங் கல்லாக்கால் இவ் வுலக வாழ்க்கை இனிது நடவாமையோடு இறைவனை யுணர்ந்து அவனை வழிபடுதற் கண்ணுங் கருத்துச் செல் லாது. ஆதலாற், புலன்களை ஒழுங்கான முறையில் நுகர் தல் மக்களின் இம்மை மறுமை வாழ்க்கைக்குப் பெரிதுந் துணைசெய்வதேயாகும். என்றாலும், ஐம்புல நுகர்ச்சியி லேயே முழுதும் உணர்வு இழுப்புண்டு, அதனின் விழு மியவான கல்விப் பயிற்சியினையும் அதன் பயனான கட வுள் வழிபாட்டினையுங் கைவிடுதல் இழுக்காமென்பதே திருவள்ளுவ நாயனார் கருத்தாகும். இது,

> "சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே
> மற்றின்பம் வேண்டுபவர்"

என்று அவர் ஓதுமாற்றான் அறியப்படும். ஆகவே, ஐம் புல இன்பங்களை ஒழுங்கான முறையில் நுகர்ந்து, அந் நுகர்ச்சியின் வாயிலாகவரும் அறிவையும் முயற்சியை யுங் கல்வியிலுங் கடவுள் வழிபாட்டிலும் பிறர்க்குதவி செய்தலிலுஞ் செலுத்தல்வேண்டுமென்பதே எமது கருத் தாகக் கொள்க.

மேற்சொல்லியவாறு நாயனாரின் மனைவியார் தமது மிகச்சிறிய வருவாய்க்குத் தக்கபடி தங் கணவரோடு உளம் ஒருமித்துத் தமது வாழ்க்கையை எல்லாவகையி னும் இனியதாகவே நடத்திவந்தனரென்பது,

"அடிசிற் கினியாளே அன்புடையாளேப்
படிசொற் பழிநாணுவாளே—அடிவருடிப்
பின்றூஞ்சி முன்னுணரும் பேதையை யான்பிரிந்
என்றூஞ்சும் என்கண் எனக்கு"* [தால்

என்று நாயனார் அவர் இறந்துபட்ட ஞான்று நெஞ்சம் நெக்கு நெக்குருகிப் பாடிய செய்யுளால் நன்கறியப்படும்.

உடம்பினை நோய் அணுகாமற் பாதுகாத்து, அத னால் அறிவும் முயற்சியும் மிக்கு இன்பந் துய்த்தற்குப பேருதவி செய்வது செவ்வியமுறையில் அமைத்த உண வேயாகும். நறுவிதாகச் சமைத்த உண்டியே உடம் பிற்கும் உயிருக்குஞ் செழுமையினைத் தந்து, நோய் விலக்கும் மருந்தும்ஆகி, இன்பம் இன்னதென்பதனை மக்களுக்கு முதன்முதற் புலப்படுத்துவதாகும். ஈன் றணிய சிறுமகவு தாய்தருந் தீஞ்சுவைப்பாலைப் பருகுங் கால் தன் பசித்துன்பத்தை மறந்து எத்துணை மகிழ்ச்சி யுடையதாய்க் காணப்படுகின்றது! கீழோராயினும் மேலோராயினும் இன்சுவை வாய்ந்த உணுப்பொருள் களை அருந்துங்கால் அவர் எவ்வளவு உள்ளந் தளிர்க் கின்றனர்! சாறற்ற சக்கைபோன்ற பண்டங்களையுங், காரமுங் கைப்புங் கசப்பும் மிகுந்த உணவுகளையும் ஒரோவொருகால் தின்ன நேர்ந்தக்கால் அவரெல்லாம்

---

* இச்செய்யுள், தொல்காப்பியக் கற்பியல் கஉ-ஆஞ் சூத் திரத்தின் இளம்பூரணர் உரையில் எடுத்துக் காட்டப்பட்டுளது. சில பாட வேறுபாடுகளுடன் இது நச்சினார்க்கினியர் உரையி னும் "தனிப்பாடற் றிரட்டிலுங்" காணப்படுகின்றது.

எத்தகைய மனக்கொதிப்பு உடையராகிச் சினமும் வருத் தமும் எய்துகின்றனர்! சுவையறியா மக்களுக்கும் வைக்கோலைத் தின்னும் மாடுகளுக்கும் ஏதேனும் வேற் றுமையுண்டோ? சிறிதுமில்லை. சுவையுடைய நறும் பண்டங்களைக் கூர்ந்து பார்த்து அமைதியாய் உட்கொள் பவர் எவராயினும் அவர்க்கு நுண்ணறிவு மிகும், அவர்க்கு நோய்வராது, அவர் நன்முயற்சி வாய்ந்தவரா யிருப்பர். உணவுக்கும் அறிவுக்கும் நெருங்கிய தொடர்பு உளது. அறிவுமிக்காரெல்லாம் இன்சுவை கனிந்த உண வினையே சிறிதாய் அமைதியாய் அயின்று உள்ளம் மகிழ் பூத்திருப்பர். இதனாலன்றோ நாயனார் தமக்கு நறுஞ் சுவை யுணவு அமைத்த தம் மனைவியாரின் அன்பையும் அறிவையும் அருந்திறனையும் முதன்முதல் விபந்தெடுத் துக் கூறினார். தங் கணவர்பாற் காதலன்புடைய மனைவி யர் ஒருசிலரே, தங் கணவரின் உடலோம்பவும் அவர் உள்ளம் உவக்கும் வகையானெல்லாம் இனிது ஒழுகவும் நன்காராய்ந்து உணவு அமைப்பதும், இல்வாழ்க்கை நடாத்துவதுஞ் செய்வர். அத்தகைய பேரன்பு வாயாத மகளிரோ அங்ஙனஞ் செய்ய மாட்டுவார் அல்லர். இதனை நாயனாரே,

> "இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
> இல்லவள் மாணக் கடை"

என நன்கெடுத்து வற்புறுத்தினார். ஆகவே, மகளிர் உணவு சமைத்துத்தரும் முறையிலிருந்து அவர் தங் கண வர்பால் எவ்வளவு அன்பு வைத்துளாரென்பது தெள்ளி தின் அறியப்படும்.

மேலுந், தங் கணவர்பாற் காதலன்பு பூண்டு ஒழு கும் ஒரு மங்கை, தன் உறவினர் மாட்டும் அண்டை அய லார் மாட்டும் முறையான அன்பு வைத்து அவரெல்லாம்

உவக்குமாறு அடக்க வொடுக்கத்துடன் நடப்பள். ஏனெனில், அவள் இந்நடையிற் சிறிது பிசகினும், எல்லாரும் அவளைக் கொண்டான்மேற் பழிகூறுநிற்பர். அங்ஙனந் தன்னால் தன்கணவன் பழிச்சொற்கு ஆளாக மனம், பொருளாய் அவள் தன்னைப் பலவகையிலுங் காத்துக் கருத்தாய் அமைதியாய் அறிவாய் நடந்துகொள்வளென்னுங் குறிப்பு, நாயனார் தம் மனைவியார் நடையினை வியந்து "படுசொற் பழி நாணுவாளை" என்று நுவன்ற வாற்றால் தெளியப்படுகின்றது.

இனி, நூலாராய்ச்சியிலும், நூலியற்றுதலிலும், மாணாக்கர்க்கு நூற்பொருள் அறிவுறுத்துதலிலுந், தவவொழுக்கத்திலும், ஆடைநெய்து விற்றலிலும், விற்றுக் கொணர்ந்த சிறுபொருளால் இல்வாழ்க்கையைச் சிறக்க நடாத்துதலிலும் நாள்முழுதும் இரவின் முற்பாதிவரையிலுந் தொடர்பாக முயன்று அயர்வுற்ற நாயனார்க்கு அவ்வயர்வுதீர்த்து அவரை நன்றாகத் துயிற்றுதற் பொருட்டு அவர்தந் திருவடிகளை அவர்தம் மனைவியார் மெல்லெனத் தடவிக்கொடுத்து, அவர் இனிது துயின்றபின் தாந்துயின்று, அவர் துயில்நீங்கி விழிப்பதன்முன் தாம் விழித்தெழுந்த முறைகளையெல்லாம் நாயனார் சுருங்கிய சொல்லில் விளங்கக் கூறியிருப்பது காண்க. இச்செய்யுளில் தம்மனைவியார் பகலிலும் இரவிலும் இல்லறவொழுக்கத்தைப் பேரன்பின் வழியராய்நின்று தாமும் பிறரும் வியந்து பாராட்டுமாறு நடாத்திய அருந்திறன் எத்துணை நுண்ணிதாக எத்துணைச் சுருக்கமாக எடுத்து நுவலப்பட்டிருக்கின்றது!

இவ்வாறு நாயனாரும் அவர்தம் மனைவியாரும் பழமுஞ் சுவையும்போல், மலரும் மணமும்போல், உயிரும் உடலும்போற் காதலன்பால் ஒருங்கொத்து இல்வாழ்க்

கை நடாத்துகின்றுழி, அவ்வாழ்க்கையின் நிகழ்ச்சிகள் சில அவர்தம் அன்பின் மிகுதியினைக் காட்டும் அடையாளங்களாகத் தமிழறிஞர்களால் தொன்றுதொட்டுக் கூறப்பட்டு வருகின்றன. அவைதம்மை இங்கெடுத்து வரைவாம்.

நாயனார் மனைவியாருடன் கூடி இல்வாழ்க்கை நடாத்தும் அருமைப் பாட்டினைத் தமிழ்நாட்டவ ரெல்லாம் வியந்தெடுத்துப் பேசுதலை அறிந்த தமிழ்வல்லார் ஒருவர், நாயனாரை அணுகி அவரை வணங்கி, "ஐயனே, இல்லறவாழ்க்கையோ துறவறவாழ்க்கையோ எது சிறந்தது? அதனை அடியேற்குப் புலங்கொள அறிவுறுத்தருளல் வேண்டும்" என்று வேண்டினார். அவ்வேண்டுகோளைச் செவியேற்ற நாயனார், அவர்க்கு அவ்வுண்மையினைச் சொல்லாற் சொல்லி விளக்குதலினுஞ், செயலாற் காட்டி விளங்கவைத்தலே உண்மையை உள்ளபடி காட்டுமெனக் கருதி, அவரைச் சிலநாட்கள் தம்முடன் இருக்குமாறு கற்பித்தார். அவ்வாறே வந்த அறிஞர் நாயனா ரில்லத்தில் விருந்தினராய் இருந்து வருகையில், ஒருநாட்காலையில் நாயனார் தமக்குப் பழஞ்சோறு இடுகவெனத் தம் மனைவியார்க்குக் கட்டளை இட்டனர். அங்ஙனமே அம்மையார் அவர்க்குப் பழையது பரிமாறி வைத்து, அவரதனை உட்கொண்டபின் வாய் கழுவுதற்காகத் தண்ணீர் முகந்துகொண்டு வரும்பொருட்டுக், கிணற்றண்டை சென்று, அதனுள்ளிருக்குந் தண்ணீரைத் தாம்புக்கயிறு கொண்டு ஒருகுடத்தால் முகந்து மேலிழுக்கும் நிலையிலிருந்தார். அப்போது சடுதியில் நாயனார், "பெண்ணே, சோறு சுடுகிறது! விசிறி கொண்டுவா!" எனக் கூவியழைத்தார். அச்சொற் கேட்ட அம்மையார், கிணற்றின் அடியிலிருந்து அரை

வாசி மேலிழுத்த குடத்தை முழுதும் மேல்இழாமல் அந்நிலேயே விட்டுத், துடித்தோடி வந்து ஒரு விசிறி கொண்டு வீசினார்; வீச அப்பழஞ் சோற்றின்மேல் ஆவி குமுகுமுவென் றெழுந்தது. அதன்பின் அம்மையார் மீண்டுங் கிணற்றண்டை போய்ப்பார்க்கத், தண்ணீர்க் குடமுங் கயிறுங் கிணற்றுள்விழாமல் விட்ட நிலையி லேயே நிற்பதனைக் கண்டு வியந்து, தங் கணவரைத் தொழுது, குடத்தை மேலிழுத்து, அதன்நீரை நாய னார் கைக்கு நீட்டினார். இவ்விரண்டு நிகழ்ச்சிகளையும் நேர்இருந்து கண்ட அவ்விருந்தினர்க்கு, அம்மையார் தாம் பரிமாறியது குளிர்ந்த பழஞ்சோறே ஆதலை உணர்ந் திருந்துந், தங்கணவனார் சோறு சுடுகின்றது எனக் கூவி யதனைக் கேட்டதும், அவ்வுணர்ச்சியினை மறந்து, நாய னாரது சொல்லின் வழியராய், அரைவாசியில் இழுத்த குடத்தையுங் கயிற்றையுங் கூட உடன்மறந்து ஓடிவந்து விசிறிகொண்டு வீசியதும், நாயனாரது சொற் பழுதாகா மல் அப் பழஞ்சோற்றிலிருந்து ஆவி குமுகுமுவென்று மேலெழுந்ததுந், திரும்பிக் கிணற்றண்டை அம்மையார் செல்லும்வரையில் அவர் அரைவாசியில் விட்டபடியே தண்ணீர்க்குடமுங் கயிறும் இடைவெளியில் நின்றதும் எல்லாம் பெரியதோர் இறும்பூதினை விளைவித்து, அம் மையாரின் காதலன்பின் பெருமையினையும் அதன் வழித்தான அவர்தந் தெய்வக் கற்பின் மாட்சியினையும் அவர்க்கு நன்கு புலப்படுத்தின.

பின்னர் ஒருகாற், பகற்பொழுதில் தமது நெசவு தறியின்கண்ணே ஆடை நெய்துகொண் டிருக்கையிற் றமது கையிலிருந்த நூனாழி கீழே வழுவிவிழ, உடனே அவர் அதனை யெடுத்தற்கு விளக்கேற்றி வரும்படி தம் மனைவியாரை அழைத்தனர். அழைத்த வண்ணமே

அம்மையார் விரைந்து விளக்கேற்றி வந்து அதனை ஏந்தினர். பகற்காலத்திற் கீழ் விழுந்ததனை எடுத்தற்கு விளக்கு ஏதுக்கென வினவாமல், நாயனார் விரும்பிய படியே விரைந்து விளக்கேற்றிக் கொணர்ந்த அம்மையாரின் மனவொருமையினைக் கண்டு அவ் விருந்தினர் மிகவும் வியப்பெய்தினர்.

இங்ஙனமாகக் கணவன் ஏவியவைகளை ஏவியவாறே மறுத்து மனவொருமையுடன் செய்யுங் காதன் மனையாள் வாய்ப்பின் அவளுடன் கூடியிருந்து ஐம்புலவின்பங்களை ஆரத்துய்த்து, மறுமை யின்பத்தைப் பெறுதற்காவனவும் இடரின்றிச் செய்தற்கேற்ற இல்லறத்தை நடாத்துதலே விழுமிதென்றும், அங்ஙனங் காதற்கற்புடைய மனையாள் வாயாவிடின் இம்மையின்பங்களை வெறுத்து மறுமை யின்பத்தையே நாடித் தவவொழுக்கத்தில் துளங்காது நிற்குந் துறவறத்தை மேற்கொள்ளுதலே வேண்டற்பாலதென்றுந் தெளியவுணர்ந்து அவ் விருந்தினர் நாயனாரை வணங்கி விடைபெற்று ஏகினரென்ப.

இன்னும், பாப்பம்மையார் தங் காதற் கணவராகிய நாயனார் கற்பித்தவைகளைக் காரணங் கேளாமலே செய்யும் இயல்பினராய் ஒழுகிவந்தன ரென்பதூஉம், அறிவுடையார் கூறும் பின்னும் ஒரு செய்தியானும் நன்கு விளங்கா நிற்கின்றது. தமக்கு உணவு படைக்கும் போதெல்லாம் பரிகலத்தின் பக்கத்தே ஒரு சிறு வட்டிலில் தண்ணீரும், அவ்வட்டிற் பக்கத்தே ஒரு சிறிய ஊசியும் வைத்திடுமாறு நாயனார் அம்மையார்க்குக் கற்பித்திருந்தார்; அவ்வாறே அம்மையாரும் அங்ஙனம் வைத்தலின் காரணங் கேளாமலே தமது இறுதிக்காலம் வரையிற் செய்து போந்தனர். பின்னர்த் தமக்கு இறு

திக்காலம் நெருங்க, அம்மையார் தமதுயிர் பிரியுந் தறு வாயில், அங்ஙனம் நீண்டகாலமாகத் தாம் வட்டிலிற் றண்ணீரும் அதனண்டையில் ஓர் ஊசியும் வைத்து வந்ததும், வைத்த அவை முடிவுவரையிற் பயன்படுத்தப் படாமலே இருந்ததும் என்னை? என்றறியும் வேட்கையால் உயிர் நீங்கமாட்டாமல் தத்தளித்தல் கண்ட நாயனர், "பெண்ணே, நீ ஏன் இங்ஙனம் வருந்துகின்றனை? நீ ஏதேனுங் கேட்க வேண்டுவதிருந்தால் ஐயுறவின்றிக் கேள்!" என்று கட்டளை தந்தனர். அச்சொற்கேட்ட அம்மையார் முகமலர்ந்து மெல்லியகுரலிற், "பெரும, வட்டிலில் தண்ணீரும் ஊசியும் பரிகலத்தின் அருகே நாடோறும் வைத்தும், அவை பயன்படுத்தப்படவில்லையே?" எனவினவினர். அதற்கு நாயனர், "பெண்ணே, நீ சோறிடுங்காற் சோற்றுப் பருக்கை கீழ் விழுந்தால், அதனை அவ் வூசியாற் குத்தியெடுத்து, வட்டிலின் தண்ணீரிற் கழுவிப் பரிகலத்திற் பெய்துகொள்ளுதற்காகவே அங்ஙனம் அவ்விரண்டையும் வைக்கச் சொன்னேன். ஆனல், நீ மிகவுங் கருத்தாகச் சோறு கீழே சிந்தாமல் நாடோறும் பரிகலத்திற் பெய்து வந்தமையால், அவையிரண்டும் பயன்படுத்தப்படவில்லை!" என விடை பகர்ந்தார்; அதுகேட்ட அம்மையார் மனநிறைவுடையராய் நாயனரைத் தொழுதபடியே உயிர்நீங்கின ரென்ப.

இங்கொன்று ஆராயற்பாலதுளது. நாயனரின் மனைவியார் தங்கணவர் ஏவியவைகளிற் காரணம் புலனகாதவற்றிற்குக் காரணங் கேளாது செய்தல், பகுத்தறிவும் ஆராயும் உணர்ச்சியும் வாய்ந்த மக்கட் பிறப்பினர்க்கு ஆகுமோ? வெனின்; அதனை ஒரு சிறிது விளக்குவாம்.

இல்லொழுக்கத்தில் விரைந்து செய்யவேண்டும் நிகழ்ச்சிகளே மிகப்பல. அமைதியாகக் காலந் தாழ்த்துச் செய்யவேண்டுவன மிகச்சில. இன்னும், இல்லத்தின் உள்ளே செய்யவேண்டுஞ் செயல்களினும், வெளியேசென்று செய்யவேண்டுவன மிகவிரைந்து நடைபெற வேண்டுவனவாயிருக்கும். இல்லத்தினுள்ளிருந்து வேண்டுவன செய்வார் பெண்மக்களும், அதன் வெளியேசென்று வேண்டுவன செய்வார் ஆண்மக்களுமாய் இருக்கின்றனர். வெளியேசென்று பொருள் ஈட்டும் ஆடவர், அப்பொருள் ஈட்டும் முயற்சியில் தம்மோடு இணங்கியும் அதற்கு மாறுபட்டும் நடப்பார் பலருடன் தொடர்புற்று நின்று அதனை மிகவிழிப்பாய்க் கூர்த்த அறிவொடு நடத்தவேண்டி யிருத்தலின், அவர் தாம் விரும்பியபடியெல்லாம் அதனைக் காலந் தாழ்த்துப் பராமுகமாய்ச்செய்தல் இயலாது; அதிற் றம்மொடு தொடர்புடையார் செய்யும் முயற்சிக்குத்தக அவரோடு இணங்கியோ இணங்காமலோ தாம் அதனை விரைந்து அறிவாய்ச் செய்து முடிக்கவேண்டி வரும். இதனை ஒரு நிகழ்ச்சியில் வைத்து விளக்குவாம். பழங்கள் மொத்தமாய் வாங்கி விற்பனை செய்யும் ஒருவணிகர், குடகு நாரத்தம்பழம் வருவித்து விற்பனை செய்யும் மற்றொருவர்பால் தமக்கு ஐம்பது வெள்ளிக்காசுக்கு அப்பழங்கள் வேண்டுமெனவும், அவை வந்திறங்கியவுடன் தமக்குத் தெரிவிக்க வேண்டுமெனவும் அறிவித்திருந்தார். அங்ஙனமே வேறு வணிகர் சிலரும் அப்பழங்கள் விலைகொள்ளவேண்டி அவை வரும் நேரத்தைத் தமக்குத் தெரிவிக்கும்படி அறிவித்திருந்தார்கள். பின்னர் ஒரு நாட்காலையிற் றிடுமெனக் குடகுநாரத்தம் பழங்கள் கூடைகூடையாய் வந்திறங்கின. வருவித்தவர் உடனே

தம் ஏவலாட்களை வணிகர் பலரிடமும் போக்கி அதனை அவர்க்கு அறிவித்தனர். முதலிற்கூறிய வணிகர் விழிப்பும் அறிவுஞ் சுருசுருப்பும் உடையர்; அவர் மனைவியாரும் அவரோடு ஒத்து அவர் வேண்டுவனவெல்லாங் காரணங் கேளாமல் உடனேசெய்யும் இயல்பினர். ஆகவே, அவர் காலை ஏழுமணிக்கெல்லாந் தாம் வெளியே செல்லல் வேண்டுமெனவுஞ் செல்லுங்கால் தாம் ஐம்பது வெண்பொற் காசு கொண்டுசெல்லல் வேண்டுமெனவுந் தம் மனைவியார்க்கு ஆறுமணிக்கே தெரிவித்திருந்தார். உடனே அவ்வம்மையார் தங் கணவர்க்கான காலையுணவு செய்துகொடுத்துத், தமது முதற்பொருளிலிருந்து ஐம்பது வெள்ளியும் எடுத்து வந்து வைத்திட்டார். அவ்வணிகர் அமைதியாக உணவுகொண்டு, ஐம்பது காசுகளுடன், பழங்கள் வருவித்தவர்பாற் சென்று, நயத்தவிலையில் தாம் வேண்டியவளவு பழஙகளை வாங்கிக்கொண்டார். இவர் வாங்கிக்கொண்டபின், மற்றை வணிகர் ஒவ்வொருவராய் ஒருவர்பின் ஒருவராய் வந்து பழங்களை வாங்குவாராயினர். வருவித்த பழங்கள் விலையாக விலையாக மிச்சமுள்ள பழங்கள் விலை ஏற்றப்பட்டன. கடைசியாக வந்தவர்க்குப் பழங்களே கிடைக்கவில்லை. ஆகவே, முதன்முதல் வந்து நயத்தவிலைக்குப் பழங்களை வாங்கிக்கொண்ட வணிகரைப் பார்த்து மற்றவர்கள் பொறாமைப்பட்டுத், தக்கநேரத்தில் தாம் வரக்கூடாமைக்குக் காரணந் தம் மனைவிமாரே எனச் சொல்லி ஒருவரோடொருவர் வருந்தலாயினர். ஒரு வணிகர், "நான் ஏழுமணிக்கு வெளியே போகல் வேண்டுமெனச் சொல்லியும், என் மனைவி ஏழுமணிக்குத் தான் மெல்ல எழுந்து சிற்றுண்டி செய்து எட்டுமணிக்குப் படைத்தாள்; அதனால் யான் பிந்திப்போனேன்" என்றனர்.

மற்றொருவர், "எதற்காக இவ்வளவு காலையிற் போகல் வேண்டும்? எட்டுமணிக்கு வழக்கம்போற் போனால் என்ன? நீங்கள் போவதற்குள் மற்றைக் கடைக்காரர் வரமுடியுமா? அவரவர் வீட்டிற் பெண்பிள்ளைகளுங் காலைக்கடன்களை முடித்துக் கொண்டுதானே அடுக்களை யிற் செல்வார்கள்?" என்று கேள்விமேற் கேள்வி கேட்டுக் கொண் டிருந்தமையால், அக்கேள்விகளுக்கு விடை சொல்லி முடிப்பதற்கே எட்டுமணியாயிற்று!" என்ற னர். பின்னர் ஒருவர், "என் மனைவி, இன்றைக்குத் திங்கட்கிழமை, ஏழரை மணிமுதல் ஒன்பதுமணிவரை யில் இராகுகாலம், அது கழித்துத்தான் போகவேண் டும்" என்று வற்புறுத்தி மிகமெதுவாகத் தன் வீட்டு வேலையைச் செய்துகொண் டிருந்தமையால், யான் ஒன் பது மணிக்குமேற் பட்டினியாகவே இங்குவந்தும் பயன்படவில்லை" என்றனர். வேறொருவர், "என் மனைவி 'நான் பட்டுப்புடைவையுந் தங்கச்சங்கிலியும் வாங்க வைத்திருக்கும் பணத்தைப் பழம் வாங்கக் கொடுக்கமாட்டேன்; கடனுக்குவாங்கி விற்றுக் கடனைச் செலுத்தும்' என்று சொல்லிவிட்டனள்; அதனால் நேரங்கழித்துக் கையிற் காசின்றி வரலாயிற்று!" என்ற னர். இங்ஙனமே பிந்திவந்தவர் ஒவ்வொருவருந் தம் மனைவிமார்மேற் குறைசொல்லினர் முந்திவந்தவர் சிலர் தம் மனைவிமாரின் அறிவையும் முயற்சியையுஞ் சுறு சுறுப்பையும் பாராட்டிப்பேசினர். முதன்முதல் வந்த வரும், அவரை யடுத்துவந்த ஒருசிலரும் அப்போது வந்திறங்கிய குடகுநாரத்தம்பழங்கள் அவ்வளவையும் நயத்தவிலையில் வாங்கிக்கொண்டமையாற், பின்வந்த வணிகர்கள் அவர்களிடத்திலேயே மிக்கவிலைகொடுத்து அவைகளை வாங்கிக் கடையில்வைத்து விற்பனைசெய்ய

வேண்டியவரானார்கள்; அவை விற்பனையாக ஒருகிழமைவரையிற் சென்றமையால், அப்பழங்களிற் சிலபல அழுகியும்போயின; குடகுக்கிச்சிலிகள் விரைவில் அழுகுந்தன்மைய. முதலிற்சென்று வாங்கிய வணிகரோ உடனே மற்றைக் கடைக்காரர்க்கு அவைகளை விற்பனை செய்துவிட்டமையால், அவர்க்கு ஏதும் விரையம் நேராமையொடு, மிகுந்த ஊதியமும் பெற்றனர். இது கொண்டு, தங்கணவரின் அறிவும் முயற்சியும் நன்கறிந்த பெண்டிர், அவர் விரைந்துசெய்யும் முயற்சிகளுக்குக் காரணங் கேட்டுக்கொண்டு இராமல், உடனே அவர் ஏவியவைகளை விரைந்து செய்தல் பெரிதும் நலந்தருவதாதல் விளங்குகின்றதன்றோ? ஆதலாற், றங்கணவர் விரைந்து ஒன்று செய்கவென ஏவியபோதும், அவர் தாம் வழிநாட்களில் மேற்கொள்ள வேண்டிய முயற்சிகளைப்பற்றி ஆழநினைந்து ஆராய்ந்துகொண் டிருக்கும் போதும், மனைவிமார் அவரைக் கேள்விமேற் கேள்வி கேட்டு அவர்தம் முயற்சியையும் நினைவையும் பழுதுபடுத்தல் ஆகாது.

அங்ஙனமாயின், மனைவிமார்க்குத் தங்கணவன்மார் செய்யும் முயற்சிகளையும் அவர் எண்ணும் எண்ணங்களையும் அறிந்துகொள்ளுதலில் அவா எழுதல் இயல்பன்றோ? அதனால், அவர் அவற்றை யறிய வினவுதலும் இயல்பேயன்றோ? எனின்; கணவன்மார் தாஞ்செய்யும் முயற்சிகளையும், அவற்றைக் குறித்துத் தாமெண்ணும் எண்ணங்களையுந் தம் மனைவிமார்க்கு உரையாதிரார். கணவற்கு மனைவியினும் உற்றார் பிறர் இல்லாமையின், தம்முள்ளத் துள்ளவைகளை அவன் ஒழிவுநேரங்களில் அவட்கு வெளியிட்டுச் சொன்னால்அல்லாமல், அவன துள்ளம் அமைதிபெறுவதில்லை. ஆதலால், அவன் பா

பாப்பாயிருக்கும் நேரங்களில் அவனை ஏதுங்கேளாமல், அவன் ஏவியவைகளை அறிவாய் விரைந்து செய்து முடித்துச் சிறிது பொறுமையாக இருப்பளாயின், அவனே அவற்றின் காரணங்களை அன்றைப்பொழுதிலோ அல்லது பின்னாளிலோ அவட்குக் கட்டாயந் தெரிவித்துவிடுவன். இந்நுட்பம் உணர்ந்த பெண்டிர், தங் கணவர் தமக்குத் தெரிவிக்கவேண்டுவனவற்றைத் தெரிவிக்குமுன்னரே ஏதுங் கேளார். இந்நுட்பம் உணராத மகளிரோ அவரை ஒவ்வொன்றுங் கேட்டு வருத்துவர். திருவள்ளுவரின் மனைவியாரான பாப்பம்மையாரோ நுண்ணுணர்வு வாய்ந்தவராகையால், தங் கணவரின் மனப்பான்மையும் அவரதுபேரறிவும் நன்கறிந்து அவர் தமக்குத் தெரிவிக்க வேண்டியவைகளைத் தெரிவிக்க வேண்டுங்காலங்களில் திண்ணமாய்த் தெரிவிப்பரென நம்பி, அவர் ஏவியவைகளைக் காரணங் கேளாமல் உடனே செய்துவந்தனரன்றித், தமக்குப் பகுத்தறிவும் ஆராய்ச்சியுணர்வும் இல்லாமையால் அங்ஙனஞ் செய்தாரெனக் கோடல் பொருந்தாது. நாயனார் ஏவியவைகளுக்கு முதலிற் காரணங்கேளாது அவர் ஒழுகிவந்தனராயினும், பின்னர் அவற்றின் காரணங்களைத் தெரிந்துகொள்வதில் அவர் வேட்கை மிகுதியுமுடையரா யிருந்தனரென்பதும், அக்குறிப்பறிந்து நாயனாரும் அவர்க்கு அவற்றை உரியகாலத்திற் றெரிவித்துவந்தன ரென்பதும், அம்மையார் இறக்குந்தறுவாயில், நாயனார் அதுகாறுந் தெரிவியாதுவிட்ட ஊசியும் ஒருசிறு கிண்ணந்தண்ணீரும் அவர் தாம்உண்ணும் பரிகலத்தின்பக்கத்தே நாடோறும் வைக்கும்படி கற்பித்ததன் காரணத்தை அறிந்துகொள்ளும் வேட்கையினால் உயிர்நீங்காதிருந்த நிகழ்ச்சிகொண்டு நன்கு அறியப்படும்.

இவ்வாறாக நாயனாரும் அவர்தம் அருமை மனைவி யாரும், ஓர் ஆவிற்கு இருகோடு தோன்றினாற்போலவும் ஒரு காக்கையின் இருகண்ணிற்கும் ஒருமணியே கலந் தியங்குதல்போலவும் இருதலைப் புள்ளினுக்கு ஓர்உயிரே உள்நின்று உலவுதல்போலவும், ஒருங்கியைந்து இல் வாழ்க்கை நடாத்தும் மாட்சி வரவர எங்கும் பரவி விளங்கலாயிற்று. அதுகண்ட ஒரு தமிழ்மாணவன், நாயனார் தாம் அருளிச்செய்த திருக்குறளிற் சொல்லிய படியே யாவுஞ் செய்துவருதலைத், தான் பின்னும் ஆராய்ந்து தெளிதல்வேண்டி, நாயனார் தாம் நெய்த ஆடையினை விற்கும் இடஞ் சென்று, அவர்கையிற் பிடித்திருந்த அவ்வாடையினைத் தன்கையில் வாங்கி, 'இதன் விலை யாது?' என்று வினவ, அவர் 'அதன்விலை இரண்டுபணம்' என்றனர். அதன்பின் அவன் அதனை இரண்டாகக் கிழித்து. 'இத்துண்டு ஒவ்வொன்றின் விலை என்ன?' என்று வினவ, அவர், 'ஒவ்வொன்றின் விலை ஒவ்வொருபணம்' என்றனர். பின்னும், அவன் அவ்வொவ்வொரு துண்டினையும் இவ்விரண்டாகக் கிழித்து, 'இக்கிழிவு ஒவ்வொன்றின் விலை யாது?' என வினவ, அவர், 'அக்கிழிவு ஒவ்வொன்றின் விலை அவ் வரைப்பணம்' என அமைதியாக விடை நவின்றனர். அதன்மேலும் அவன் அவ்வொவ்வொரு கிழிவினையும் இவ்விரண்டாகக் கிழித்து, 'இச் சிறுகிழிவு ஒவ்வொன் றின் விலை யாது?' எனக்கேட்ப, அவர், 'காற்காறபணம்' எனப் பின்னும் பொறுமையாகவே விலை கூறினர். முகத்திற் சிறிதுஞ் சினக்குறி காணப்படாத அவரது உள்ளப் பொறுமையினைக் கண்ட அம் மாணவன் பெரி தும் வியப்படைந்து, அம்முழு ஆடைக்குரிய விலையினை யும் அவர் கையில் வைத்து அவரை வணங்கிப் போயி னன் என்ப.

அங்ஙனஞ் சென்ற அம்மாணவன் அவ்வளவில் அமைதிபெறுனய்ப் பின்னும் அவரது பொறுமையினை ஆராய்ந்துகாணும் விருப்பினனய், மறறொரு நாள் நாயனரது இல்லத்திற்குச் சென்று, 'பசித்து வந்தேன், எனக்குச் சோறிடுக' எனவேண்ட, நாயனரும் அவற்கு இரங்கித், தம் மனைவியாரை விளித்து, 'இப் பிள்ளைக்கு உணவுகொடு' எனக் கட்டளையிட்டார். அம்மையாரும் பரிந்து அவ்விளைஞற்கு உணவுபடைத்தார். அதனையுண்டு சிறிதுநேரம் அமர்ந்தபின், அவன் அம்மையாரது வலதுகையைப் பிடித்திழுக்க, அம்மையார் திடுக்கிட்டுக் கூவினர். நாயனர் உடனே உள்ளே சென்று நோக்க, அவ்விளைஞன் தம் மனைவியாரின் கையைப் பிடித்திழுக்கக் கண்டார். கண்டு சினங்கொண்டு அவனைப்பிடித்து அருகுநின்ற ஒரு தூணிற் பிணைத்து ஒரு பிரப்பங்கோலால் தொடைமேல் நன்றாய் விளாசினர். அதுபற்றி அவன் நாயனரைநோக்கி,

"மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்றுவிடல்"

என்று நீர் நுமது திருக்குறளில் எழுதி வைத்தது பிறர்க்குமட்டுமோ? நுமக்கும் உண்டோ? எனக் கடிந்து வினவினன். அதுகேட்ட நாயனர், 'அஃதெல்லார்க்குமே; ஆயினும், யாம் அதற்குமேல் எழுதிய,

"செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமையானுங் கெடும்"

என்னுஞ் செய்யுளை நீ உணர்ந்திலைபோலும்! பொறுமைக்கும் ஒரு வரம்புண்டு; செயத்தக்க அல்லாத பெருங் குற்றத்தை ஒருவன் செய்வனயின், அவன்பாற் பொறுமை காட்டுதல் எவர்க்குமே ஆகாது' என நுவன்று அவனுக்கு அறிவு தெருட்டினர்; அவ்விளைஞ

னும் அவ் வுறுதிமொழிகேட்டு அறிவு தெருண்டு நாய னாரை வணங்கிப் போயினன் என்ப. இங்ஙனமே, நாய னார் நடாத்திய இல்வாழ்க்கையின் நுட்ப நிகழ்ச்சிகள் இன்னும் பலவுள.

இனி, நாயனார் தாம் அருளிச்செய்த 'திருக்குற ளில்', இல்வாழ்க்கையின் பயனாவது நன்மக்கட்பேற் றினை எய்துவதேயென்று தேற்றி,

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு" எனக்கூறுதலாலும், தம் பிள்ளைகளின் மழலைச் சொல் லினிமையினைக் கேட்டு இன்புற்றறியாதவர்களே குழலொலி யாழொலி யினை இனிதெனக் கூறுவரெனக்கிளந்து,

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்" எனமொழிதலாலும், தம் மக்களின் சிறிய கையினால் அளாவப் பட்டது புல் லிய கூழாயிருப்பினும் அஃது அமிழ்தினும் இனிதாரு மென்பது விளங்க,

"அமிழ்தினும் ஆற்ற இனிதே தம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்" என நவலுதலாலும், தாய் தந்தையர்க் கின்பமாவது தம் பிள்ளைகளின் மெல் லிய வுடம்பைத் தொடுதலேயாமென்பது தோன்ற,

"மக்கள்மெய் தீண்டல் உடற் கின்பம், மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு" எனக்கிளத்த லாலும் நாயனார்க்கு மக்கட்பேறு வாய்த்திருந்தமை உய்த்துணரப்படும். என்னை? மக்கட்பேறு வாயாத வர்க்கு இவ்வுண்மைகளை யுணர்ந்து பகர்தல் இயலாதாக லின் என்க. ஆனாலும், அவர் ஈன்ற மகாரின் வரலாறு சிறிதும் அறியக்கூடவில்லை. என்றாலும், அவர்க்கு மகப்பேறு வாய்ந்திருந்தமைமட்டுந் திண்ணமாமென்க.

## அறஞ் செய்கை

'அறம்' என்பது தமிழ்ச்சொல். இதனை வட நூலார் 'தர்மம்' என்பர். அறம் என்னுஞ் சொல் அறு என்னும் முதலிலிருந்து உண்டாயது; ஆகவே, ஒருவனுடைய நினைவு சொற் செயல்களின் தீமையை அறுப்பதே அறம் என்னுஞ் சொல்லுக்குப் பொருளாதல் பெறப்படும். ஒருவன் சொல்வனவுஞ் செய்வனவும் எல்லாம் அவன எண்ணும் எண்ணத்தின்வழியாகவன்றி வேறுவகையில் நடைபெறுதல் இயலாது. தச்சன் ஒரு மரப்பாவை செய்யும்போதும், ஓவியன் ஓர் ஓவியம் வரையும்போதும், ஒரு சிறுவன் ஒரு நூல் ஓதும்போதும், ஒரு பாவலன் ஒரு செய்யுள் இயற்றும் போதும் அவர்கள் ஒவ்வொருவருந் தாந்தாஞ் செய்யுஞ் செயல்களில் தமது நினைவைப் பதியவைத்தாலன்றி, அவர்கள் அவைகளைச் செய்து முடிக்கமாட்டாதவர் ஆவர். ஆகவே, நாம் ஒவ்வொருவரும் ஒன்றைச் சொல்லத் துவங்குதற்கு முன்னும், ஒன்றைச் செய்யத் துவங்குதற்கு முன்னும் அவைகளை முதலில் மனத்தின் கண் எண்ணியே சொல்லவுஞ் செய்யவுந் தொடங்குகின்றோம் என்பதனை நினைவுகூர்தல் வேண்டும். ஒருவன் சொல்லுஞ்சொல் தீயதாகக் காணப்படுமானல் அதனை எண்ணிச சொன்ன அவனது எண்ணமுந் தீயதாகவே யிருத்தல்வேண்டும்; ஒருவன் செய்யுஞ் செயல் தீயதாக இருக்குமாயின் அதனை எண்ணிச் செய்த அவனது எண்ணமுந் தீயதாகவே யிருத்தல்வேண்டும்.

அங்ஙனமாயின், தந்தை சொல்லுக்கு அடங்கி நல்வழியில் நடவாத பிள்ளையை அத் தந்தையானவன் திட்டியும் அடித்தும் ஒறுப்பது தீயதாகக் காணப்படுத

லால் அவ்வாறு செய்யும் அவனது எண்ணமுந் தீய தெனக்கொள்ளல் வேண்டுமன்றோ? மற்று, அவன் அவ் வாறு செய்வது தன் மகனை நல்வழியில் நடப்பித்தற் பொருட்டு நல்லெண்ணங்கொண்டு செய்வதேயாகலின், சொல்லுஞ் செயலுந் தீயவாய்க் காணப்படுதல் பற்றி, அவனது எண்ணமுந் தீயதேயாகுமெனக் கோடல் பொருந்துமோவெனிற்; கூறுதும், தன் பிள்ளையைத் திருத்துதற்பொருட்டு முதன்முதல் உண்டாய எண் ணம் நல்லதேயாகும்; ஆனாற்,பின்னர் அதன்பொருட்டு அவனைத் திட்டுதற்கும் அடித்தற்கும் எண்ணிய எண் ணமோ தீயதேயாகும்; பின் உண்டான அவ்வெண்ணந் தீயதல்லாவிட்டால் அவன் தன் புதல்வனைத் திட்டுத லும் அடித்தலுஞ் செய்யமாட்டாதவனாவன். ஆதலாற், தீய சொற்செயல் நிகழும்போதெல்லாம் அவைதமக்கு முதலான தீயஎண்ணமும் ஒருவன் உள்ளத்தே ஒருங்கு நிகழ்ந்தே தீரல்வேண்டுமென உணர்ந்துகொள்க.

அவ்வாறு கொள்ளின், தன்மகாரை ஒறுக்குந் தந் தையின் செயல் நல்லெண்ணம் பற்றியே நிகழ்ந்ததெனக் கோடல் யாங்ஙனம் எனின்; ஒரு நேரத்தில் ஒருவன் செய்யுஞ்செயல் தீயதாகவோ நல்லதாகவோ காணப் படுதல்பற்றி அவனை முழுதுந் தீயனென்றோ நல்லனென் றோ முடித்துவிடுதல் பொருந்தாது. மற்று, அவன் அதனைச் செய்யும் நேரத்திற்கு முற்பட்ட காலங்களிற் கொண்ட எண்ணமும், அதனைச் செய்ததற்குப் பிற் பட்ட காலங்களிற் கொள்ளும் எண்ணமும் எத்தகைய வென்று அவ்விரண்டனையும் இணைத்துப்பார்த்துப், பின்னர் அவனை நல்லனென்றோ தீயனென்றோ முடிவு கட்டுதலே வாய்வதாகும். தீதுசெய்யுந் தன்மகனை ஒறுக்கும் ஒரு தந்தையானவன், அவனை ஒறுக்கும் அந்

நேரத்தில்மட்டுந் தீயஎண்ணம் உடையவனேயல்லால் அதற்கு முன்னும் பின்னுந் தன் மகனுக்குத் தீது நினைத் தவன் அல்லன்; அதற்குமுன் அவனைச் சீர்திருத்தும் நல்லெண்ணமே தன் னுளத்துக் குடிகொளப் பெற்றவ னுவன்; அவனை யொறுத்தபின்னுந் தன் நெஞ்சங் கசிந்து, 'என் அருமைப் புதல்வனை யான் அடிக்கலா னேனே!' என்று கண்ணீர்சிந்திக் கலுழ்வதுஞ்செய்வன்.

இனி, ஓர் ஆட்டுவாணிகனே தான் வளர்க்கும ஆடுகளுக்குக் கொழுமையான தீனிகொடுத்து அவை களை எவ்வளவோ கண்ணுங்கருத்துமாய்ப் பாதுகாத்து வருகின்றான். அங்ஙனம் அவ்வாடுகளை அவன் அன் பின் பாதுகாத்து வளர்த்துவரும் நற்செயலைக்கண்டு அவனை முழுதும் நல்லெண்ணம் உடையவன் என்று கருதிவிடுதல் கூடுமோ? கூடாதே. ஏனெனின், அவன அவைகளை நன்றாய்க் கொழுக்க வளர்த்தபின், அவை களை ஆடறுக்குங் கொட்டிலிற் கொண்டுபோய்விடுத்து, அவற்றின் கழுத்தை அவை துடி துடிக்கவெட்டி, அவற் றின் இறைச்சியை விலைசெய்யக் காண்கின்றோமாதலின அவன் தன் ஆடுகளைக் கொழுமையாக வளர்க்கும் அக் காலத்தில்மட்டும் நல்லெண்ணம் உடையனாயிருந்தா லும், அவற்றை வளர்க்கத் தொடங்குமுன்னும் அவற் றை வளர்த்தபினனும் அவைதம்மைக் கொலை செய்து அவற்றின் ஊனை விற்றுக் காசுபெறுந் தீயவெண்ணமே தன்மனத்திற் குடிகொளப் பெற்றவனா யிருத்தலின், அவன் முழுதும் நல்லெண்ணம் வாய்ந்தவன்அல்ல னெனபது எவர்க்கும் விளங்கற்பாலதேயாம். ஆகவே, ஒருகாலத்து ஒருவன்பாற காணப்படும் நல்லசொல் நல்ல செயல்பற்றி அவனை முழுதும் நல்லனென்றலும், பிறி தொருகாலத்துப் பிறனொருவன்பாற் காணப்படுந் தீய

சொல் தீயசெயல்பற்றி அவனை முழுதுந் தீயனென்ப தும் ஆகா. ஆனாலும், எவர்பால் எக்காலத்து எவ்வி டத்து ஒரு நற்சொல் ஒரு நற்செயல் காணப்படுகின்ற தோ, அவர்பால் அக்காலத்து அவ்விடத்து அவருளத்து அவ்விரண்டற்கும் அடிப்படையாய்த் தோன்றியது நல் லெண்ணமேயாகு மென்பதும், அங்ஙனமே ஒரு தீச் சொல் ஒரு தீச்செயல் நிகழ்ந்தக்கால் அவைதமக்கு முதலாய்நின்றது தீயதோர் எண்ணமேயாகுமென்பதும் மறுக்கலாகா உண்மையாமென்று தெளிந்துகொள்க. அவ்வாறு தெளியவே, மக்களின் சொல்லுக்குஞ் செய லுக்கும் முதலாய் அவரது உள்ளத்தின்கட் டோன்று வது அவரது எண்ணமேயாகுமென்பதும் அதன்வழி யே தெளிந்துகொள்ளப்படும் என்க.

எனவே, அறம் எனப்படுவது, ஒருவனுடைய சொற் செயல்களின்உள்ளே நினைத்துக்கிளம்பிய பொல லாங்கினை அறுத்து அகற்றுதற்குமுன், அவற்றிற்கு முத லான நினைவின்கட் நினைக்கொண்ட தீயவெண்ணத்தை அறுத்துக் களைவதாகும் என்னும் உண்மை நன்கு புல னாகின்றதன்றோ? இவ்வுண்மைகண்டன்றோ நந் தெய்வத் **திருவள்ளுவர்,**

“மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற” என்று அருளிச்செய்தார்.

எல்லா எண்ணங்களுந் தோன்றுதற்கு நிலைக்களனான ஒருவனது மனங் குற்றமின்றித் தூயதாக இருக்குமாறு ஒருவன் செய்துகொள்வதே அவனுக்கு அறமாகும்; மற்று மனத்தூய்மை யின்றி அவன் தன் சொல்லாலுஞ் செயலாலும் அறம்போற் செய்வனவெல்லாம் வெற்றா வாரமேயாகுமல்லால் அவை அறமாதல் சிறிதுமில்லை

யென்பதே நாயனார் கருத்தாதல் தெற்றென விளங்கா நிற்கின்றது.

இனி, அறங்களுட் சிறந்ததுந் தலையாயதும் இறைவனைத் தூயநெஞ்சத்தால் நெக்குருகி உண்மையான் வழிபடுதலேயாகும். தூயநெஞ்சமும் உண்மையன்புமின்றிப் பொய்ம்மையாகச் செய்யும் வழிபாட்டைக் கண்டு இறைவன் நகைசெய்து அருவருப்பன் என்னும் உண்மையைத் **திருநாவுக்கரசுநாயனாரும்,**

"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்கம் மிக்கவர் பூவும் நீருங்கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே" என்று நன்கு விளக்கியருளுதல் நினைவிற பதிக்கற் பாலதாகும். இங்ஙனமே **திருமூலரும்,**

"என்பே விறகா இறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழைவார்க்கன்றி
என்பொன் மணியினை எய்தவொண்ணாதே"

என்று மிக வலியுறுத்திக் கூறுதல் காண்க. இதனால் தன் எலும்பையே விறகாக அடுக்கித் தன் னுடம்பின் தசையையே பலியாக அறுத்து வேள்வித்தீயி லிட்டு ஆரியமறையிற் கூறிய 'புருஷமேதத்தை' ஒருவன் செய்தாலும், அன்பினால் உருகி நெஞ்சம் இளகுவார்க்கன்றி, அங்ஙனம் வேள்வி செய்வானுக்கும் இறைவனை அடைதல் இயலாதென்பது நன்குபெறப்படுகின்ற தன்றோ? ஆகவே, மனம் மாசுஅறுதற்கு அன்பினால் மனங் கரைதல் இன்றியமையாததாதல் பெறப்படுகின்றது. செம்பில் ஏறிய களிம்பை ஒருவன் நீக்கவேண்டுமானால் அவன் அதனைப் புளியிட்டு விளக்கித் தூய்தாக்குதல் காண்டு

மன்றே? அதுபோலவே, மக்களின் மனத்தகத் தேறிய அழுக்கை அவர் அகற்றல் வேண்டுமாயின், அதனை அகற்றவல்ல அன்புகொண்டே அதனைத் துடைத்துத் தூய்மைசெய்தல் இன்றியமையாததாகும். மன மாசு நீக்குதல் வேண்டுமென்றுமட்டுஞ் சொல்லி, அதனை நீக்குதற்கேற்ற கருவியினை ஆசிரியர் அறிவுறுத்தாது போயினராயின், அவரது அறிவுரையினைக் கேட்டார்க்கு அவ்வுரை பயன்படாதே போய்விடும். அது கண்டே அவர்,

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது" என்று அருளிச்செய்தார்

எனவே, மனம் மாசறத் தூய்மை செய்தற்கு அன்பும் அறனும் ஒருதலையான் வேண்டப்படும் என்பது ஆசிரியரால் வற்புறுத் துரைக்கப்பட்டமை நினைவிற் பதிக்கற் பாற்று. தம்மொடு தொடர்புடையார்மாட்டு உண்டாகும் உள்ளக்கசிவாகிய அன்புந், தமக்குத் தொடர்பிலார்மாட்டும் உள்ளம் நெகிழும் அன்பின் முதிர்ச்சியான அருளால் நிகழும் அறமும் ஒருவர்பாற் றோன்றுமாயின் அவர்தம் மனம் மாசுநீர்ந்து சுடர்விரி பசும்பொன்னெனத் திகழ்தல் திண்ணம்.

இனி, மனத்திற்கு அழுக்காவன இவையென்று தெளிவாய்த் தெரிந்தாலன்றி, மனத்தினின்றும் விலக்கற் பாலதனை விலக்குதல் இயலாது. ஆதலால், அதற்கு அழுக்காவன இவையென்று தெளிவிப்பார்,

"அழுக்கா றவா வெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்" என்று ஆசிரியர் அவை யிற்றைக் கிளந்தெடுத்துக் கூறினார். இதனாற், பிறர்க்குள்ள கல்வி செல்வம் புகழ் புண்ணியங்கள் கண்டு பொறாமைப் படுதலும், விரும்பத் தகாதவைகள்மேல்

அளவிறந்த விருப்பம் வைத்தலும், காரணம் இல்வழியும் பாராட்டத்தகாத புல்லிய காரணம் உள்வழியும் வெகுளலும், பிறர்க்குத் தீங்கு பயக்குஞ் சொற்களைச் சொல்லுதலும் ஒருவரது உள்ளத்திற்கு மாசாதல் நன்கு விளங்கா நிற்கின்றது. மனத்தை மாசு படுத்தும் இத் தீய நிகழ்ச்சிகள் நிகழ்ந்தவழி எத்தகையோரும் நல்லறிவு மங்கித் துன்பத்திற்கே ஆளாகின்றனர். இத் தீய நிகழ்ச்சிகள் தம்மிடத்தே தோன்ற வழி செய்தார்க்குப் பிறர் ஏதொரு தீங்குந் துன்பமும் விளைக்க வேண்டுவதில்லை; அவர் தாமே தமக்குச் சொல்லொணாத் துன்பங்களை விளைத்துக் கொள்பவர் ஆவர். இந் நிலையும்,

"அழுக்கா றுடையார்க் கது சாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது" என்னுந் திருக்குறளால்

ஆசிரியர் நன்கெடுத்துக் காட்டினார். ஆகவே, தன்னுயிர்க்குத் துன்பத்தை வருவித்துக் கொள்ளாமைப் பொருட்டாவது ஒருவர் இத் தீய நிகழ்ச்சிகள் தம் மகத்தே நிகழாமல் தம்மைப் பாதுகாக்கக் கடமைப்பட்டிருக்கின்றாரென்க.

அது கடமையே யாயினும், தாம் அறியாமலே தம் மனம் பிறரது செழுமை கண்டு பொறாமைப்படுதல் முதலான தீய செயல்களைச் செய்வதாயிருத்தலின், அஃது அங்ஙனஞ் செய்யாதிருத்தற்கு எளியதொரு வகை யுண்டோ வெனின், உண்டு. தீய எண்ணங்களை நீக்க முயல்வோர் அத் தீய எண்ணங்களையே நினைத்துக் கொண்டிருந்தால், அவை அவரது நினைவை விட்டு நீங்கா. மற்றுத், தீயவைகளுக்கு மாறான நல்லவைகளை நினைவுக்குக் கொண்டுவந்தால் மட்டுமே தீய வெண்ணங்கள் நெஞ்சைவிட்டு அகலும். அங்ஙனமாயினும், நல்லெண்ணங்கள் என்பன, மற்றை எண்ணங்களைப்

போலவே, கட்புலன் ஆகாதனவாதலாற், கட்புலனுகாத அவற்றை நினைவிற்குக் கொண்டு வருதல் யாங்ஙனம்? எனின்; எண்ணங்கள் எல்லாம் ஒருவர் மற்றவர்களுடன் தொடர்புறறு நின்று செய்யுஞ் செயல்களை நினைப்பதனுலேயே நெஞ்சத்தில எழுகின்றனவன்றி, வேறுவகையில் எழுதலை யாண்டும் எக்காலத்துங் காண்கிலேம். உண்ணச் சோறும் உடுக்கக் கூறையுமின்றி வருந்தும் ஒருவனைக் கண்டு மனம் இரங்கிய மறறொருவன் அவனுக்குச் சோறுங் கூறையுங் கொடுக்குங்கால், வறுமை இன்னதென்றும் அதனைத் தீர்க்கும் ஈகை இன்னதென்றும் நாம் உணரப்பெறுதலால், அதுமுதற் கொண்டே பின்னர் வறுமை ஈகையைப் பற்றிய எண்ணங்கள் நம் நினைவில் எழப்பெறுகின்றேம். இனி, வறுமைப்பட்டு வருநதும் ஒருவனுக்கு அங்ஙனம் ஈதலைசெய்யாமல், அவனை அடித்து வெருட்டும் மற்றொருவனுடைய செயல்களைக் காணும்போது, வறுமையால் உண்டாகந் துன்பங்களும்; மன இரக்கம் இல்லா ஈயாச் செயலின் கொடுமையும் நாம் நன்கு உணர்தலாற், பின்னர் அவற்றைப் பற்றிய எண்ணங்கள் நம் நினைவில் உருத்து எழுகின்றன. இங்ஙனமே இன்னுமபலதிறப்பட்ட நன்மை தீமைகளைப்பற்றிய எண்ணங்கள் பலவும் நம் உளத்துத் தோன்றுதற்கு, அவையிரண்டிக்கும் முதலான செயல்கள் மாந்தாகள்பாற் காணப்படுதலே காரணமா யிருககின்றது. இதற்கொரு சிறு கதையினை இங்கு எடுத்துக் காட்டுவாம்.

ஓர் அரசன் தான் ஈன்ற ஒரு சிறுவனை ஓர் ஆசிரியன்பால் விடுத்து அவனுக்குக் கலைகள் பலவுங் கற்பிக்கும்படி ஏற்பாடு செய்தனன். அவ்வாசிரியன் அவ்வரசன் மகனை அன்புடன் ஏற்றுவைத்து, இனியமுகத்

துடனும் இனிய சொற்செயல்களுடனும் அவனது அரசவாழ்க்கைக்கு முதன்மையாக வேண்டப்படுங் கலைகளையும் பிறகலைகளையும் அவனுக்கு நன்கு புகட்டி வந்தனன். அவன் அக் கலைகளையெல்லாந் திறமாகக் கற்றுத் தேறியபின், ஆசிரியன் அவனை அழைத்துக் கொண்டுபோய், அரசன் தன் அமைச்சர் முதலாயினோர் புடைசூழ வீற்றிருக்கும்போது, அவன் முன்னே நிறுத்தி, "மன்னர்பிரானே, தங்கள் அருமைப் புதல்வனை அவனுக்குவேண்டிய எல்லாக் கலைகளிலும் நன்கு பயிற்றி இதோ தங்கள் முன்னிலையிற் கொணர்ந்திருக்கின்றேன். அவனது கலைபயிற்சியினைத் தாங்கள் செவ்வனே ஆராய்ந்து காணலாம்" என்று தெரிவித்துக் கொண்டனன். அதுகேட்ட அரசன் மிசமகிழ்ந்து, தன் அவைக்களத்தில் வந்திருந்த கலைவல்ல புலவர் சிலரை நோக்கிக், கல்விசிறந்த சான்றோர்களே, "என் புதல்வனுக்குள்ள கலைப்பயிற்சியினை ஆராய்ந்து காண்மின்கள்" எனக்கட்டளையிட்டனன். அங்ஙனமே, அப்புலவர்கள் ஒருவர்பின் ஒருவராய்த், தாந்தாம் வல்ல துறையில் அவ்வரசிளைஞனை விடைதருமாறு வினவ, அவனும் அவர் வினவிய பொருள்கட்கெல்லாம் பெரும்பாலும் பிழைபடாமல் ஏற்றவிடை சொல்லிவந்தான். இவ்வாறாக, அவரெல்லாம் அவனை ஆராய்ந்துபார்த்தபின், அவனது நுண்ணிய கலைப் புலமையினையும், அதனை அவற்குப் புகட்டிய ஆசிரியனது திறத்தினையும் அவ்வரசவையிலுள்ளார் அனைவரும் மிக வியந்து பேசி மகிழ்ந்தனர்.

இவ்வாறாக, அவ்வரசிளைஞனின் கலைப் புலமையினை அனைவரும் அறியக்காட்டியபின், ஆசிரியன் தன் கையிற் பிடித்திருந்த பிரப்பங்கோலுடன் அவ்விளைஞனை

அணுகி, அவன் துடிதுடிக்க அதனால் அவனை நையப்
புடைத்தனன். அரசன் தன் மகனைத் திடீரென ஆசிரி
யன் அங்ஙனம் புடைக்கவைகண்டு நெஞ்சம் உளைந்து
அடங்காச் சினங் கொண்டவனாய்த் தன் அமைச்சனை
நோக்க, அமைச்சன் அரசனது சினக்குறிப்பைக்கண்டு.
"மன்னர்பிரானே, சிறிது மனம்பொறுத்தல்வேண்டும்.
ஆசிரியர் இவ்வாறு செய்ததற்குத் தக்கதொருகாரணம்
இருத்தல் வேண்டும்" எனப் புகன்றனன். உடனே,
ஆசிரியன் அரசனை நோக்கி வணங்கி, "அண்ணலே, தங்
கள் அருமைப்புதல்வனை இவ்வரசவையில் தங்கள் கண்
ணெதிரே யான் அடித்து வருத்தின செயலைப் பொறுத்
தருளல்வேண்டும். இப்புதல்வனைத் தாங்கள் என்னிடம்
ஒப்புவித்த காலத்திருந்து, கண்ணை இமைகள் காப்பது
போல் அத்துணைக்கருத்தாய் இவனைக் காத்து இவனுக்
குக் கலைகளைப் புகட்டிவந்தேன். அதனால் இவனுக்குத்
துன்பம் இன்னதென்றே தெரியாது. துன்பந்தெரியாத
நிலையில் இவன் அரசுக்குவந்தால், குற்றவாளிகள் செய்
யுங் குற்றங்களின் சிறுமை பெருமைக்குத்தக்க அவர்
களை ஒறுமற, சிறியகுற்றஞ் செய்பவர்க்குப் பெரியதோர்
ஒறுத்தலைச்செய்ய ஏவிவிடுவன். ஆதலால், தன்னால்
முறைசெய்து ஒறுக்கப்படுவார்க்கு உளதாந துன்பத்
தின் கொடுமையினைத் தான நன்குணர்ந்து கொள்ளும்
பொருட்டாகவே இவனை இங்ஙனம் இக்கோலாற்
புடைத்து வருத்தினேன். எல்லாங்கற்பித்தும் இதனை
யான் கற்பியாவிட்டால், இவனாற் குடிமக்கட்கு அள
விறந்த துன்பம் விளையுமன்றோ? இப்போது இவனுக்குத்
துன்பத்தின் கொடுமையினையும், அரசவையிற் பலர்
முன்னிலையில் தான் அடிபட்டதனால் தனக்குண்டான
மானக்கேட்டின் துன்பத்தினையுங் கற்பித்துவிட்டேன்.

பான் செய்தது பிழையாயின் அடியேனை மன்னித்தல் வேண்டும்" என நுவன்றனன். அதுகேட்ட அரசன் சினந்தணிந்து மகிழ்ச்சி மிக்கவனாய் ஆசிரியனுக்குப் பொற்றூசும் பொற்காசும் வழங்கிச் சிறப்புச்செய்தனன் என்பது.

இச்சிறு கதையினாற் றெளியப்படுவது யாது? துன்பம் இன்னதென்றே உணராத ஒருவனுக்கு, அதனை வெறுஞ்சொல்லால் எவ்வளவுதான் விரித்து விளக்கினாலும் அவன் அதன் றன்மையினை உணராதொழிய, மற்று அத்துன்பத்தினை அவனை எய்தித் துடிதுடிக்குமாறு செய்தவுடனே அதனை அவன் நன்குணர்ந்து, பிறர்க்கு அத்தகையதொரு நோவினை விளைசக மனம் இசையான் என்பதேயன்றோ? ஒருபிடிசோறுங் கிடையாமற் சில நாட் பசித்து வருந்திப், பின்னர் அருளிரக்கம் உடைய ஒருவனால் இன்சுவை யடிசில் ஊட்டப்பட்டு, அக் கொடிய இடும்பையினின்றும் நீங்கிய ஓர் எளியவனை பசித்துன்பம் இணையதென்றும், அதனை நீக்குவான்றன் ஈரநெஞ்சின் நீர்மை இத்துணையதென்றும், பசித்துப் பெறற உணவாற் போதரும் இன்பம் இத்தன்மையதென்றுந் தெறறென வுணர்ந்து, பிறர் பசித்திருத்தலைக் காணமாட்டாதவனாய் அதனை அவரினின்றும் நீக்குவோன் ஆவன்.

ஆகவே, அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் என்னும் நான்கு தீயநிகழ்ச்சிகளுந் தம்மிடத்தே நிகழாமல் நீக்கவேண்டுவோர், அவற்றைப் பிறர் தம்மிடத்துக் காட்டியக்கால் தமக்குண்டாம் மனவுளைவினை நினைந்துபார்த்தும், அவற்றின் கொடுமைக்கு அஞ்சி, அவற்றிற்குமாறான நல்ல செயல்களைப் பிறர் தமக்குப் புரிந்தக்கால் தமக்குண்டாம் பெருமகிழ்ச்சியினைப் பல

காலும் உணர்ந்துபார்த்தும், அந் நற்குண நற்செயல் களில் தம் மன மொழி மெய்கள் முனைந்து நிற்குமாறு பழகிவருதல் வேண்டும்.

எனவே, ஒருவர், கல்வி செல்வம் புகழ் புண்ணி யங்களிற் சிறந்தவராய் வாழ்தலைக் கண்டால், அவர் மேலும் மேலும் அவற்றிற் பெருகி யோங்கித் தமக்கும் பிறர்க்கும் பயன்பட்டு வாழ்கவென்று மனத்தால் நினைந்து வாயால் வாழ்த்துதல் வேண்டும். இவ்வாறு செய்தலிற் பழகிவரவே, பிறர்க்குள்ள கல்வி செல்வம் முதலியவைகளைக் கண்டு உளதாம் மனப்புழுக்கம் அற வே நீங்கும்.

அங்ஙனமே, ஒருவர்க்குள்ள செல்வத்தையும், ஒருவர்க்குள்ள அழகையுங் கண்டு பேராவல்கொண்டு அவரது பொருளைக்கவரவோ அழிக்கவோ கருதாமல், அழகுடையவரைத் தாங் கூடிசகளிசக விழையாமல், தமக்குள்ளபொருளை நல்வழியிற் பெருக்கவும். தமதுடம் பின் அமைப்பை நன்முறையில் அழகுபடுத்தித் தமக் குரியாருடைய உடல்நல மனநலங்களையும் அவ்வாறே தக்கமுறையில் அழகுறச்செய்து தம்மவருடன் கூடி இனிது வாழவும் ஒவ்வொருவரும் முயற்சி செய்தல் வேண்டும். இவ்வாறு செய்துவரவே பிறருடைய செல் வப்பெருக்கு வனப்பின்மிகுதி கண்டு அவற்றின்மேற் செல்லும்அவா தம்முள்ளத்தில் தலைக்காட்டாதொழியும்

இனிப், பிறர்பாற் காணப்படுங் குற்றங் காண்புழி உண்டாம் வெகுளியினை நீக்கிக்கொள்ளுதலும் வருத்த மானசெயலன்று. மக்கள் எல்லாருங் கல்வி யறிவு ஒழுக் கங்களில் எத்துணைச் சிறந்தவராயிருந்தாலும் நொடிக்கு நொடி மறந்துவிடும் மறதிக்குணமும், அதுகாரணமாக வரும் அறியாமையும் இயல்பாகவே உடையராதலால்,

அவரெல்லாருஞ் சிற்றறிவுடைய சிற்றுயிர்களே யல்லா மல், முற்றறிவுடைய கடவுள் அல்லர். அற்றாயின், மக் களுட்சிலரைப் பேரறிவினர் என்றல் என் எனின், தம் மினுங்குறைந்த அறிவினரை நோக்க அவர் பேரறிவின ரென உயர்த்துப் பேசப்பட்டனரே யன்றி, அவரும் முற்றறிவினர் அல்லர். அவரினும் அறிவின்மிக்கார் வரின் அவரெதிரே அப்பேரறிவினருஞ் சிற்றறிவின ராய் விடுதல் திண்ணம். இன்னுஞ், சிற்சில நேரங்களிற் சிற்றறிவினர் காட்டும் நுண்ணறிவுக்கு முன் பேரறி வினருஞ் சிற்றறிவினராகித், தலைகுனிதலைக் காண்கின் றாம் அல்லமோ? ஆகவே, மக்களெல்லாரும் ஏற்றத் தாழ் வான அறிவுடைய சிற்றுயிர்களே யெனபதும், எல்லா ரும் பிணிமூப்புகளின் வாய்ப்பட்டு இறந்தொழிபவர் களேயல்லால் நிலையாக இருப்பவர் எவரும் இல்லையென் பதும், எல்லாருந் தப் வாழ்நாள் எல்லைக்குட் செய்யுங் குற்றங்கள் கணக்கிலவாமென்பதும் எல்லார்க்கும் ஒப்ப முடிந்த உண்மைகளேயாதல் எல்லாரும் நினைவிற் பதித் தல்வேண்டும். இங்ஙனம் இவ்வுண்மைகளை நினைவிற் பதிப்பவர்கள், தம்மொடு தொடர்புடையார் அறியா மையாலுஞ் சிற்றறிவாலும் மறதியாலுஞ் செய்யுங் குற்றங் குறைகளைக்கண்டு வெகுளார். குற்றங்குறைகளைக்கண்டு வெகுளாலும் மக்களின் மனவியற்கையா யிருத்தலின், அதனை மாற்றுதல் இயலுமோவெனின்; இயலும். தம் மின் மெலியார் செய்யும் பிழைகளைப்பொறாமல் தாஞ் சினங்கொளல் போலவே, தாஞ்செய்யுந் தவறுகளைக் கண்டு தம்மின் வலியார் தம்மேற் சீறறங்கொள்வரல்ல ரோ? அப்போது "எம்மனம் எத்துணை நடுக்கம் உறு கின்றது! அதுபோல், எமது வெகுட்சியினைக் கண்டு எமக்கு அடங்கிய இவர் எத்துணை நடுங்குவர்! ஆதலால்,

இவர்மீது யாஞ் சீற்றங்கொள்ளுதல் நன்றன்று" என ஒவ்வொருவருஞ் சிறிது கருதிப்பார்ப்பாராயின், அவருள்ளத்திற சினமுஞ் செற்றமும் வேறொன்றுமல் மறைந்துவிடும் இவ்வெளிய வழியினையே தெய்வத்திருவள்ளுவரும்,

"வலியார்முற் றன்னை நினைக்க தான் தம்மின்
மெலியார்மேற் செல்லு மிடத்து"

என நம்மனோர்க்கு நன்கெடுத்து அறிவுறுத்தருளினார்.

இனி, இன்னாதசொற்கள் தம் வாயினின்றும் பிறவாமல் தம் நாவினைக்காத்து ஒழுகுதலும் எளிதிற் பழகக்கூடியதேயாம். ஏனென்றால், அன்புநிறைந்த நெஞ்சம் உடையான் ஒருவன் வாயில் இன்சொற்களையல்லாமல் வன்சொற்கள் எட்டுணையுந் தோன்றா. அன்பு என்னும் இளஞாயிறு ஒருவன் நெஞ்சகத்துள் எழுங்கால், அதற்குமுன் அவனது நெஞ்சம் பனிப்பாறைபோல் வல்லெனவிருந்தாலும், அதன் கதிரொளி தோயுந்த அளவானே, அது நெகிழ்ந்து நீராய் உருகுகின்றது; அவனது முகம் அதற்குமுற் கூம்பி அழகின்றி அருவருக்கத் தக்கதாயிருந்தாலும், இப்போது வீசும் அதனொளியினால் அழகிதாக மலர்ந்து செழுந்தாமரைப் போதெனத் திகழ்ந்து எவரும் விரும்பத்தக்கதாகின்றது; இதற்குமுற் கொடுஞ்சொல்லென்னும் முடைநாற்றக் கைப்புநீர் ஒழுகிய அவனது வாய் இப்போது இதழ்விரிந்த செந்தாமரை மலரினின்று சொட்டும் நறுந்தேன் என நினைத்தொறுந் தித்திக்குஞ் செஞ்சொற்களைப் பொழிகின்றது. இங்ஙனமாக எல்லாரிடத்தும் அன்பு பூண்டு நடப்பானுக்கு ஒருமுயற்சியு மின்றியே இன்சொற்கள் தாமாகவே வருதலின், தன்பால் இன்னாச்சொற்கள் காணப்படாதொழிய வேண்டுவோன், தான் அனைவரிடத்தும் உண்

மையன்பு காட்டி யொழுகுதலே எளியதொரு வழி யாய் இருக்கக்காண்பன்.

அஃதொக்கும், நன்மையுந் தீமையும் விரவிய பல திறக்குணனும் பலதிறச்செய்கையும் வாய்ந்த பலதிறத்த வரான மாந்தர்களுடன் எல்லாம் நாம் உண்மையன்பு காட்டி நடத்தல் யாங்ஙனங் கைகூடுமெனின்; எல்லாரும் இறைவனொருவனாற் படைக்கப்பட்டவரே யாகையால், அவரெல்லாரும் ஒரே தந்தைக்குப் பிறந்த புதல்வர்களே யாவரல்லாற் பிறிதில்லையென்பதும், எல்லாரும் இவ்வுலகிற் சிறிதுகாலம் உண்டு உடுத்து உறங்கிப் பின் இதனை விட்டுச் சடுதியில் நீங்கிப் போபவர்களாகவே காணப்படுதலால் இந்நிலவுலகும் இதன் அகத்துள்ள அரும்பண்டங்களும் எவர்க்கும் நிலையாக உரியவைகள் அல்லவென்பதும் எத்துணை அறிவிற் சிறியவர்களும் நன்குணர்ந்திருக்கின்றனர்; அதனால், நிலையில்லா வாழ்வினராகியமக்கள் இவ்வுலகியற் பொருள்களின் பொருட்டும் இவைகொண்டு நுகருஞ் சிற்றின்பத்தின் பொருட்டுந் தம்முட் பகைபாராட்டி, இச்சிறிய வாழ்க்கையிலும் நெடுக அல்லல் உழப்பது எத்துணைப் பேதைமை! என்று நினைந்துபார்க்கப் பார்க்க எல்லாரையுந் தம்முடன் பிறந்தவராகக்கருதி, எல்லார்மாட்டுங் கனிந்த உள்ளத்தினராய் இன்சொற்பேசி யொழுகும் பழக்கம் எளிதிலே எவர்க்குங் கைகூடுமென்க.

என்று மேற்காட்டிய வகையாலெல்லாம் அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் என்னும் நான்கு பெருந்தீங்குகளும் ஒருவன் தன்கண் நிகழாமைக் காத்தற்பொருட்டு, அவற்றிற்கு எதிரிடையான நினைவு சொற் செயல்களைத் தன்மாட்டு இடையறாது தோற்றுவிக்கவே, அவனது உள்ளந் தன்னைப்பொதிந்த மாசுநீங்கித் தூய

செம்பொன்னென ஒளி துளும்பி விளங்காநிற்கும். இதனின் மிக்க அறம் வேறொன்று இல்லாமையின், இதனை ஆசிரியர் திருவள்ளுவர் வலியுறுத்தி விளக்கினாற்போலவே, சைவமு, கிறிஸ்துவம், பௌத்தம், சமணம், வைணவம் முதலான எல்லாச சமய ஆசிரியர்களும் இதனையே வலியுறுத்திக் கூறுகிறபர்; அவர்தம் அருமருந்தன்ன அறவுரைகளைப் பின்னர் ஒரு கட்டுரையினில் எடுத்துக் காட்டுதும்.

அற்றேல், மனம் மாசறறிருத்தல் ஒன்றுமே ஒருவர்க்குப் போதாதோ? அவர் பிறர்க்கு வேறு அறஞ் செய்தலும் வேண்டுமெனப் பகர்வதன்கருத தென்னையெனின், அதனையும் ஒருசிறிது விளக்குதும். தமது மனம் மாசறறு இன்பவாழ்க்கையிலிருப்போர், "நான் பெறற இன்பம் பெறுக இவ்வையகம்" எனத் தெய்வத் திருமூலர் வேண்டினாற்போலப், பிறரும் தம்மைப் போல் இன்புறறிருக்க வேண்டுமென்றே எண்ணுவர், அதனையே சொல்லுவர், அதற்காவனவே செய்குவர். பிறர், மேற்சொன்ன அழுக்காறு அவா வெகுளி இன்னுச்சொல் என்னும் நான்கு குறறங்களும் உடையராய், அவற்றாற் பெரிதும் அலைச்கழியும்போது, அதனைக் கண்டு வாளாதிருக்க மாசற்றார்மனம் ஒருசிறிதும் ஒருப்படாது. அந்நான்கு குறறங்களாலும் மக்களிற பெரும்பாலார் துன்புறுதற்குக் காரணம், இவ்வுலகவாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள் இல்லாமையும், பொருள் கடைக்கூட்டுதற் கேற்ற அறிவும் முயற்சியும் வாயாமையும், எல்லா உயிர்களின் வாழ்க்கை நிலைகளையும் உணர்ந்து பாராமையுமே யாகும். மாந்தரின் துன்பங்களுக்கு ஏதுவான இம்மூன்றனையும் அவர்பால் நின்றும்

அகற்றிவிடவே, அவரெல்லாம் மாசற்ற மனமுடைய ராய் அறத்தின்கண் நிலைபெறுதல் திண்ணம்.

பொருள் இன்றி வறியராய்க்கிடந்து துன்புறுவோர், பெரும்பாலும் பிறர் சிலரின் செல்வவளங்கண்டு பொறாமைப் படுதல் இயற்கையாய் இருக்கின்றது. தாமே பொருள் வழங்கியாவது, தமக்கு அஃது இசையாவிட்டாற் செல்வர்களை ஊக்கி அவர் அவர்கட்குப் பொருளுதவிபுரியும்படி தூண்டியாவது மனமாசற்ற சான்றோர் அறஞ்செயாநிற்பர்; அஃதவர்க்குரிய அறக்கடமையேயாம். தமதுள்ளத்தைத் தூய்தாக்கி இன்சொற் பேசுதலொடுமட்டும் நின்றுவிடுதல் முழுஅறம் ஆகாது; அஃதறத்தின் ஒரு பகுதியேயாம்; அவ்வொரு பகுதியின்மட்டும் அமைந்து வாளாதிருக்க அறவோருளம் ஒருசிறிதும் ஒருப்படாது. ஏழையெளியவர் தொகையே மிகுந்துள்ள பொதுமக்களைப் பலதுறைகளிலும் எதிர்வந்து நலியும் வறுமையை நீக்குதற்குப் பொருளுங் கல்வியுமே கட்டாயமாக வேண்டப்படுவன. அதனை நன்குணர்ந்த சான்றோர், செல்வர்களைத்தூண்டி எளியோர்க்குப் பொருளுதவியுங் கல்விப்பயிற்சியுந் தருதல் மிகவும் வருத்தமுடைத்தாதல் கண்டு, தாமே அறத்தாற்றாற் பொருள் ஈட்டித், தம்மால் இயன்றவளவு வறியார்க்குப் பொருளுதவிபுரிந்தும், அதனினுஞ்சிறந்த கல்வியறிவினைப் புகட்டியும் அறஞ்செயாநிற்பர். இவ்வாறு அறஞ்செய்தற்பொருட்டு மனமாசற்ற சான்றோர் பொருள் திரட்டும் மெய்ம்மையினை ஆய்ந்துணராதார், "எல்லாந் துறந்த இவர்க்குப் பொருள் ஏன்?" என எளிதாய்க்கூறி நகையாடாநிற்பர். பொருளுங்கல்வியும் மனமாசு தீர்ந்த அறவோர்க்கு உளவாயின், அவை பொதுமக்களின் நன்மைக்குப் பலவகையிற் பயன்படும். அவையிரண்டும்

அறநெஞ்சம் இல்லார்க்கு வாய்ப்பின், அவை ஏழைமக் கட்குப் பயன்றராமைமேயன்றி, அவர்க்குப் பல்பெருந் தீமைகளையும் பயவாநிற்கும். பொருள்படைத்த செல் வர்களில் எத்தனைபேர் கட்குடித்தும், வேசிகளை மருவி யும், ஏழைமகளிரைக் கற்பழித்தும், நல்லோர்க்குத் தீது செய்தும், தந் தீயசெயல்கட் கிசையாதவரைக் கொலை புரிந்தும், அழிவழக்காடி எளியோர் உரிமைகளைக் கவர்ந் தும், இக்கொடுஞ்செயல்கட்குக் கருவியாக அரசியலில் உயர்நிலைகளை வலிந்து பெற்றும், தமது பொருளைப் பாழாக்குகின்றார்கள்! அங்ஙனமே கல்வியறிவைப் பெற்ற வர்களில் எத்தனைபேர் தாம் அரிதிற்பெற்ற அவ்விழுப் பொருளை மேலு மேலும் பெருக்காமல், அல்லும் பகலும் அரும்பெரும் பொருள்களை ஆராயாமல், அருமையாய் ஆராயினும் ஆராய்ந்தவைகளைப் பிறர்க்கு அறிவுறுத்தா மல், தாங் கற்ற சிறிதைப் பெரிதாகத் தாமே இறுமாந்து மதித்துத், தம்மினும் மிகக்கற்று அடங்கித் தாம் அறிந்த மெய்ப்பொருள்களைச் சொல்லாலும் நூலாலும் உலகிற் குப் பயன்படுத்துஞ் சான்றோரைக் கண்டு வாழ்த்தாமல் வயிறெரிந்து அவரது அறச்செயலுக்கு மறச்செயல்செய்து தீராப்பழியினையுந் தீவினையினையும் பெருக்குகின்றனர்! இன்னுங், கற்றவர்களில் வேறு எத்தனைபேர் பாராட்டத் தகாத செல்வர்களைப் பாராட்டியும், அவர் இட்ட குற் றேவல் செய்தும், அவர் தங் காமக்கிழத்தியர்க்குத் தூது போகியும், அவர் வீசுங் காசுக்குந் தூசுக்குங் காத்துநிற் கின்றனர்! உண்மையான் நோக்குங்கால் செல்வமுங் கல்வியும் அறநெஞ்சம் உடைய துறவோர்க்குத் தாம் இன்றியமையாது வேண்டற்பாலனவே யல்லால் அவரல் லாத பிறர்க்கு வேண்டற்பாலனவாகா. அறநெஞ்சம் இல்லார் கைப்படின் அவையிரண்டும் உலகிற்குத் தீமை

மே விளைப்பக்காண்டும்; மற்று, அறநெஞ்சம் உடையார் கைப்படின்லோ அவை, அவையிரண்டும் வறியார்க்குப் பல்லாற்றானும் நிலையான பெரும்பயனைப் பயப்பக்காண்டும் ஆகவே. அறநெஞ்சம் வாய்ந்த துறவோர்க்குக் கல்வியொடு செல்வமும் வாய்ப்பின், அவ்விரு உலகத்தவர்க்குப் பலவகையான பயன்பட்டு அவரை நல்லராய் அறிவிற்சிறந்தாராய் மிடியின்றி வாழச்செய்யும் என்க.

## கானத்தோகை தேவமணி கதை

கானத்தோகை என்னும் மங்கை நுண்ணறிவும் பேரழகும் வாய்ந்தவள் ஆனால், அவளுக்கு வாய்த்த தந்தையோ தன் உழைப்பினால் ஏராளமான பொருளைத் தொகுத்து, அப்பொருளையே தெய்வமாக நினைந்து களிப்பவன.

தேவமணி என்னும் இளைஞன், கல்வியிலுஞ் சிறந்த நடையிலும் புகழ்பெற்ற தொன்றுயினுட பொருள் இழந்து நொந்துபோன ஒரு குடும்பத்திற் பிறந்தவன்; கல்வியிலும் நல்லொழுக்கத்திலும் பெருந்தன்மையிலும் மிக்கவன்.

இவ்விளைஞனுக்கு இருபதாம் ஆண்டு நடக்கையில் இவன் கானத்தோகை யெனனும் மங்கையைக் கண்டு அவளொடு பழகககொள்ளலானான்; அப்போது கானத்தோகைக்கு அகவை பதினைந்து இம்மாதின் தந்தையின் வீட்டுக்குச் சிறிது தொலைவிலேயே, இவனது இல்லம் அமைந்திருந்தமையால், இவன் அடுத்தடுத்து அம்மடந்தையைக் காணுதற்கு அமயம் வாய்த்தது. இவன் அழகிய உருவம் உடையனாயிருந்ததுடன் இனிதாக

உரையாடும் இயல்பினனாயும் இருந்தமையால், எக்காலத்தும் சலிக்க முடியாததான தன்னைப் பற்றியதோர் அழுத்தமான எண்ணத்தை அவள் நெஞ்சத்திற் பதித்து விடலானான். இவனும் அவளது மனப்பினாற் கவரப் பட்டது சிறிதன்று. இவர் இருவரும் நெடுநாட் பழகப் பழக இன்னும் இன்னும் உயர்ந்த அழகிய இயல்புகளை ஒருவர் ஒருவரிற்கண்டு இன்புறலாயினர்; இதிலிருந்து படிப்படியே இவர் ஒருவர்மீதொருவர் கொண்ட காதலானது, இவர்தம் வாழ்நாள் எல்லையளவும் இவரைத் தொடர்புபடுத்தி நிற்கவல்லதாயிருந்தது.

அஃது அவ்வாறு நிகழ்கையிற் கானத்தோகையின் தந்தைக்கும் தேவமணியின் தகப்பனுக்கும் இடையே கலகம் விளையலாயிற்று. ஒருவன் தனக்குள்ள செல்வ வளத்தால் தன்னைத்தானே மிகுதியாய் உயர்த்துப்பேசலாயினன்; மற்றவன் தனக்குள்ள பிறப்பின் மேன்மையால் தன்னைத்தானே பெரிதும்பாராட்டி மொழியலாயினன். கானத்தோகையின் அப்பனோ, தேவமணியின் நந்தைமேற் பெருஞ்சினங்கொண்டு, அதுகாரணமாக அவன் புதல்வனான தேவமணிமேல் வெறுப்புக்கொள்ளலானான். அதிலிருந்து அவன் தனது இல்லத்திற்கு வரலாகாதென்று தடைசெய்ததோடு, அவனைத் தன் மகள் இனிக் காணலாகாதென்றுங் கட்டுப்படுத்தினான். இன்னும், இக்காதலர் இருவருந் தாம் ஒன்றுசேருங் காலத்தை நோக்கி நிற்பதறிந்து, அவர்க்குள் இனி ஏதொரு தொடர்பும் உண்டாகாமல் தடுத்துவிடுதற்காகச், செல்வமுந் தகுதியான தோற்றமும் வாய்ந்த ஏனையோர் இளைய ஆடவனைத் தெரிந்தெடுத்து, அவனையே தன் மகளுக்கு மணமகனாக்கக் கானத்தோகையின் நந்தை உறுதிசெய்தான். அதன்பின் அவன் தன் புதல்விக்குத் தனது

கருத்தினைத் தெரிவித்துத், திருமணமானது இன்ன தொருநாளில் நடத்தப்படல் வேண்டுமென்றுங் குறிப்பிட்டான். தன் றகப்பனின் தலைமைச் செருக்கைக் கண்டு வெருக்கொண்ட கானத்தோகை, அவ்வாறு பொருத்தமுள்ளதாகக் கருதப்பட்ட ஒரு மணவினைக்குத் தான் குறுக்குச்சொல்வதிற் பயனில்லையென்று கண்டு வாய்பேசாதிருந்தனள். அவள் அங்ஙனம் வாய் பேசாதிருந்ததனையே அவளது உடன்பாடாகப் பிழைத் துணர்ந்த அவடன் றந்தை, அத்தகையதொரு சிறந்த ஏற்பாட்டில் தன் றந்தையின் கருத்துக்கு இசைந்து நடக்க ஒருப்பட்டமை ஒரு கன்னிப்பெண்ணுக்குத் தக்க ஒழுகலாறாகுமென்று அவளைப் புகழ்ந்து பேசினான். பிறகு, இங்ஙனம் அவன் நடத்தக் குறித்த மணவினைச் செய்தி தேவமணியின் செவிக்கு எட்டியது. காதலாற் கட்டுண்டார்க்கு இயற்கையே உண்டாகும் பலவகையான இன்னா எண்ணங்களால் தேவமணியின் நெஞ்சங் குழம்பியது; அதனால், அவன் கீழ்க்கண்ட கடிதம் ஒன்றனை வரைந்து அதனைக் கானத்தோகைக்குப் போக்கினான்:

"என்னருமைக் கானத்தோகையைப்பற்றி யான் கொண்ட நினைவு ஒன்றே எனக்குச் சில ஆண்டுகளாக இன்பம் பயப்பதாய் இருந்தது. ஆனால், இப்போதோ அஃது என்னால் தாங்க லியலாத மனநோயினைத் தருவதாய் மாறிவிட்டது. நீ பிறன் ஒருவனுக்கு உரியளாய் இருத்தலை இனி யான் உயிரோடிருந்து பார்க்கவேண்டுமா? நாம் ஒருங்குகூடிப் பேசியிருந்த நீரோடை மருங்கும், விளைபுலங்களும், பசும்புல் நிலங்களும் இப்போதெனக்கு ஆற்றொணாத் துயரத்தைத் தருகின்றன. நீ உலகத்தில் நீடு இனிதுவாழ்க! ஆனால், கீழ்க்குறிப்பிட்ட

ஓர் ஆடவன் என்றொரு இந்நிலவுலகில் இருந்தானென்பதை மறந்துவிடு!

தேவமணி"

இக்கடிதம், எழுதிய அன்றைமாலையே கானத்தோகையின் கையில் அது செலுத்தப்பட்டது; அதனை நோக்கியதும் அவள் உணர்வற்று வீழ்ந்தாள். மறுநாட் காலையில் உணர்வுகூடி எழுந்ததும், அவள் ஏக்கங்கொள்ளத்தக்க செய்தியொன்று வந்தது: தேவமணியென்பான் சென்ற நள்ளிரவில் தன் படுக்கையறையைவிட்டு வெளிக்கிளம்பினவன் எங்குச் சென்றானென்பது தெரியவில்லை; அவனைப்பற்றி ஏதேனுந் தெரியுமா எனக் கேட்டறியும்பொருட்டு ஒருவர்பின் னொருவராய் இரண்டு மூன்று ஒற்றர்கள் தன் நங்கையின் இல்லத்திற்கு வந்து சென்றார்களென்பதே அச் செய்தியாகும். சின்னாட்களுக்குமுன் அவனது உள்ளத்தைக் கவிந்த பெருந்துயரானது, அவனதுயிரைக் கொள்ளைகொண்டதோவெனக் கருதி அவர்கள் அஞ்சலாயினர். தனது திருமணத்தைப்பற்றிய செய்தியல்லாமல் வேறு ஏதும் அவனைக் கடைப்படியான அம்முடிவுக்குச் செலுத்தியிராதெனக் கருதிக் கானத்தோகை ஆற்றொணாத்துயரில் அழுந்தினள். அதனால், அவள் தன் நங்கை வேறொருமணமகனைக் குறிப்பிட்டுப் பேசிய பேச்சிற்குத் தான் படிந்து செவிசாய்த்ததே ஒரு பெருங்குற்றமென்று தன்னைத்தானே நொந்துகொண்டதுடன், புதிதாகக் குறிப்பிடப்பட்டவனை தன் தேவமணியைக் கொலை புரிந்தவனாயினனென்றும் எண்ணிக் கலங்கினள். தன் நங்கை குறித்துச்சொல்லிய திருமணக் குற்றத்திற்கும் அச்சத்திற்கும் ஏதுவாய் முடிந்தமையால், அத்தகையதொன்றிற்குத் தான் இணங்குவதைவிடத், தன் நங்கையின் மனத்தாங்கலுக்கும் அதனால் விளையுந் தீங்குகளுக்குந் தான் உள்ளாவதே சாலச்சிறந்ததெனத்

தீர்மானஞ்செய்தாள். அதன்பின், தன் றந்தை கூறிய திருமண ஏற்பாட்டிற்குத் தான் ஒரு சிறிதும் இணங்கல் முடியாதென்றும் ஒரேபிடியாய் மறுத்துக்கூறிவிட்டாள்.

கானத்தோகையின் றந்தையோ தேவமணி ஒழிந்து போனதைப்பற்றி மகிழ்ச்சியுற்றவனாயுந், தனது குடும்பப்பொருளில் ஒரு பெருந்தொகையான பரிசப்பணந் தனக்கு மிச்சமானதைப்பற்றி உவகைக்கடலில் அமிழ்ந்தினவனாயும் மாறுதல் எய்தினமையால், தன் மகள் தான் குறித்த மணத்திற்கு உடம்படாது முற்றும் மறுத்துக் கூறியதற்காகச் சிறிதுங்கவலைப்பட்டிலன். தான் குறித்த மருமகனும் இம்மணம் ஒரு வசதிக்காக நிகழ்வதே யன்றிக் காதலால் நிகழ்வதன்றெனக் கண்டுகொண்டமையால், அவனுக்கு அவன் அம்மணம் நடவாதுபோனமைக்காக மன்னிப்புச் சொல்லிவிடுவதும் எளிதாகவே யிருந்தது.

கானத்தோகையோ இப்போது கடவுளையே எந்நேரமும் நினைந்து அவன்றிருவடிக்குத் தொண்டு ஆற்றுவதிலன்றி வேறொரு வகையில் தன்னை அத்துணைவருத்திய அம்மனத்துயர் தீர்தற்கு வழிகண்டிலள். சில்லாண்டுகளுக்குப் பின் தனது மனத்துயரின் கொடுமை தணிந்து, தன் எண்ணங்கள் ஓர் அமைதியுற்றபின், அவள் தனது எஞ்சிய வாழ்நாளைத் துறவோர் திருமடம் ஒன்றிற்சென்று கழிக்க உறுதிசெய்தாள். அவள் தந்தையும் அவள் கொண்ட எண்ணத்திற்காகச் சிறிதும் வருந்தவில்லை; ஏனென்றால், அஃது அவனது குடும்பச்செலவினை மிச்சப்படுத்துதற்கு ஓர் வாயிலாகுமன்றோ? ஆகவே. அவன் தன் புதல்வியின் கோரிக்கைக்கு உடனே இசையலானான். இசைந்து, அவளது இருபததைந்தாம் ஆண்டில்—அவடன் பேரெழில் மிகுந்து முகிழ்த்துத்

தோன்றும் அக்கட்டிளமைப் பருவத்தில், அடுத்துள்ள தொரு நகருக்கு அவளை அழைத்துச்சென்று, அவளை வைத்தற்குத் தக்க துறவுமாதர் வாழும் ஒரு திருமடத்தை அவட்குக் காட்டினன். காட்டக், கானத்தோகை அதன்கண் இருந்துவிடுதற்கு மனம் உவந்தமைகண்டு அங்கே அவள் இருத்தற்கு வேண்டும் ஏற்பாடுகளெல்லாஞ் செய்துவைத்துப்போயினன்.

இனி, இத்திருமடத்திற்குத் தலைவராய் அமர்ந்த முனிவர் கடவுள் நேயத்திலும் நன்னடையிலுஞ் சிறந்து புகழோங்கப்பெற்றவர் ஆவர். கானத்தோகை சேர்ந்த இத் திருமடம் உரோமமுனிவர்க் குரிய தொன்றாகையால், இதிற்சேர்ந்தவரில் ஆற்றுமனநோய்கொண்டாரும் மனக்கவலை அடைந்தாரும், இதன் தலைவரான குரு முனிவரிடஞ்சென்று, தம் உள்ளத்தே அடைத்துவைத்த துயரையுங் கவலையையும் வாய்திறந்து வெளிவிட்டுச் சொல்லி, அவர்பாலிருந்து மன்னிப்பும் ஆறுதலும் பெறுவது வழக்கம். ஆகவே, அழகியாளான நம் கானத்தோகை புகழ்பெற்ற இம் முனிவர்பாற்சென்று தன்னுள்ளத் துற்றதை மொழிந்து தானும் அவர்பாலிருந்து மன்னிப்பும் ஆறுதலும் பெறக் கருதினள். ஈதிங்ஙனம் இருக்க, இப்போது நாம் தேவமணி எவ்வாறாயினன் என்பதனை எடுத்துக்கூறுதற்குத் திரும்புவோம்.

மேற்சொல்லியவாறு தேவமணி தனது இல்லத்தைவிட்டுப் புறப்பட்டதும், அன்றை விடியற்காலையிலேயே, இப்போது கானத்தோகை தங்கியிருக்கும் நகருக்குப் போந்து, அதன்கண் உள்ளதொரு துறவோர் திருமடத்தில் தானுஞ் சேர்ந்துவிடலானன். அம்மடத்திற்சேர்வோர், சில தனிப்பட்ட காலங்களில் தம்மையின்னாரென்றெவருந் தெரிந்துகொள்ளாத வகையில் மறைமுகமா

யிருப்பது வழக்கமாகையால், தானும் அங்ஙனமே அவருள் ஒருவனா யிருந்துவிடத் தேவமணி விழைந்தான். கானத்தோகையைக் குறித்துத் தான் ஏதும் உசாவுதல்ஆகாதென்றுந் தனக்குள் அவன் ஓர் உறுதியுஞ் செய்துகொண்டான். அவள் தன் றந்தையால் ஏற்படுத்தப்பட்ட நாளில், தனக்கு எதிரியான ஒருவனொடு மணம் பொருத்தப்பட்டிருப்பள் எனவே அவன் எண்ணிவிட்டான். தனது இளமைப்பருவத்தில் அவன் கல்வியில் தேர்ச்சியுற்றதெல்லாந், தான் முழுதுஞ் சமயத்தொண்டு ஆற்றுதற்பொருட்டே யாகலான், அவன் இப்போது துறவோர் குழாத்திற்சேர்ந்து தான் கருதிய அத்தொண்டினையே செய்துகொண்டிருக்கலானான். சில்லாண்டுகள் செல்ல அவன் தன் தூயதுறவொழுக்கத்திற் பெயர்பெற்றதுடன், தன்பால் உரையாடுவார்க்கெல்லாம் இறைவனிடத்து அன்பு பீறூரச்செய்தும் வந்தனன். இத்தன்மையனான இத்துறவிபாற் போந்தே கானத்தோகை தன்னுள்ளக்கிடக்கையை வாய்விட்டுச் சொல்லி ஆறுதல் பெறுதற்கு முனைந்தாள்; ஆனால், இவளுக்காவது அத்திருப்பட்டத்தின் றலைவரையுள்ளிட்ட ஏனை எவர்க்காவது இத்துறவியின் பெயரேனுங் குடும்பச் செய்தியேனுஞ் சிறிதுந் தெரியா.

அன்புக்கினிய மகிழ்ந்த உள்ளத்தவனான தேவமணி இப்போது ' அப்பன் பிரான்சு" என்னும் பெயர் பூண்டிருந்தமையானும், நீண்டதாடியும் மழித்த தலையுந் துறவாடையும் உடையனாயிருந்தமையானும், முன்னே உலகியல்நடையி லிருந்த அவனை இப்போது துறவு நடையிலிருக்கின்றானெனத் தெரிந்துகொள்வது இயலாததாயிற்று. இவன் ஒருநாட்காலையிற் பாவ அறிவிப்புக்கேட்கும் இருக்கைமேல் ஒரு தனியிடத்தில் அமர்ந்

திருந்த நேரத்திற், கானத்தோகை அவனெதிரே முழந் தாளிட்ட நிலையிலிருந்து தன்னுள்ளதுள்ளதைத் திறந்து சொல்வாளானாள். கள்ளம் இல்லாத் தன் வாழ்க்கை வரலாற்றினை அவள் சொல்லிக்கொண்டு வந்து, பிறகு அவனது தொடர்பு ஏற்பட்ட தனதுகதையின் அப்பகுதி யைக் கண்ணீர்வடித்தபடியாய்க் கூறத் துவங்கினாள்.

"எனது நடக்கையானது, என்னை அளவுக்கு மிஞ் சிக் காதலித்த ஒரு சிறுபிழையைத் தவிர வேறு பிழை செய்தறியாத ஒரு சிறநத ஆண்மகனது சாவுக்குக் காரணமாயிருந்தது. அவர் உயிரோடிருந்த நாட்களில யான் அவரை எவ்வளவு காதலித்தேனென்பதை இறை வன் அறிவான். அவர் இறநதுபோனபின்னும் அவரை நினைந்து யான் எவ்வளவு துன்பப்படுகின்றேனென் பதையும் அவனே நன்கறிவான்."

என்று இசசொற்களைச சொல்லுகையில், அவள் ஆறாய்ப்பெருகுங் கண்ணீருடன் தன் கண்களை ஏறிட்டு அம்முனிவரின் முகததை நோக்கினாள். இச்சொற்களைக் கேட்டதும், நெட்டுயிர்ப்பும் பொருமுதலும் வாய்ந்த தமது குரலை அவர் ஒருவாறு அமைதிபபடுத்திக்கொண்டு, மேலும் அவள்கூறவேண்டுவதைக் கூறும்படி கட்டளை யிட்டார். அங்ஙனமே, கானத்தோகை தன்னுள்ளத் துள்ள செய்திகள் அவ்வளவுங் கண்ணீர் ஒழுகியபடியே திறந்து சொல்லினள். அம்முனிவர் அவைகளைக்கேட்ட தும் வாய்திறந்து அழாமல் இருக்கமுடியாதவரானார்; அவர் அழுதவகையில் அவர் இருந்த இருக்கையும் அசைந்துவிட்டது. அவரது துயரத்தைக் கண்ட கானத் தோகை, நற்குணத்திற் சிறநத அம்முனிவர் தன்பா லெழுந்த இரக்கமிகுதியாலுந், தன் குற்றத்தின் கொடு மையை நினைந்ததாலுமே அங்ஙனம் பெருந்துயர் கூரலா

ஞர் எனக் கருதித். தான்செய்த தீவினைகளுக்குக் கழுவாயாக இனித் தான் கன்னிப்பெண்ணாகவே இருந்துவிட உறுதி செய்திருப்பதே தான் தேவமணியை நினைந்து நோற்கும் நோன்பாகுமென அவர்க்கு எடுத்து மொழிந்தாள்.

இதற்குள், தமது மனத்துயரை ஒருவாறு அடக்கி அமைதிப் படுத்திக்கொண்ட அம்முனிவர், தாம் வழங்காதுவிட்ட தமதுபெயரை இப்போது அம்மங்கை கூறக் கேட்டதிலிருந்தும், பிறனொருவனுக்கு உரியவள் ஆனாள் என்றே தாங் கருதிவிட்ட அவ்விளம்பெண் அங்ஙனம் ஆதற்கு ஒருசிறிதும் உள்ளம் இசையாளாய்த் தான காதலித்த காதலனிடத்திலேயே கட்டுப்பட்ட மன உறுதி வாய்ந்தவளாயிருத்தலை அறிந்ததிலிருந்தும் நெஞ்சம் நெக்குருகி மீண்டுங் கண்ணீர் வடிப்பாரானார். இங்ஙனம் அம்முனிவர் தாம் துயர்கூர்ந்து கண்ணீர்சிந்திக் கலுழ்தற்கிடையே, அம்மாது ஆறறொணாத் துயர்மிக்கு அழுதலைக்கண்டு, அதனைத தடுக்குமளவுக்குத் தம்மை அவர் தேறறிக்கொண்டு, அம்மஙகை தானுந் தன்னைத் தேற்றிக்கொள்ளுதல் வேண்டுமென்றும், அவள் செய்த பாவம் மன்னிக்கப்பட்டதென்றும், அவள் அஞ்சிக்கலங்கியவாறு அவள் செய்த குற்றம் அத்துணைப் பெரியதன்றென்றும், அளவுக்கு மிஞ்சி அவள் உளம் வெந்து துன்புறுதற்கு இடந்தரல் ஆகாதென்றும் அடுத்தடுத்து ஆறுதல் பகர்ந்தார். அதன்பிறகு அவர் முழுதும் ஆறுதல் எய்தினவராய், அம்மாதுக்குப் பாவவிடுவிப்பு மொழிந்து, மறுநாள் அவள் தம்மிடம் வந்தால், அவள் அப்போது மேற்கொண்ட கடவுள் ஊழியத்தில் நிலைப்படுதற்கு வேண்டுவன கூறி அவளைத் தாம் அதில் ஊக்கி, அதில் அவள் ஒழுகவேண்டு முறைகளைக் கற்பிப்பதாகவுஞ் சொல்லிவிடுத்தார்.

அங்ஙனமே கானத்தோகை மறுநாட் காலையிலும் அம்முனிவர்பாற் போந்து தான் துறவுநிலையை மேற் கொள்ள விரும்புவது தெரிவித்தாள். அம்முனிவர் தம துள்ளத்தைச சிறந்த எண்ணங்களாலும் நினைவுகளாலும் அரண் செய்துகொண்டு, அம்மங்கை தான் மேற்கொள்ள விழைந்த துறவொழுக்கததில் அவளை நிலைப்பித்தற்குத் தம்மால் எவ்வளவு சொல்லக்கூடுமோ அவ்வளவுஞ் சொல்லி, அவளதுள்ளத்திற காரண மின்றியே உண் டான அச்சங்களையுங் கலக்கத்தையும் ஒழித்திட்டார். அவள் துறவுநிலையை மேற்கொண்டபின் அவட்குத தாங் கூறவேண்டும் அறிவுரைகளை அவ்வப்போது கூறி வருவதாகவும் உறுதிமொழி புகன்றார். கடைப்படியாக அவர் அவளை நோக்கிக் கூறியதாவது: "நங்காய் நாம் கைக்கொண்ட இத்துறவு நடையின் முறைப்படி, யான் நின்னை அடிககடி பாாத்துப்பேசுதல் ஆகாது. ஆனாலும், யான் இறைவனை வழுத்தும் நேரங்களில் நினக்கும் அவன் தனதருளை வழங்குமாறு வேண்டுவேனென்றும், நீ நடந்துகொள்ளவேண்டு முறைகளை அடுத்தடுத்துக் கடிதவாயிலாக உனககு அறிவித்து வருவேனென்றும் நீ திண்ணமாய் நம்பியிரு. நீ மேற்கொள்ளத் தீர்மானித்த விழுத்தகுநிலையைக் களிப்புடன் கடைப்பிடித்திரு; நீ உலகத்தில் வேறெந்தவகையிலும் அடையமுடியாத ஒரு மனவமைதியையும் மனநிறைவையும் நீ அதனால் விரை வில் அடைவாய்!"

அங்ஙனம் அப்பன் பிராஞ்சு எடுத்துரைத்த அருண் மொழிகள், கானத்தோகையின் உள்ளத்தைக் கிளர்ச்சி பெறச்செய்தன; ஆகவே, அவள் மற்றைநாட் காலையிலே யே துறவுநிலையை மேற்கொண்டாள். அவள் அந்நிலையை அடைதற்குச் செய்த தவவினைகள் நடந்தேறிய பின்,

அவள் அக் கன்னிமாடத்தில் தனக்கென வகுக்கப்பட்ட ஒரு தனியறையுட்சென்று தனியிருந்து நோற்கலானாள்.

புதிது துறவுபுகுந்த இம்மாதர்க்கும் அப்பன் பிராஞ்சுக்கும் இடையே நிகழ்ந்த செய்திமுற்றும் அக் கன்னிமாடத்தின் தலைவியாரான துறவம்மையார்க்கு அறிவிக்கப்பட்டது. அடுத்த நாளில் அத்தலைவியார் அப்பன் பிராஞ்சு எழுதிய கடிதம் ஒன்றைக் கானத்தோகையின் கையிற் கொடுத்தனர். அதனை அவள் பிரித்துப்பார்க்க, அதிற் பின்வருமாறு வரையப்பட்டிருந்தது:

"நங்காய், நீ இப்போது புகுந்திருக்குந் துறவு நிலையில் நீ அடைய இருக்கும் மகிழ்ச்சிக்கும் ஆறுதலுக்கும் முதற்பயனாக யான உனக்கு அறிவித்துக்கொள்வது யாதெனறால், இறந்துபோனானென்று நீ நினைந்து மிகவுந் துயர்கூருந் தேவமணி யென்பான அங்ஙனம் இறந்துபோகாமல் இன்னும் உயிரோடிருக்கின்றான என்பதேயாம். நீ நினமனத்திலுள்ளதை எந்த முனிவர்க்குத் திறந்துசொல்லினையோ, அவரே நீ நினைந்தழும் அந்தத் தேவமணியாக முன்னொருகால் இருந்தனர். நாம் ஒருவரையொருவர் காதலித்த காதலானது, காதற்கூட்டங் கைகூடியிருந்தாற் பயக்கும் மகிழ்ச்சியைவிட, அது கைகூடாமற் போனதனால் சாலச்சிறந்த மகிழ்ச்சியைப் பயவாநிற்கின்றது. நாம் விழைந்தவாறே நிகழாதொழியினும், இறைவன் றிருவருளானது நமது நன்மைக்காகவே நம்மை இந்நிலையில் நிறபித்தது. நின்காதலன் தேவமணி இறந்துபோனதாகவே நீ இப்போதும் எண்ணிக்கொள். ஆயினும், நின்பொருட்டு இறைவனை வேண்டுதலில் வழுவாத அப்பன் பிராஞ்சு என்பான் ஒருவன் உளன் என்பதில் உறுதியாய் இரு. பிராஞ்சு".

இக்கடிதத்தின் கையெழுத்தும் அதில் அடங்கிய செய்தியும் ஒத்திருத்தலைக் கானத்தோகை கண்டுகொண்டாள். தான் தன்னுள்ளத் துள்ளதைத் திறந்துசொல்லியக்கால், அம்முனிவர் ஆறுதலுரை பகர்ந்த குரலொலியும், அவர் அப்போதடைந்த பெருந்துயரும், அவருடைய மறநெறி நடைகளும் அவர்தாம் தான் காதலித்த தேவமணி யென்பதனை அவட்கு நன்கறிவித்தன. அதனல், அவள் இன்பக்கண்ணீர் வடித்தழுதபின், "என் தேவமணி இன்னும் உயிரோடிருக்கிறார் என்பதே எனக்குப்போதும். இனி, நான் மனவமைதியுடனும் உவகையுடனும் என் காலத்தைக் கழிப்பேன்" எனத் தனக்குள் தீர்மானஞ் செய்துகொண்டாள்.



## தென்னமரம்

தென்னமரமானது நீர்வளம் நிலவளங் கெழுமிய மருதநிலத்தின்கண்ணேதான் மிகுதியாய் வளர்ந்து பல பயன்களை அளிக்கின்றது. சிறுபான்மை கடலோரமாக மணல்அடர்ந்த நெய்தல் நிலத்திலும் இதனைவைத்துப் பயிராக்குகின்றார்கள். இனி, மலையடுத்த நிலங்களிலும் இப்போதிது பயிர்செய்யப்படுகின்றது. என்றாலும், இது மருதநிலத்தின்கட் கொழுமையாகவளர்ந்து நீண்டநாள் உயிரோடிருந்து பெரும்பயன் றருவதுபோல் மற்றை நிலங்களில் இஃது அத்துணைக் கொழுமையாக வளர்ந்து நீண்டகாலமிருந்து பயன்றருவதில்லை இன்னுஞ், சூடுங் குளிர்ச்சியும் ஒத்த நிலைமையிலுள்ள இத்தென்னிந்திய நாட்டில் இஃதோங்கி வளர்ந்து பெரிதும் பயன்றருமாறு போற், பனிமிகுந்த இமயமலைமேலும், இமயமலைச்சாரலி

லுள்ள வடநாடுகளிலும், நம் ஆங்கில அரசினர் வாழும் பிரித்தானியதேயத்திலும், அதனை யடுத்துள்ள ஐரோப்பிய நிலப்பகுதிகளிலும் இது பயிராவதேயில்லை. ஆனாலும், ஆங்கிலமக்கள் தம்மூர்க்குப் புதுமையான இத்தென்னமரத்தைத் தம்மவர்க்குக் காட்டல்வேண்டிக், கண்ணாடிவீடுகள் அமைத்து அவற்றினுள்ளே இதனை வளர்த்துக் கண்காட்சிக்காக வைததிருக்கின்றார்கள். அவ்வாறவர்கள் பேருழைப்பெடுத்துப் பெருஞ்செலவு செய்து இதனைப் பயிராக்கியும், இஃது அக்கண்ணாடி வீட்டுட் குறுகிவளர்ந்து, வெறுங்காட்சிக்குப் புதுமையாய்க்காணப்படும் அவ்வளவேயல்லாமற, பூத்துக்காய்த்துப் பயன் அளிப்பதேயில்லை.

இனி, இத்தென்னாட்டிற் பயிர்செய்யப்படும் இடங்களிலும், இஃது ஆங்காங்குள்ள நிலத்தின்றன்மை நீரின்றன்மைகளுக் கேற்பச் சுவை வேறுபட்ட காய்களை யுடையதாயிருக்கின்றது. மருதநிலத்தென்னைகள் தருந் தேங்காய்களின் நீரும் பருப்பும் நடுத்தரமான இன்சுவையும் மணமும் வாய்ந்திருக்கின்றன; நீர்வள நில வளங்களிற்சிறந்த சோழநாட்டுத் தேங்காய்கள் இத்தன்மைகள் உடையனவே யாகும். மலையாளநாட்டுத் தேங்காய்கள் இனிப்புடையனவாய்க் காணப்படினும், அவற்றினின்றெடுக்கப்படும் பால் மொச்சைநாற்றம் வீசி வயிற்றைக் குமட்டுகின்றது. நெய்தல்நில மணல்வெளிகளிற் பயிராகுந் தென்னைகளின் தேங்காய் நீரும் பருப்பும் உப்புக் கரிக்குந் தன்மையவாய் இருக்கின்றன. யாம் இருக்கும் இப் பல்லவபுரம் மலைசூழ்ந்துள்ளதோர் இடமாகலின், இதன்கண் அமைத்துள்ள எமது தோட்டத்திற் பயிராகியிருக்குந் தென்னைகளின் காய்கள் தித்திப்புச்சுவை மிகுந்தனவாயிருக்கின்றன; மணமும், இசை

வானதாகவே யிருக்கின்றது ; ஆயினும், இவை மிகுதி யாய்க் காய்ப்பதில்லை ; எருப்பெய்து பலகாலும் நீர் பாய்ச்சிச் சிரைகழித்துச் செய்யுஞ் செய் நேர்த்தியி னளவுக்குத் தக்கபடிதானும் இவை பெரும்பயன் அளிப்பதில்லை, சிறு பயனையே தருகின்றன. மணற் பாங்கான இடங்களிற் பயிராகும் தென்னைகளோ குலைகுலையாய்க் காய்க்கின்றன ; ஆனல், அவற்றின் இளநீரும் அதன்கண் வழுக்கையும் முற்றின நெற்றின் பருப்பும் அத்துணை இன்சுவை வாய்ந்தனவாய் இல்லை. அது நிற்க.

இனி, இத் தென்னாட்டின் தெற்கே உலவும் இந்தியமாக் கடலின்கண்ணவான இலங்கை, நக்க வாரம், சுமத்திரா, சாவகம் முதலான தீவுகளில் தென்னமரங்கள் பெரும் பெருந் தோப்புகளாக வைத் துப் பயிராக்கப்படுகின்றன.

தென்னைகள் சுo அடி முதல் கoo அடி யுயரம் வரையில் வளரும். இவற்றின் அடிமரத்திற் கிளைக ளேனுங் கொப்புகளேனும் உண்டாவதில்லை ; இஃது ஒரே நீளமாகவே வளர்ந்தோங்குகின்றது. இதன் உச்சியிற் பன்னிரண்டு முதற் பதினைந்து வரையிற் பச்சோலை மட்டைகள் கிளைத்து நாற்புறமுங் கவிந்து விளங்குங் காட்சி, அது தன் றலைமேலுள்ள பசிய நெடுங் கூந்தலை அவிழ்த்துவிட்டு மெல்லிளந் தென்ற லில் அதனை ஈரம் புலர்த்துவதுபோற் றோன்றுகின்றது. இதன்கண் ஒட்டியிருக்கும் பச்சை மட்டைகள் ஒவ் வொன்றும் பசுமை மாறிப் பழுத்துப் பற்றுவிட்டுக் கீழ் விழுதற்கு ஆறு திங்கள் செல்கின்றனவென்று பயிர்நூல்வல்லார் கணக்கெடுத் திருக்கின்றார்கள்.

அதன்படி ஒரு கணுச்சுற்றில் ஒட்டியிருக்கும் இவ்விரண்டு மட்டைகள் ஆறு திங்களிற் கீழ்விழப், பிறகு வெறுமையாய்க் காணப்படுங் கணுச்சுற்றுகளை எண்ணிக் கணக்கெடுத்து ஒவ்வொரு தென்னமரத்தின் வாழ்நாளையும் உறுதிப்படுத்தல் கூடுமென்று சொல்லுகிறார்கள். இக் கணுச் சுற்றுகளின் உதவி கொண்டு தான் கள்ளிறக்குஞ் சான்றாருந், தேங்காய் பறிக்குங் குடியானவர்களுந் தென்னமரங்களின் மேல் ஏறுகிறார்கள். இவையில்லையேல், நீளமான ஏணிகளின் உதவி கொண்டன்றி வழுவழுப்பான இம் மரத்தின் மேல் ஏறுதல் இயலாது.

இனித், தென்னைகள் பூக்குங்காலம் வருங்கால் மற்றை மரங்களைப்போற் பூவெடுப்பதில்லை. முதலிற், பச்சைப்பசேல் என்ற நிறத்துடன் திரண்டு நீண்ட பாளைகளே மேல் உள்ள மட்டைகளின் அடியிலிருந்து கிளைத்தெழுகின்றன. தாமரைக் குளங்களின் கரை மேல் நிற்குந் தென்னைகளின் நிழல் அக் குளநீரிற் றோன்றுங்கால், அவற்றின் உச்சியில் உள்ள முழுப் பாளைகளின் நிழல் அந் நீரின்கண் உலவும் பெரிய வரால் மீன்களையே ஒத்திருக்கின்றனவென்று தமிழ்ப்பாவலர் ஒருவர் பாடியிருக்கின்றார். பிறகு, சிலநாட் சென்ற பின் இப் பாளைகள் வெடிக்க, இவற்றின் உள் உள்ள பூக்கள் தூவெண்ணிறத்தினவாய் வெள்ளிய கவரி போல் அலர்ந்து விளங்குகின்றன: பூ நரம்புகளின் நெடுக வெள்ளிய முத்துப்போன்ற இளம்பிஞ்சுகள் தோன்றிச் சிலநாட் சென்றபின் பச்சிளங் குரும்பைகளாக மாறுகின்றன; மரத்தின் ஊட்டத்திற்கும் வலிவுக்குந் தக்கபடி குரும்பைகள் உதிராமற் பெருக்

கின்றன; மரம் அலைவிரண்டிலுங் குறைவுபடுமாயிற் குரும்பைகள் பெரும்பாலும் உதிர்ந்து போக, எஞ்சிய மிகச் சில குரும்பைகளே பெருத்து இளநீராகவும், பின்னுஞ் சில திங்கள் கழித்துத் தேங்காய்களாகவும், மற்றுஞ் சில திங்கள் கழித்து மட்டைகள் காய்ந்து போன நெற்றுகளாகவும் முடிவு பெறுகின்றன. தேங்காய்களாகவும் நெற்றுகளாகவும் முதிர்ந்தவைகள் தாமே கீழ் விழுகின்றன. ஆதலாற், பழுத்த மட்டைகளும் முற்றின நெற்றுகளும் உடைய தென்னமரங்களின்கீழ் ஆடவரும் பெண்டிருஞ் சிறுரும் அமர்தலும் இயங்குதலும் ஆகா.

தென்னந் தோப்புகளின் பக்கத்தே கமுகஞ் சோலைகளும் வாழைத்தோட்டங்களும் அவற்றையடுத்து வயல் நிலங்களும் அமைந்திருத்தல் செழுமை மிக்க சோழ நாட்டிலே இன்றுங் காணலாம். இந் நிலையில், தென்னைகளில் முற்றிப்போன தேங்காய்களும் நெற்றுகளுங் கீழ் உதிர்தலால், அவை அடுத்துள்ள பாக்கு மரங்களிற் றாக்கி அவற்றின் பாளைகளை முறித்து விடுதலும், வாழை மரங்களில் மோதி அவற்றின் தாறுகளைக் கிழித்து விடுதலுமாகிய நிகழ்ச்சிகள் அங்குப் பலகாலுங் காணப்படுகின்றன. இற்றைக்கு ஆயிரத்தெழுநூறாண்டுகட்கு முன்னிருந்த மாணிக்க வாசகப் பெருமான் தாம் அருளிச்செய்த திருச்சிற்றம் பலக் கோவையாரிற் போந்த,

> "தெங்கம்பழங் கமுகின் குலைசாடிக் கதலிசெற்றுக்
> கொங்கம்பழனத் தொளிர்குளிர் நாட்டினைநீ உமைகூர்
> பங்கம்பலவன் பரங்குன்றிற் குன்றன்ன மாபதைப்பச்
> சிங்கந்திரிதரு சீறூர்சசிறுமிளந் தேமொழியே."

என்னுந் திருப்பாட்டில் இத்தகைய இயற்கை நிகழ்ச்சி சோழ நாட்டிற் பலகாலும் நிகழ்தலைத் தாம் கண்டு கூறுதல் கொண்டு, இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னமே சோழமா நாடானது தென்னந் தோப்பு களுங் கமுகஞ் சோலைகளும் வாழைத்தோட்டங்களும் இடையிடையே குழுமிய வயல் நிலங்கள் வாய்ந்திருந் தமை தெற்றெனப் புலனாகின்றது.

இனி, நிலவளம் நீர்வளம் இன்மையினாலும் வேண்டுமளவு எரு முதலான ஊட்டந் தரப்படாமையி னாலுஞ் சில பல தென்னைகள் அருமையாய்க் காய்க்குங் காய்களுஞ் சூம்பிப்போதலுடன் உள்ளீடில்லாச் சொத்தைகளாகவும் பயன்படா தொழிகின்றன. இங்ஙனஞ் சொத்தையாய்ப் போகுந் தேங்காய்களைத் தேரை மோந்தவையென்று குடியானவர்கள் கூறுகின் றார்கள். தேரையென்பது தேங்காய்க்கு வருஞ் சொத்தை நோய் என்பது தெரியாத கீழ்மக்கள், தேரை என்னும் ஒருவகைத் தவளை மோந்து தேங்காய் சொத்தையாகின்றதெனப் பிழையாகப் பேசுகின்றார் கள். ஆனால், இற்றைக்குப் பல நூற்றாண்டுகள் முன் னிருந்த நச்சினார்க்கினியர் என்னும் உரையாசிரியரோ விளாங்காய்க்கு வரும் நோயை வேழம் என்றுந் தேங்காய்க்கு வரும் நோயைத் தேரை என்றும் உண்மையை யுள்ளவாறறிந்து ஓதிய நுட்பம் அனை வருங் கருத்திற் பதிக்கற்பாலதாகும். இங்ஙனம், நிலத்தின் கொழுமையும் நீரின் சுரப்பும் இல்லாத பகுதிகளில் தென்னமரங்களைப் பயிர் செய்வது பெரும் பயன்றராமையால், அவையிரண்டும் உள்ள இடங்

களைத் தெரிந்தெடுத்துப் பயிர் செய்வதில் அனைவருங் கருத்துடையவர்களாய் இருத்தல் வேண்டும்.

இனித், தென்னமரங்களால் மாந்தர் அடையும் பயன்கள் சிலவற்றை இங்கெடுத்துக் கூறல் வேண்டும். முதலிற் பயன்படுவன தென்னமட்டைகளேயாகும். இம் மட்டைகளைப் பிளந்து இருபக்கத்து முள்ள ஓலைகளை முடைந்து ஆக்கிய கீற்றுகள் வீடுகளுக்குங் குடில்களுக்கும் மேற்கூரைகளாக இணைத்துக் கட்டப்படுகின்றன. சோழ நாட்டிலுள்ள சிற்றூர்களில் உயிர் வாழுங் குடியானவர் பெரும்பாலாரின் வீடுகள் தென்னங்கீற்றுகளாற் சமைத்த மேற்கூரைகள் வாய்ந்தனவாகவே யிருக்கின்றன. மற்றுத், தொண்டை நாடு, பாண்டி நாடுகளிலுள்ள குடியானவர்களும் எளியவர்களுமோ பனையோலைகளினலேயே தாமிருக்கும் இல்லங்களுக்குங் குடில்களுக்கும் மேற்கூரை வேய்கின்றூர்கள். அஃதென் என்றுற், சோழ நாட்டில் தென்னைகள் மிகுதியாயிருக்கின்றன. அவற்றின் கீற்றுகள் குறைந்த விலையிலும் விலையின்றியும் அங்குள்ளார்க்குக் கிடைப்பதுபோல, ஏனையிரு நாட்டார்க்குங் கிடைப்பதில்லை; ஏனைத் தொண்டைநாடு பாண்டிநாடுகளிலோ பனந்தோப்புகளே அளவின்றி அடர்ந்திருக்கின்றன. அதனல் இந் நாடுகளில் உள்ளார்க்குப் பனையோலைகளே மிரம்பவும் பயன்படுகின்றன. இனி, ஈழ நாட்டில் உள்ளாரோ தென்னையையும் பனையையும் ஏறக்குறைய ஒத்த நிலையில் வைத்துப் பயிர்செய்து வருதலால், அவர்கள் தென்னங் கீற்றுகளையும் பனையோலைகளையும் பொதுவாகப் பயன் படுத்தி வருகின்றனர்.

இனித், தென்னமட்டைகளின் ஓலைகள் கீற்றாக முடையப்படாவிட்டால், அவற்றின் இலைகள் கழிக்கப் பட்டு, அவற்றினின்றும் ஈர்க்குகள் ஈர்ந்தெடுக்கப் பட்டு விளக்குமாறுகளாகக் கட்டப்படுகின்றன. இவ் விளக்குமாறுகளைத் தொண்டைநாட்டார் 'தென்னந் துடைப்பம்' என்று சொல்லுகிறார்கள். ஒருவகைப் புல்லிலிருந்தெடுக்கப்படும் 'பூந்துடைப்பம்' மிகப் பொடியான புழுதிகளையுந் துடைத்து நிலத்தைத் துப்புரவு செய்யவல்லது. மற்றுத் தென்னந் துடைப் பமோ பரும்படியான மண்ணையுஞ் சிறு கற்களையுந் துடைத்து அகற்றுதற்கு உதவிசெய்வது. கீற்றுகள் பின்னவும், ஈர்க்குகள் கிழிக்கவும் வெட்டப்பட்ட பகுதிகள் போக எஞ்சிய அடிமட்டைகள் வெயிலிற் காயவைத்து அடுப்பு எரிக்கப் பயன்படுகின்றன.

இனித், தென்னம்பாளைகளைக் கள் இறக்காமல் விட்டால், அவை மடல் விரிந்து, விசிறிபோல் வெண் மையான பூக்களைத் தோற்றுவிக்கின்றன. நீண்ட அப் பூக்களின் நெடுகப் பிடிக்கும் பிஞ்சுகளிற் சில பல உதிர்ந்து போகச் சில பல சிறிது பெருக்கத் துவங்குகின்றன. சில நாட்களிற் பெருக்குந் தென்னம் பிஞ்சுகள் 'குரும்பைகள்' ஆகின்றன. இக் குரும்பை களும் வளர்ந்து பெருத்தால் அவை 'இளநீர்கள்' என்று வழங்கப்படுகின்றன. வெப்பம் மிகுந்த வேனிற்காலத்தில் நாவறட்சியும் இளைப்புங் களைப்பும் மிகப் பெற்ற வழிப்போக்கர்கள் தென்னந்தோப்பு களைக் கண்டால் வானுலகத்தையே கண்டாற்போல வும், அங்கே விற்கப்படும் இளநீரை வாங்கி அதன் இனிய நீரையும் வழுக்கையையும் அருந்தினால் அவ்

வானுலகத்து அமிழ்தத்தினையே அருந்தினாற்போல வும் உள்ளங் களித்து அயர்வு நீங்கப் பெறுகின்றனர். யாம் செந்தமிழ் கற்பித்த மாப்பெருங் கிறித்துவக் கல்லூரியில் வரலாற்று நூலாசிரியராய் இருந்த ஒரு துரைமகனார் ஒருகால் ஒரு வேனிற்காலத்திடையில் தம் மனைவி மக்களுடன் மாட்டுவண்டியிலேறி ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊர்க்கு ஏகினார். இங்ஙனம் இவர் புறப்பட்டது காலை வேளை. இவர் சென்ற வழி நெடுக ஊர் ஏதும் இல்லை. இடையிடையே சிற்சில ஏழைக்குடில்கள் மட்டும் இருந்தன. நடுப்பகலில் இவர்க்கும் இவர் தங் குடும்பத்தார்க்கும் அடங்கா நாவறட்சியுங் கடும்பசியுங் களைப்பும் மிகுந்தன. கையிற் சில தின்பண்டங்கள் வைத்திருந்தனரேனும் அவை நெகிழ்ந்த பதமாயில்லாமையால் அவற்றில் அவர்கட்கு வேட்கை சென்றிலது. வழியில் அவர் கட்கு இசைந்த உணவுப்பண்டமுங் கிடைத்திலது. அதனால் அவர்கள் மிக்க அயர்வுடன் செல்கையில், அவர்களது வண்டி ஒரு தென்னந்தோப்பின் அருகே வந்தது. இவர்கள் படுந் துன்பத்தைக் கண்ட வண்டிக் காரன் அத் தோப்பின் அண்டையில் வண்டியை நிறுத்தி, அத் துரைமகனாரையும் அவர் தங் குடும்பத் தாரையுங் கீழிறங்கி மரநிழலில் அமரும்படி வேண்டி னான். அடர்ந்துயர்ந்த அத் தென்னந்தோப்பின் நிழல் வெந்துபோன உடலையும் உயிரையுந் தளிர்க்கச் செய்யுந் தட்பம் வாய்ந்ததாய் இருந்தது. அதைக் கண்டு மகிழ்ந்த அத் துரைமக்கள் வண்டியைவிட் டுடனே கீழிறங்கி அம் மரங்களின் குளிர்ந்த நிழலில் வைகினர். தாம் இருந்த இடத்தின் ஓரமாய்ச் சென்ற

ஒரு சிறிய வாய்க்காலின் தெளிநீரில் தம் முகங்களைக் கழுவித் தங்கால்களையும் அதிற் றேய்த்துக்கொண்டு சிறிது களைப்புத் தீர்ந்திருந்தனர். இதற்குள் இவர் களின் வண்டிக்காரன் வேண்டியதற்கு இணங்கி, அத் தென்னந் தோட்டக்காரன் சில மரங்களின் மேலேறி இளநீர்க் குலைகள் சிலவற்றை வெட்டிக்கொணர்ந்து, இளநீர்க் கண்களைத் திறந்து, அவற்றின் நீரை அத் துரைமகனாரின் சிறு பிள்ளைகளும், மனைவியாரும், அவரும் பருகக் கொடுத்தனன். அவர்கள் அதனை வேண்டுமட்டும் அவாவுடன் பருகிய பின்னர், அவ் விளநீர்க் காய்களை நடுவே பிளந்து, உள்ளுள்ள வழுக்கைகளைப் பெயர்த்தெடுத்து, அவற்றை அவர்கள் அருந்தத் தந்தனன். அவற்றை அவர்கள் சுவைத்து உண்ணுங்கால் அவற்றின் மென்மையினையும் இனிமை யினையும் வியந்து, இவை இறைவனால் அருள்கூர்ந்து அளிக்கப்பட்ட தெவிட்டா அமிழ்தமே யாமெனக் கருதினர். தமக்கு வந்த களைப்பும் பசியும் நாவறட் சியும் ஒருங்கே நீங்கி அடங்கா மகிழ்ச்சியடைந்த அத் துரைமக்கள், அத் தோட்டக்காரனுக்கு ஓர் ஐந்து ரூபா தமது நன்றிக்கறிகுறியாய் வழங்கினர். அதனைப் பெற முதலில் அவன் மறுத்தனனாயினும் அவர்கள் அவனைக் கட்டாயப்படுத்தியதன்மேல் அவன் அதனை உவகையுடன் பெற்றுக்கொண்டான். சிலநாட் சென்றபின் அத் துரைமகனார் கல்லூரிக்குப் போந்து மாணுக்கர்க்கு நூல் கற்பிக்கையில், தாம் தங் குடும்பத்துடன் வழிச்செல்லுங்கால் நண்பகலில் நாவறட்சியாலும் பசியாலும் பட்ட பொறுத்தற்கரிய துன்பத்தை எடுத்துரைத்துத், தெங்கிளநீரால் அத்

துன்பம் நீங்கி உயிர் பிழைத்த வரலாற்றையும் நன்றியுடன் நுவன்று 'இத்தகைய தென்னமரங்களே கற்பக மரங்களாகும்; இம் மரங்களேயுடைய இத் தென்னுடே விண்ணுடாகும்' என உண்மையையுருக்கத்தொடு மொழிந்தனர்.

இனி, இளநீர் மட்டை காயாமலே முதிர்ந்தபோது தேங்காய் ஆகின்றன. அது தெரிந்து தோப்புக்காரர் அவற்றைப் பறித்து மட்டைகளே உரித்தெடுத்துத் தேங்காயை விற்பனே செய்கின்றனர். தேங்காயை இரு கூறுக உடைத்து ஒவ்வொரு மூடியினுள்ளும் உள்ள வெண்மையான பருப்பை எடுத்தரைத்துக் கத்தரிக்காய் வாழைக்காய் உருளைக்கிழங்கு முதலியவற்றுடன் சேர்த்துக் கறி சமைக்கிறுர்கள். அல்லது தேங்காய் மூடியைத் திருகுபலகைகொண்டு திருகியெடுத்த தேங்காய்ப் பூவைப் பிழிந்து, அதில் வரும் பாலேக் கலந்து மேற்சொன்ன காய்கிழங்குகளேயும் இட்டுவைக்குங் குழம்பு நறுஞ்சுவை மிக்கதாய் இருக்கின்றது. தேங்காய்ப் பருப்பை எந்த வகையிற் சேர்த்துச்செய்தாலுங், கறி குழம்புகள் இன்சுவையும் நறுமணமும் உடையவாதலுடன், உடம்பினேச் செழுமையாக வளரச் செய்தற்கு இன்றியமையாது வேண்டப்படும் உய்வனவுகளும் (vitamins) பொருந்தப் பெற்றனவாயிருக்கின்றன. ஆனுலும், அவ்வவர் உடம்பின் வலிவுக்கும், அவ்வவரின் தீனிப்பை ஏற்றுச் செரிக்கச் செய்யும் அளவுக்கும் உணர்ந்து பார்த்துத் தேங்காயைச் சிறிது பெரிதாக உட்கொள்ளல் வேண்டும். தேங்காயை மிகுதியாய்ப் பயன்படுத்துகிறவர்க்கு மயக்கநீர் மிகுமாதலால், அவர் அதனேத் தணிய்

பதற்கு எலுமிச்சம்பழச் சாற்றைக் கறி குழம்பு மிளகு நீர் மோர் முதலியவற்றிற் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும்.

இனித், தேங்காயின் மட்டை முற்றுங் காய்ந்து நெற்று ஆனபின், அதனுள்ளிருக்கும் பருப்பின் பால் வற்றி நெய்யாக மாறுகின்றது. அந் நிலையில் ஓட்டினின்றும் எளிதிற் பெயர்த்தெடுக்கப்படும் பருப்புக் கொப்பறை எனப் பெயர் பெறுகின்றது. அக் கொப்பறையை வெயிலிற் பரப்பி உலர்த்தியெடுத்துச் செக்கிலிட்டு அரைத்து நெய் எடுக்கின்றார்கள். இத் தேங்காய் நெய்யினின்றும் எத்தனையோ வகையான பண்டங்கள் செய்யப்படுகின்றன; மெழுகு திரியானது தேங்காய் நெய்யினின்றுஞ் செய்யப்படும் பல்வேறு பண்டங்களுள் முதன்மை பெற்றதாகும். மலையாளத்திலுள்ள மக்கள் தேங்காய்ப் பாலையும், நெய்யையும் மிகுதியாய்ப் பயன்படுத்துகிறார்கள்; தலைக்கும் உடம்புக்கும் அவர்கள் தேய்த்துக்கொள்வது தேங்காய் நெய்யேயாகும்; அவர்கள் அருகே வருங்கால் ஒருவகை மொச்சை நாற்றம் வீசுதற்குக் காரணம் இதுவேயாம். எள் நெய் தேய்த்து முழுகுஞ் சோழ நாட்டார் பாண்டி நாட்டாரிடமிருந்து இத்தகைய நாற்றம் வீசுவதில்லை. தேங்காய் நெய்க்கு மயிர் கருமையாய் நீண்டு வளருமாதலால், மலையாளத்து மாதரின் கூந்தல் கருகியடர்ந்து நீண்டிருப்பதற்குக் காரணம் இதுவே. கூந்தலை வளர்க்கும் மணநெய்களிற் பெரும்பாலன தேங்காய் நெய்யினின்றுஞ், சிறுபாலன எள் நெய்யினின்றும் ஆக்கப்படுகின்றன. எள்ளினின்றும் எடுக்கப்படும் நெய் எண்ணெய் எனப்

பெயர்பெறலாயிற்று. எண்ணெயை மிகுதியாய்ப் பயன்படுத்துஞ் சோழ நாட்டார் தாங் குறைவாய்ப் பயன்படுத்தும் மற்றை நெய்களையும் எண்ணெய் என் னுஞ் சொல்லொடு சேர்த்தே வழங்குகின்றனர்; இங்ஙனம் வழங்குங்கால் எண்ணெய் என்னுஞ் சொல் எண்ணை எனத் திரிக்கப்பட்டுத் 'தேங்காயெண்ணை' 'விளக்கெண்ணை' 'இலுப்பையெண்ணை' என இயைத்து வழங்கப்படுகின்றது.

இனித், தேங்காய் நெற்றினின்றும் உரித்தெடுக் கும் மட்டைகளை நறுக்கித் தேங்காய்ப்பஞ்சு எடுத்து, அப் பஞ்சினாற் பல பருமனும் பல நீளமுமுள்ள கயிறுகளைத் திரிக்கிறார்கள். கிணறுகளினின்றும் நமது நாட்புழக்கத்திற்கு முகக்குந் தண்ணீரும், வயல்கள் தோட்டங்கள் பூங்காக்கள் முதலியவற் றிற்குப் பாய்ச்சுந் தண்ணீரும் இத் தென்னங் கயிறு களின் உதவியினாலேயே எடுக்கப்படுகின்றன. இன் னும், படகுகள் செய்தற்கும், அப் படகுகளிலும் மரக்கலங்களிலுங் கட்டும் பாய்கள் புனைதற்குந், திருக்கோயிற் றிருவிழாக் காலங்களில் இறைவன் றிரு வுருவங்களைத் தேர்மேல் எழுந்தருளச் செய்து அத் தேரை இழுக்கும் நீண்டு பருத்த வடங்கள் திரித் தற்குந் தென்னம்பஞ்சுகளே பெரிதும் பயன்படு கின்றன.

இனிப், பருப்பெடுத்தபின் விடப்படும் ஓடுகள் சிரட்டைகள் எனச் சொல்லப்படுகின்றன. இச் சிரட்டைகளை ஏழை எளிய மக்கள் தம் உணவுப் பண்டங்களை வைப்பதற்கும், நீர் பருகுதற்குங்

கையாளுகின்றனர்; அவைகளிற் பழுதாய்ப்போனவை களை அடுப்பிலிட்டும் எரிக்கின்றனர். சில தென்ன மரங்களின் காய்கள் ஒரு சிறு குடத்தினளவு பெரி யனவாய் இருத்தலால் அவைகளின் சிரட்டைகளை இரவலர்களுந் துறவிகளும் உணவுக்கலங்களாகப் பழங்குகின்றார்கள். இதனாலேயே துறவிகள் கையேந்தி வரும் உணவுக்கலம் 'திருவோடு' எனச் சொல்லப்படு

இனித், தென்னைகள் மூத்துப் பட்டுப்போகுங் காலம் அணுகுதலைக் கண்டவுடன் உரியவர்கள் அவற்றை வாளால் அறுத்துக் கைத்துண்டுகளாகவும் உத்திரங்களாகவும் வீடுகளின் மேற்கூரை வேய்வதற் கும், நீர் இறைக்கும் ஏற்ற மரங்கள் அமைப்பதற்கும், நீர் ஓடுங் கால்வாய்களுக்குப் பாலங்கள் கட்டுவதற்கும் பயன்படுத்துகின்றார்கள். நாட்பட்டுக் காழ்ப்பேறிய தென்னங்கட்டைகள் மிக்க வலிவு வாய்ந்தனவாய் உளுத்துப் போகாமல் நீண்டகாலம் பெருஞ் சுமை களையுந் தாங்கி நிற்கும். இவ்வாறாகத் தென்னமரத் தின் ஒவ்வோர் உறுப்பும் மக்கட்கு நிரம்பவும் பயன் பட்டு வருதல் கண்டே கற்றோர்கள் இதனையும், இதனோடொப்பப் பயன்படும் வாழை பனை முதலிய மரங்களையுங் 'கற்பகதரு'வென உயர்த்துப் பேசி வருகின்றனர்.

## மக்கள் வாழ்க்கை

ஓரறிவுடைய புற்பூண்டுகள் முதல் ஆறறிவுடைய மக்கள் ஈறான பல கோடி உயிர்களில் மக்கட் பிறவியே சிறந்ததென்பது எல்லார்க்குந் தெரிந்த உண்மை யன்றோ? ஏனெனில், ஆறாவதான பகுத்தறிவு மக்கட் பிறவியெடுத்த உயிர்கட்குப் பேரளவினதாய் அமைந் தாற்போல, ஏனைச் சிற்றுயிர்கட்கு அஃது அங்ஙனம் அமையவில்லை; இவைகட்கு அவ் வறிவு ஏறியுங் குறைந்தும் பலதிறத்ததாய்க் காணப்படுகின்றது. மக்களுள்ளும் மற்றைச் சிற்றுயிர்களைப்போற் பகுத் தறிவு மிகக் குறைந்த நிலையிலுள்ளார் மிகப் பலர் உண்டு. அவரெல்லாம் விலங்கினங்களைப்போல் ஐம் பொறிவழிச் செல்லும் ஐந்து புலனறிவே உடைய ராதல் உற்று நோக்குவார்க்குத் தெற்றென விளங்கும். அது கண்டே முதலாசிரியர் தொல்காப்பியனார்,

"மாவும் மாக்களும் ஐயறி வினவே"

என்றருளிச் செய்தார். இதனால், மக்களிற் குறைந்த அறிவினராய் மக்களைப்போல் வடிவுமட்டு முடைய ராய் இருப்பாரை 'மாக்கள்' என்றது பெரிதும் பொருத்தமுடைத்தாதல் காண்க. முதன்முதற் றோன்றிய மாக்கள் வேட்டுவ வாழ்க்கையில் இருந் தோர் ஆவர். அவர்க்குப்பின் பன்னெடுங் காலங் கழித்துத் தோன்றியவர் ஆடு மாடு மேய்க்கும் மேய்ப் பர்கள் ஆயினர். அவர்க்குப் பின்னர்ப் பல்லாயிர ஆண்டுகள் கழித்துத் தோன்றியவர் உழுதொழில் வாழ்க்கையை மேற்கொண்ட உழவர் ஆயினர்.

வேட்டுவ வாழ்க்கையில் உள்ள மாக்களை இஞ் ஞான்றுங் காணலாம். நீலமலையில் உள்ள மக்கள் மிகக் குறைந்த அறிவுடையவராகவே யிருக்கின்றனர். இவர்களினுங் குறைந்த அறிவினராய் இருந்தவர் மேல் நாடுகளில் உள்ள மலைக்குகைகளில் உறைந்து காலங் கழித்தனர். மரஞ் செடி கொடிகளில் உண்டான காய் கனி கிழங்கு இலை பூ முதலியனவே அவர்கட்கு உணவுப் பொருள்களாய் இருந்தன. உழுது பயிர் செய்து அவ்வாற்றால் உணவுக்கேற்ற வித்துக்களைப் பெறும் வழி அவர்கட்குத் தெரியாது. மேற்கூறிய தின்பண்டங்கள் கிடையாதபோது, ஆடுமாடு கடம்பை முதலான நில விலங்குகளையும், ஏரி யாறு கடல் முதலான நீர்நிலைகளின் ஓரங்களில் இருந்தோர் அஞ்ஞான்றிருந்த பெரிய பெரிய மீன்களையும் பிடித்து அயின்று அவற்றின் தோலையே ஆடையாகவும் உடுத்துக்கொண்டனர்.

அப்பண்டை நாளில் யானையினும் பதின்மடங்கு பெரிய மாமத்து என்னும் பேரியானையும், பனை தென்னை முதலான நீண்ட மரங்களின் உயரத்தளவும் வளர்ந்து அவற்றின் உச்சியிலுள்ள இலை பூ காய் கனி களைக் கறிக்கும் பரிய பெரிய விலங்குகளும் இருந் தமையால், அஞ்ஞான்றிருந்த மாந்தர் அவ் விலங்குக ளுடன் ஓவாமற் போராட வேண்டுவதாயிற்று. அப் போராட்டத்தில் தப்பிப் பிழைத்தவர் சிலரேனும் ஆங்காங்கு இல்லாதொழிந்தால் மக்கட்பூண்டே காணப்படாமல் அடியோடழிந்து போயிருக்கும். என் றாலும், அங்ஙனம் அழிந்தொழியாமல் இன்றுகாறும் அவர்களைப் பிழைத்திருக்கச் செய்தது எது? அஃது ஆராய்ச்சி யறிவேயாம்.

மேற்கூறிய விலங்குகளுக்கு அஞ்சிக் கீழே இருக்க இடம் பெறாதபோது, பண்டை மக்கள் மிக நீண்டுயர்ந்த மரங்களின்மேற் பருத்த கிளைகளிற் குடிசைகள் கட்டி அவற்றின்கண் இருந்து உயிர் வாழ்ந்தனர் அவர்கள் அக் குடிசைகளிலிருந்து கீழ் இறங்கவுந் திரும்ப மேலேறவும் நூலேணி அமைத்துக் கொள்ளத் தெரிந்திருந்தனர். இத்தகைய வாழ்க்கையிலிருந்த ஒருவனைக் குறிஞ்சிப்பாட்டின் ஆசிரியர் சேணோன் என நுவல்கின்றனர். மிக உயரமாய் வளர்ந்த தேக்குமரங்கள், ஆலமரங்கள், அரசமரங்கள் முதலியவைகளை இன்றைக்கும் மேற்கு மலைத்தொடர்களிலும், இடையிடையேயுள்ள அடர்ந்த காடுகளிலுங் காணலாம்.

இக் காடுகளின் மரப்பொந்துகளிலுங்கூடக் கானவர்களுந் துறவிகளும் ஒடுங்கியிருந்து உயிர் வாழ்கின்றனர். இலங்கையிலுள்ள திருக்கேதீச்சரம் என்னுஞ் சிவபிரான் திருக்கோயிலை யாம் வணங்கச் சென்றக்கால் வழியிலிருந்த காடு ஒன்றில் துறவி ஒருவரைக் கண்டு தொழுதேம். அவர் எம்மை அன்பாக வரவேற்றுச் சிறிதுநேரம் எம்மோடு உரையாடினர். அப்போது யான் அவரை நோக்கி, "அடிகாள்! கடுங்காற்றுக்கும் பெருமழைக்குந் தாங்கள் தங்குவது எங்கே?" என்று வினவினேன். அவர் என்னை அழைத்துக்கொண்டு சென்று சிறிது தொலைவில் வான்அளாவியிருந்த ஒரு பெரிய மரத்தையும், அதன் அடியிலிருந்த ஒரு பொந்தையும் எனக்குக் காட்டினர். அப் பொந்தில் ஒருவர் இருத்தற்கு வேண்டிய அளவு இடம் இருந்தது.

இனி, மரப் பொந்துகளேயன்றி மலைகளுள்ள இடங்களில் மலைக்குகைகளும் ஆங்காங் கமைந்திருக் கின்றன. அவைகள் பண்டைக்கால மக்களுக்கு உறையுளாயிருந்து பயன்பட்டன. இஞ்ஞான்றும் அத்தகைய குகைகளில் உறைவார் உளர். முன் ஒரு கால் அன்பு மிக்க இளைஞர் சிலருடன் யாம் திருக்குற் றாலஞ் சென்றபோது, அங்குள்ள மலைமீதிருந்து கீழ் இழியும் அருவியில் நீராடச் சென்றேம். சென்று, அவ்வருவி அம் மலையின் மேற்பகுதியில் ஓடிவரும் இடத்திற் போய் முழுகுதற்கு விழைந்து, சண்பகாடவி எனப் பெயர் வாய்ந்த இடத்திற்குச் சென்றேம். அங்கே அருவிநீர் மேல் உச்சியிலிருந்து வழியும் மலைப் பகுதிக்குப் பக்கத்தேயுள்ள குகையொன்றில் துறவி யொருவர் இருந்தார். அவர்க்கு முப்பதாண்டு இருக் கும்; காவியாடை பூண்ட அழகிய தோற்றத்தினர். அவர் எம்மைக் கண்டதும் நகைமுகங் காட்டி வரவேற்றுத், தாம் இருந்த அக் குகைக்குள் அழைத் தனர். அக் குகை வாயில் மரக்கதவு இட்டுச் சமைக் கப்பட்டிருந்தது. அக் கதவிற் சிறு தொளைகள் அமைக்கப்பட்டிருந்தன. இரவில் அக் கதவைச் சாத்திக்கொண்டு அதன் தொளைகளின் ஊடே வெளியே நிகழும் விலங்குகளின் பூசலைத் தாம் பார்ப்ப துண்டென்று கூறினர். அக் குகையில் ஒருவர் செவ்வனே அமரவும் படுக்கவும் வேண்டிய அளவுக்கு இடம் இருந்தது. இத்தகைய குகைகளும் மரப் பொந்துகளும் இந் நிலவுலகம் எங்கணும் இயற்கை யாகவே அமைந்திருத்தலாற் பண்டைக்கால மக்கள், அஞ்ஞான்றிருந்த பெரிய கொடிய வேங்கைப்புலிகட்

கும், பேரியானைகட்கும், வலிய மலைப்பாம்புகட்கும் வன்பெரு முதலைகட்குந் தப்பிப் பிழைத்தனர். அவை களுக்கஞ்சித் தம்மைக் காத்துக்கொள்ள வழி தேடும் முயற்சியினாற்றான் ஆராய்ச்சியறிவு விளங்க, ஐயறி வுடைய மாக்களாய் முதலில் விலங்கினங்களை யொத் திருந்த மாந்தர் பின் நாளேற நாளேற ஆராய்ச்சியறிவு மிகுந்து, அதனால் ஆறறிவுடைய மக்களாயினர். இதனா லன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார், ஆராய்ச்சி யறிவையே அறிவெனக் கருதி,

> "அறிவுடையார் எல்லாம் உடையர் அறிவிலார்
> என்னுடைய ரேனும் இலர்"

என்று அருளிச்செய்தார்.

அஃதொக்கும்; பண்டைமக்கள் மரங்களின் மேலேறிப் பரண் அமைத்து வாழ்ந்தபோதும், குகை களுள் நுழைந்து ஆண்டு வாழ்ந்தபோதும், மரம் மீது ஏறக்கூடிய பாம்புகட்குங் கரடி, மந்தி முதலான விலங்குகட்கும் எங்ஙனந் தப்பிப் பிழைத்தனர்? எனின்; தாமிருந்த அவ்வுறையுளைச் சுற்றி மூங்கில் முட்களால் வேலிகள் அமைத்தும், அக் குகைவாயில் களைக் கருங்கற் பாறைகளால் அடைத்தும் அம் மற விலங்குகளும் மலைப்பாம்புகளுந் தம்மை அணுகாமற் காத்துக்கொண்டனர். இவ்வளவோடு அப் பண்டை மக்களின் தொல்லை ஒழிந்தபாடில்லை.

தமக்குந் தம்மைச் சார்ந்த தாயதந்தையா உடன் பிறந்தார் மனைவி மக்கள் முதலாயினார்க்கும் அடுத் தடுத்து நிகழும் பசியினையும் நாவறட்சியினையும் ஒழித்தற்கு அவர்கள் அங்ஙனந் தாம் மரம் மீதிருந்த

பரண்களையும், மலைப்பிளவுகளின் ஊடிருந்த குகை களையும் பகற்காலங்களில் விட்டு வெளியே வரவேண்டி யவரானார்கள். இங்ஙனமாகப் பண்டை மக்கள் பெரிதும் அல்லற்பட்டு வாழ்ந்த காலம் பல்லாயிர ஆண்டுகளாகும்.

அக் காலங்களில் அவர்கள் நெருப்பை உண்டாக் கவோ, உணவுப்பண்டங்களை நெருப்பிலிட்டு வேவு வித்துக்கொள்ளவோ வழி தெரியாதிருந்தார்கள். பின்னர் நாட் செல்லச் செல்ல மூங்கிற் புதர்களில் மூங்கில்கள் ஒன்றோடொன்று உரைசித் தீப்பற்றி எரிதலையும், அத் தீயில் வெந்த மூங்கில் அரிசி, முன்னே தாம் பச்சையாய்த் தின்ற அவ் வரிசியை விடச் சுவை மிகுதியும் உடையதாய் இருத்தலையுங் கண்டு கொண்டார்கள். அதிலிருந்து, மரக்கட்டைகளை ஒன்றோடொன்று தேய்த்துக் கடைந்து தீயையுண் டாக்கவுங் கற்றறிந்தார்கள். தீயை யுண்டாக்கத் தெரிந்த பின்னர்த்தான் மக்கள் வாழ்க்கை பலவகை யில் நலம் பல பெறுவதாயிற்று. அவ்வாறு தீயை யுண்டாக்குதற்குப் பயன்படுத்தப்பட்ட கோல் 'தீக் கடைகோல்' எனவும் பெயர் பெறலாயிற்று.

அப் பண்டை நாளில் இருந்த விலங்குகள் யானை யினும் பன்மடங்கு பெரியனவாய்ப்; பனைமரத்தினும் உயரம் உடையனவாய் இருந்தமையால், முற்கால மக்கள், மிக உயரமான மரங்களின் உச்சியிலும், பருத்த விலங்குகள் நுழைதற்கு இயலாத குறுகிய வாயிலமைந்த குகைகளிலும் பெருந் திகிலோடு ஒடுங்கிக் கிடந்தனர்; அவர்கள் தாமிருந்த அவ் விருக் கைகளை விட்டுக் கீழ் இறங்கியும் வெளியே இயங்கியும்

உணவுப்பொருள்களைத் தேடிப் பெற இயலாமற் பட்டினியும் பசியுமாய் இருந்த நாட்களும் பல. மிகப் பெரிய இடையூறுகளாற் சூழப்பட்டிருந்தமையால், அவ் விடையூறுகளைக் கடந்து தமது வாழ்க்கையை நடத்துதற்கு எவ்வளவோ சூழ்ச்சி செய்யலானார்கள். அவ் விலங்குகளை அணுகிப் போராடிக் கொல்லுதல் ஆகாமையால், தொலைவிலிருந்தபடியே அவற்றைக் கல்லால் அடித்துத் துரத்துதற்கும் மாய்த்தற்குங் 'கவண்' என்னுங் கருவியைக் கண்டு கையாண்டனர். அதனாலும் அவைகளை மாய்த்தல் இயலாமை காணக் காண, மூங்கிலை வளைத்து அதன் முனைகளில் நாண் பூட்டிக், கூரிய முனையுள்ள கோல்களை இணைத்து எய்து அவற்றைத் துரத்தியும் மாய்த்தும் வந்தார்கள். அவர்கள் அவ்வாறு பயன்படுத்தி வந்த வளைந்த மூங்கிலுங் கோலுமே பின்னர் வில்லுங் கணையும் ஆயின. இங்ஙனமாகத் துரத்தப்பட்டும், மாய்க்கப்பட்டும் அக் கொடுங் கொலை விலங்குகள் தொலைந்த பிறகுதான், மரமேற் பரண்களிலும் வாய்குறுகிய குகைகளிலும் வருந்திக் கிடந்த பண்டை மக்கள் அச்சந் தீர்ந்து, மலைமீதும் மலைக்கீழ்க் கானகங்களிலும் மனந் துணிந்து இயங்கத் தலைப்பட்டனர். காய்கனி கிழங்குகளை யன்றித், தினை சோளம் கம்பு கேழ்வரகு முதலான பலவகைக் கூலங்களையும் விளைக்கப் படிப்படியே தெரிந்துகொண்டார்கள். இங்ஙனமாக மலைமீதுறைந்த குறிஞ்சித்திணை வாழ்க்கையிலிருந்தவரையில் மக்கள் நாகரிகம் அற்றவர்களாகவே இருக்கலாயினர்.

நெடுங்காலத்தின் பின்னர் மலைக்கீழ் இறங்கி, அடிநிலத்திலுள்ள கானக வாழ்க்கையைக் கைப்பற்றிய

போது, அறிவு சிறிது சிறிதாய்ப் பெருகக், கான்யாறு களின் கரைமருங்கே குடியேறி, உணவுக்கு முன்போல் வறுமைப்படாமல், நெல்லு, புல்லரிசி, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை, முதலான கூலப்பயிர்களை விளைத்து, அவற்றின் பயன்களை அருந்தி உணவுக்குப்பட்ட சிறுமை நீங்கப் பெற்றனர். இதனாலும், ஆடு மாடு முதலான சிறந்த உயிர்களை மேய்த்து, அவற்றாற் றாம் அடைந்த பால் தயிர் வெண்ணெய் முதலான கொழும் பொருள்களை அருந்துதலாலும் உடம்பு செழுமையாய் வளர வளர, அதனால் உயிரும் அறிவுந் தெளிவு பெற்று, எதனையும் ஆய்ந்தோய்ந்து பார்த்து மேலும் மேலுந் தமது வாழ்க்கையைத் திருத்தமாய் நடத்துதலிற் கருத்தூன்றி வந்தனர். இவ்வளவிய குடும்ப வாழ்க்கையிற் புதல்வர் புதல்வியர் மிகுதியாய்ப் பிறக்கப் பிறக்க மக்களின் தொகையும் மிகுதியாய்ப் பெருகி வரலாயிற்று. உணவுக்கு மிடிப்படாமற் செழுமையாய் வாழுங் குடும்பங்களிற் பிள்ளைகளின் பிறப்பும் பெருகி வருதலை ஆராய்ச்சிவல்ல மேனாட்டாசிரியர்* கணக்குப் பண்ணி நூலெழுதி யிருக்கின்றனர். ஆகவே, கானக வாழ்க்கையை மேற்கொண்ட பழங்கால மாந்தர் நாளேற நாளேறத் தொகையிற் பெருகி, அங்ஙனம் பெருகிய பின் உணவுக்கும் உறையுளுக்குங் கானகம் ஏற்றதாகாமை கண்டு, கானகத்தின் பல பெரும் பகுதிகளை அழித்து உறையுளுக்குக் குடியிருப்புகளும், நெற்பயிர் விளைத்தற்கு நன்செய்களும், வரகு சோளம்

* Malthus.

துவரை முதலான கூலப்பயிர்களை விளைத்தற்குப் புன்செய்களும் பண்படுத்தினர். இவ்வாறு காட்டை யழித்து நாடாக்கும் உழைப்புப் பழங்காலத்தே மிகுதியாய் ஆங்காங்கு நடைபெற்று வந்தமை,

> "காடுகொன்று நாடாக்கிக்
> குளந்தொட்டு வளம் பெருக்கி"

என்னும் பட்டினப்பாலை அடிகளாலுந் தெற்றென விளங்குதல் காண்க.

இங்ஙனமாக நெற்பயிரும், ஏனைப் புன்செய்ப் பயிர்களும் எங்கும் நிறைய விளைக்கலான, மருதநில வாழ்க்கை ஓங்க ஓங்க மக்களுக்குச் செல்வம் பெருக லாயிற்று. அதனாற், சிறிய பெரிய திருக்கோயில் களுங், தாம் இருந்து நன்கு உயிர்வாழச் சிறிய பெரிய இல்லங்களும் அவர்கள் ஆங்காங்கு அமைத்துக் கொண்டனர்.

இவ்வாறு வாழ்க்கை வளம்பெற்றபின், தாம் விளைத்த உணவுப்பண்டங்கள், தாமுந் தங் கிளைஞரும் ஆரத்துய்த்த பின்னுங் குறையாமல் நிறைந்து கிடந் தமையால், அவற்றை இன்றியமையாது வேண்டிய பிறநாட்டிலுள்ளார்க்கு விலைசெய்து, அப் பிறநாட்டார் கொணர்ந்த பண்டங்களைத் தாம் விலைகொடுத்துப் பெற்றுத் தம் நாட்டவர்க்கு மிகுதிப்பட விற்று ஊதியம் பெற்று வந்தனர்.

வாழ்க்கை வளம்பெற்று மனவமைதியோடிருக்க லானபின், இயற்கையே அறிவு விளங்கப்பெற்ற சிலர் தாம் வழங்கும் மொழியை எழுத்திலிட்டு எழுதி அண்மையிலிருப்பார்க்குத் தம் கருத்துக்களை எளிதில்

அறிவிப்பதுபோற், செய்மையிலிருப்பார்க்கும் அறிவிக்க வழிகண்டனர். அது முதல் தங் கருத்துக்களை ஒரு கோவைப்படுத்திப் பனையோலைகளிலும் மரப்பட்டைகளிலும் எழுதிவைக்கத் தலைப்பட்டனர். இன்றுங்கூடக் காகிதங் கிடைப்பதில்லாத பட்டிக்காட்டிலிருப்பவர்கள் கணக்கெழுதவும், திருமணம் முதலான சடங்குகளைத் தஞ் சுற்றத்தார்க்குத் தெரிவிக்கவும், பள்ளிக்கூடச் சிறார்க்குக் கல்வி கற்பிக்கவும், மற்றும் பல முயற்சிகள் செய்தற்கும் பனையோலைகளையே பயன்படுத்தி வருகின்றனர். இஞ்ஞான்று நமக்குக் கிடைக்கும் பழங்காலத்து நூல்களெல்லாம் ஓலைச்சுவடிகளாகவே யிருத்தலைக் கண்காட்சிச் சாலைகளில் நேரே சென்று இன்றுங் காணலாம் இவ்வாறாக மக்கள் வாழ்க்கை தொடர்ந்து நடைபெற்று வரல் காண்க.

இளைஞர்க்கான இன்றமிழ் முற்றும்

பரமசிவ நிலையம்,
127, லாயிட்ஸ் ரோட்,
சென்னை-6.

## சிறுவர்க்கான செந்தமிழ்

பல்லாவரம் மறைத்திரு மறைமலையடிகளார் இனிய எளிய திருத்தமான தனித்தமிழில் எழுதிய சிறந்த கட்டுரை நூல். பள்ளிக்கூடங்களிற் பயிலுஞ் சிறார்க்குத் தனித்தமிழில் எழுதப்பட்ட பாடநூல் இல்லாப் பெருங்குறையை நீக்கும் பொருட்டு இஃது எழுதப்பட்டது. சிறார்க்குஞ் சிறாரினுந் தாழ்ந்த அறிவுநிலையில் நிற்கும் தமிழ்ப் பொதுமக்கட்குந் தனித்தமிழறிவையும் உலக இயற்கை மக்கள் இயற்கையிற் காணப்படும் அரும்பொருள் உண்மைகள் புதுமைகளைப் பற்றிய மெய்யறிவையுந் தருவது இந்நூல்.

பெற்றோரும் பள்ளிக்கூட ஆசிரியரும் தம் பிள்ளைகள் இதனைக் கட்டாயம் வாங்கிக் கற்கும்படி செய்து பயன் அளிப்பதோடு, தாமும் இதனைக கற்றுப் பயன் பெறுதல்வேண்டும்.

| | ரு. | அ. |
|---|---|---|
| அட்டைக்கட்டு | 2 | 0 |
| கலிக்கா கட்டு | 2 | 8 |

## கழகவழி வெளிவந்த அடிகளார் நூல்கள்

சாகுந்தல நாடகம்—விளக்க உரைக் குறிப்புகளுடன் 4-ஆம் பதிப்பு

| | | |
|---|---|---|
| அட்டைக்கட்டு | 3 | 4 |
| கலிக்கா கட்டு | 4 | 0 |

மரணத்தின்பின் மனிதர்நிலை (Life after Death)

| | | |
|---|---|---|
| அட்டைக்கட்டு | 2 | 8 |
| கலிக்கா கட்டு | 3 | 4 |

முற்காலப் பிற்காலத் தமிழ்ப்புலவோர்

| | | |
|---|---|---|
| அட்டைக்கட்டு | 2 | 0 |
| கலிக்கா கட்டு | 2 | 8 |

## அடிகளாரால் அச்சிடப்பெற்றவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| தமிழர் மதம்—சிறந்த ஆராய்ச்சி நூல் | 5 | 0 |
| தொலைவிலுணர்தல்—(Telepathy) | 4 | 0 |
| சைவசித்தாந்த ஞானபோதம் | 4 | 0 |
| குமுதவல்லி நாக நாட்டரசி (2 பாகம்) ரெயினல்ட்ஸ் லீலாவின் மொழிபெயர்ப்பு | 4 | 0 |
| திருவொற்றி முருகர் மும்மணிக்கோவை உரை | 5 | 0 |
| முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை | 2 | 0 |
| சிந்தனைக் கட்டுரைகள்—அடிகள் எழுதிய ஆறு கட்டுரைகளின் மொழிபெயர்ப்பு | 2 | 0 |
| சாகுந்தல நாடக ஆராய்ச்சி மட்டும் | 2 | 8 |
| சோமசுந்தரக் காஞ்சியாக்கம் | 1 | 8 |

## திரும்ப அச்சிடப்பெறுபவை

கோகிலாம்பாள் கடிதங்கள்
கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள்
  சைவமாகா?
யோக நித்திரை
மனித வசியம்
மக்கள் நூறுண்டு உயிர் வாழ்க்கை
பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும்
பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை
வேளாளர் நாகரிகம்
சாதிவித்தியாசமும் போலிச் சைவரும்
பொருந்தும் உணவும் பொருந்தா உணவும்
மாணிக்கவாசகர் வரலாறும் கால ஆராய்ச்சியும்


திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

தலைமை : திருநெல்வேலி

கிளை : 1/140, பிராட்வே, சென்னை-1.